

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

    

பரமகாருணிகரான பெரியஜீயரருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதித்

## தனியன்.

அல்லும்பகலுமநுபவிப்பார் தங்களுக்குச்
சொல்லும்பொருளும் தொகுத்துரைத்தான்—நல்ல
மணவாளமாமுனிவன் மாறன்மறைக்குத்
தணவா நூற்றந்தாதி தான். (க)

தனியன் பதவுரை.

| | |
|---|---|
| அல்லும்பகலும் | இரவும்பகலுமாகிய எப்பொழுதும் |
| சொல்லும்பொருளும் | (இனிய) சொற்களையும் பொருள்களையும் |
| அநுபவிப்பார் தங்களுக்கு | (நெஞ்சுகுளிரும்படி) அநுபவிக்க விரும்புமவர்களுக்காக, |
| நல்ல | நன்மைபொருந்திய |
| மணவாளமாமுனிவன் தான் | மணவாளமாமுனிகள் |
| மாறன் | நம்மாழ்வார் அருளிச்செய்த |
| மறைக்கு | தமிழ்வேதமான திருவாய்மொழிக்கு |

| | |
|---|---|
| தணவா | மிகவும் பொருந்தின |
| நூற்றந்தாதி | நூற்றந்தாதியை |
| தொகுத்து | ஸங்க்ரஹமாக |
| உரைத்தான் | அருளிச்செய்தார். |

("சொல்லும் பொருளும் தொகுத்து—சொல்லையும் பொருளையும் சுருக்கி என்றன்வயமாகவுமாம்.) (௧)

---

மன்னுபுகழ்சேர் மணவாளமாமுனிவன்
தன்னருளாலுட்பொருள்கள் தன்னுடனே—சொன்ன
திருவாய்மொழி நூற்றந்தாதியாம் தேனை
ஒருவாதருந்து நெஞ்சே உற்று. (௨)

| | |
|---|---|
| நெஞ்சே | மனமே! |
| மன்னு புகழ் சேர் | நித்யமான கீர்த்தியையுடையரான |
| மணவாளமாமுனிவன் | மணவாளமாமுனிகள் |
| தன் அருளால் | தம்முடைய க்ருபையினாலே |
| உள்பொருள்கள் தன்னுடனே | ஆழ்ந்த கருத்துகள் அமையும்படி |
| சொன்ன | அருளிச்செய்த |
| திருவாய்மொழி நூற்றந்தாதி ஆம் தேனை | திருவாய்மொழி நூற்றந்தாதியாகிற தேனை |
| உற்று | கிட்டி |
| ஒருவாது | இடைவிடாமல் |
| அருந்து | பானம்பண்ணு. (௨) |

தனியன் பதவுரை முற்றிற்று.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# திருவாய்மொழி நூற்றந்தாதிக்குப் பிள்ளைலோகஞ்ஜீயரருளிச்செய்த வ்யாக்யானம்.

## அவதாரிகை.

---

ஸ்ரிய:பதியான ஸர்வேஸ்வரன் (க) "திருமாலாலருளப்பட்ட சடகோபன்" என்னும்படி ஆழ்வாருக்கு *மயர்வற மதிநலமருள, இப்படி நிர்ஹேதுககடாக்ஷபாத்ரபூ(ஹூ)தரானவாழ்வாரும் (உ) "அருள் கொண்டாயிரமின்றமிழ்ப்பாடினான்" என்னும்படி திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களை *பண்ணார் பாடலாம்படி பாடியருளி, அநந்தரம் தம்முடைய நிரவதிகக்ருபையாலே மதுரகவிப்ரப்ருதி ஸஜ்ஜநங்களுக்கு (ங) "அன்னாதிமேலிட்டறிவித்தேனாழ் பொருளைச் சிந்தாமற் கொண்மினீர்தேர்ந்து" என்னும்படி உபதேசித்து, அவ்வளவுமன்றிக்கே * ஊரும்நாடுமுலகமுந் தம்மைப்போலேயாம்படி * செயல் நன்றாகத் திருத்திப் பணிகொண்டருளி நடத்திப்போந்த வநந்தரம் நெடுங்காலம் சென்றவாறே இத்திவ்ய ப்ரபந்தங்கள் ஸங்குசிதமாய்ப்போனபடியைத் திருவுள்ளம்பற்றி, "இனிக்காவாரார்" என்றுபார்த்து, நாதமுனிகளை (ச) "அருள்பெற்ற நாதமுனி" என்னும்படி தம்முடைய கடாக்ஷ விசேஷத்தாலே கடாக்ஷித்தருளி, இவர்க்கு திவ்யஜ்ஞாநத்தையுமுண்டாக்கி, அந்த திவ்ய சக்ஷுர்மூலமாகவே ஸாஜ்ஞகதி புரஸ்ஸரமாக நீக்க ஸாஜ்ஞகதியான திருவாய்மொழிமுதலான திவ்யப்ரபந்தங்களையும் ப்ரகாஸிப்பித்தருளினார்.

இப்படி ஆழ்வாருடைய திவ்யகடாக்ஷத்துக்கு விஷயபூதரான நாதமுனிகளும் (ரு) "அழித்தனுற்றவன்றிசைகளாக்கினான்" என்னும்படி இத்தமிழ் மறைகளை இயலிசையாக்கி நடத்தியும், அதுக்குமேலே குருகைக்காவலப்பன், உய்யக்கொண்டார் தொடக்கமான ஆஸ்திகரைக் குறித்து, ப்ரபத்யர்த்த ஸஹிதமாக விதத்தைப்ரஸாதிக்க, அவர்களுடையப்படியே அவர் திருப்பேரனார்க்கு மணக்கால் நம்பி

---

(க) தி-வாய்-அ-அ-கக (உ) கண்ணி-அ (ங) சு-திருவ-க (ச) உபதேச-ஙசு (ரு)

முகேந ப்ரஸாதிப்பிக்க, பின்பு (௧) "ஆளவந்தாரைவளர்த்தோன்" என்னும்படி அவரும் அத்தை வர்த்தி(யி)ப்பிக்க, அவர்கடாக்ஷ லக்ஷ்யபூதராய் *மாறனடிபணிந்துய்ந்த எம்பெருமானாரும், (௨) "வளர்த்தவிதத்தாய்" என்னும்படி வர்த்தி(யி)ப்பித்துக்கொண்டுபோர, பின்பு, * ராமாநுஜபதாம்போஜ ஸமாச்ரயண ஸாலிகளான கோவிந்தகூராதிப பட்டார்ய நிகமாந்தமுநிபர்யந்தமாய் உபதேசபரம்பரா ஸங்க்ருஹீதவ்யாக்யாநமாக நடந்து சென்றவிது, * திருமால் சீர்க்கடலுள் பொதிந்த† * இன்பத்திருவெள்ளம் மூழ்கின நம்மாழ்வாரவதாரமாய் நம்பிள்ளையென்று பேர்பெற்ற லோகாசார்யராலே லோகமெங்கும் வெள்ளமிடும்படி *தீர்த்தங்களாயிரமான திருவாய்மொழி விஸ்தவ்யாக்யாந ரூபமாய் ப்ரவஹிக்க, அது (௩) "ஆங்கவர் பால்" என்று தொடங்கி மேலோரளவும் விஸ்த்ருதமாயிற்று.

இப்படி தீர்க்க ஸாரணாகதியான திருவாய்மொழி நாதயாமுந யதிவராதிகளாலே வர்த்திப்பித்துக் கொண்டு போந்தமையைப் பற்ற "திருவருள்மால்" என்றும் "நாயம்வங்ஜநேந்த்ர-நாதம் பங்கஜநேத்ர" என்றும் இத்தனியன்களாலே வந்த விந்தஸம்ப்ரதாயக்ரமம் தேவாதிபரளவும் தர்ஸிப்பிக்கப்பட்டது. இப்படி பரம்பரயா நடந்து வந்த திருவாய்மொழியினீட்டின் ஸம்ப்ரதாய க்ரமந்தான் அதுக்கு தேசிகரான *தேவப்பெருமாள் கைக்கொண்டருளும் திருமலையாழ்வாரடியாக விசேஷஜ்ஞாவயத்ரயதீந்த்ரகாருண்யைகவிஷயே யோ:-காந்தோபயந்த்ருயமீந்த்ரகருணைகவிந்தோ:" (௪) என்னும்படி யானஜீயரிடத்திலே "மணவாளமாமுனியானவேரிதேங்கி" என்னும்படி தேங்கிற்று.

அத்தைப்பற்றவிறே "ஸ்ருயதே ஸ்ரீமஸௌம்ய ஜாமாத்ருமுநிஸம்ஜ்ஞ ஸங்க்ரஹோ யேஷாம் ஸஹிதா யோகீந்த்ரஸ்யாவதாரோ Zயம் திவ்யஸூக்தி: ஆர்யஸ்ரீஸைலநாதாதபிகதஸடஜித்ஸூக்தி பாஷ்யோமஹிம்நா யோகீந்த்ரஸ்யாவதாரோ Zயமிதி கதித:" (௫) என்றும், "திருவாய்மொழிப்பிள்ளை திருத்தாள் சேர்ந்த கந்துரைகொள் தமிழ்மறைக்கும் மறைவெள்ளத்துக்கு மோடமாயாரியர்களிட்ட நாலையுள்ளு

(௧) (௨) தனியன் (௩) உபதேச-௪௩ (௪) உரவர-ஸ்தோ (௫) பதிந்த்ரப்ர.
* ‡ (பா) திருவருள் மூழ்கின.

ணர்ந்து" (க) என்றும், "தமிழ்வேதமாகிய வேதவெள்ளக்கரை கண்டகோயில் மணவாளமாமுனி" (உ) என்றுஞ்சொன்னார்கள்.

இப்படி முப்பத்தாறுபிரப்பெருக்கரகையாலே "மதிளரங்கர் வண்புகழ்மேலான்ற தமிழ்மறைகள்" (ங) என்னும்படி தம்விஷயமான திருவாய்மொழியினர்த்தத்தை இவரிடத்திலேகேட்கவேணுமென்று, பெருமாள் தாமுந்திருவுள்ளமாய் "ஸ்ரீகாமூ... ஸந்த்வாகூடம் ஸடரிபுக்ராமர்த்ததத்வம் த்வதுக்தம்" என்னும்படியாழுங்காற்பட்டுக் கேட்டருளினாரிறே.

அதின் பின்புஸ்ரீபட்டநாதமுனி வாநமஹாத்ரியோகி துடக்கமான வாசார்யர்களாகிற கால்களாலே புறப்பட்டுக்காடுங்கரம்புமெங்குமேறிப்பாய்ந்துபலித்தது இப்படியாமோஸிதவ்யவிபாக(ஹாம) மற ஸ்வஸூக்தியாலே வஸீகரிக்கவல்லவைபவமானது "மணவாளமாமுனி தோற்றியபின்னல்லவோ தமிழ் வேதந்துலங்கியது" (ச) என்றும், "மணவாளமாமுனி வந்திலனேலாற்றிற்கரைத்த புளியல்லவோ தமிழாரணமே" (ரு) என்றும், அந்வய வ்யதிரேகங்களிரண்டாலும் சொல்லப்பட்டது. இவர்தாமும் "எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால் வந்தவுபதேசமார்க்கம்" (சு) என்றும் அத்தாலே "மாறன்கலையுணவாகப்பெற்றோம்" (எ) என்றும் "வகுளபூஷணவாகம்ருதாஸ்நம்" என்றும், தாமுமருளிச் செய்தார்.

ஏவம்விதமாஹாத்ம்யயுக்தரான விவர் தம்முடைய வநுபவத்துக்குப்போக்குவீடாகவும், திருவாய்மொழியினுடையதார்க்க்ரஹமான வர்த்தங்களையெல்லாருமறியும்படி ஸங்க்ரஹமாகவும் ஸவ்யக்தமாகவும், "சொல்லும்பொருளுந் தொகுத்துரைத்தான்" என்னும்படி ஸங்கதியாக விப்ப்ரபந்தத்திலே யருளிச்செய்கிறார். ஈட்டில் ஸங்கதியேயாயிற்று இவர்தாமிப்படி ஸங்க்ரஹித்தருளிச் செய்கிறது.

இப்ப்ரபந்தங்களுக்கு அநேகநிர்பந்தங்களுண்டாயிருப்பது அதெங்ஙனேயென்னில்; "வெண்பா" என்கிறசந்தஸ்ஸாகையும், இப்

(க) (உ) (ங) தி-வாய் தனியன் (ச) (ரு) ஸம்-கக
(சு) உபதேச-க (எ) ஆ-டுரு (அ)

படியான விப்பாட்டில் முற்பாதியிலே ஓரோ திருவாய்மொழியின் தாத்பர்யமும், ஸங்கதிக்க † ளடைவையும், பாட்டுக்களிலேதோறும் ஆழ்வார் திருநாமங்கள் வருகையும், அதில் தாத்பர்யங்களைத் தத்பர்யங்கமாகப் பேசுகையும், அந்தாதியாய் நடக்கையுமாகிற வைஷ்ட்ய சீர்ப்பந்தமுண்டாயிருக்குமாயிற்று. இது தான் * பாலோடமுதன்னவாயிரமான திருவாய்மொழியின் ஸாரமாகையாலே "திருவாய்மொழி நூற்றந்தாதியாந் தேனை" என்னும்படி ஸாரமான நிருபகமாய், ஆயிரத்தின் ஸங்க்ரஹமாகையாலே ஓரோ திருவாய்மொழியினர்த்தத்தை யோரோபாட்டாயருளிச்செய்கையாலே அதுதான் நூறுபாட்டாய், *அல்லும்பகலு மநுபவிப்பார்க்கு நித்யபோக்யமாய், அவ்வளவு மன்றிக்கே உடையவர் நூற்றந்தாதியோபாதி ஆழ்வார் நூற்றந்தாதியு முத்தேஶ்யமாகையாலே ஆழ்வார் திருவடிகளிலே ப்ரேமமுடையார்க்கு அநவரதாநுஸந்தேயமுமாயிருப்பதொன்றாயிற்று.

இதில் சரமபர்வமான வாழ்வார் திருவடிகளையிறே ப்ராப்ய ப்ராபகங்களாக நிஷ்கர்ஷிக்கிறது; அதுதான் * பராங்குஶபாத பக்தராய் * சடகோபர்தே மலர்த்தாட்கேய்ந்தினிய பாதுகமாமெங் கையிராமாநுசனளவும் வந்திருக்குமிறே. ஆழ்வார்தாம் திவ்ய மஹிஷிகளுடையவும், திவ்யஸூரிகளுடையவும், முக்தருடையவும் முமுக்ஷுக்களுடையவும் படிகளையுடையராயிருக்கையாலே உடையவரும் இவர்விஷயத்திலேயாயிற்றீடுபட்டிருப்பது.

திருவாய்மொழி நூற்றந்தாதி

வ்யாக்யாநாவதாரிகை முற்றிற்று.



†(பா) ளடைவையும்









ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பரமகாருணிகரான பெரியஜீயரருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி.

மூ.—உயர்வேபரன்படியை யுள்ளதெல்லாந்தான்கண்டு
உயர்வேதநேர்கொண்டுரைத்து-மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்குமாறன்சொல்
வேராகவே விளையும்வீடு. (க)

பதவுரை.

| | |
|---|---|
| உயர்வு | உயர்த்தியையுடைய |
| பரன் | பரமபுருஷனுடைய [உம் |
| படியை உள்ளது எல்லாம் | ஸ்வபாவமாயிருப்பவற்றை யடங்க |
| தான் கண்டு | தாம் ஸாக்ஷாத்கரித்து |
| உயர்வேதம் நேர்கொண்டு | உயர்ந்தபிரமாணமாகியஸ்ருதியின் சாயையாலே |
| உரைத்து | அருளிச்செய்து |

| | |
|---|---|
| மயர்வு ஏதும் | துவிர் அஜ்ஞாநமும் |
| வாராமல் | உண்டாகாதபடியாக |
| மானிடரை | மநுஷ்யர்களை |
| வாழ்விக்கும் | உஜ்ஜீவிப்பித்தருளின |
| மாறன் | நம்மாழ்வாருடைய |
| சொல்வேர் ஆக | ஸ்ரீ ஸூக்தியடியாக |
| வீடுவிளையும் | மோக்ஷமுண்டாம். (க) |

அவ;—முதற்பாட்டு (உயர்வேபரன்படியித்யாதி) இதில் ஸர்வஸ்மாத்பரன் திருவடிகளிலே தொழுதெழப்பாராயென்றுபரத்வப்ரதிபாதகமாயிருக்கிற வாழ்வார் திவ்யஸூக்தியான வித்திருவாய்மொழியடியாகவே சேதநர்க்கு மோக்ஷலாப மென்னுமர்த்தத்தை அநுவதித்தருளிச்செய்கிறார்.

அதெங்ஙனே யென்னில்; ஸ்வரூபரூ பகுணவிபூதிகளால் பரிபூர்ணனாய் ஸர்வஸ்மாத்பரனாய் ஸ்ரியஃபதியாய் அபௌருஷேயமான ஸூத்ருடப்ரமாண ஸ்ருதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்டுள்ளவெம்பெருமானை பாஹ்யகுத்ருஷ்டிகளால் அவிசால்யமாம்படி அவன் ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து அநுபவித்த படியே ஸவிபூதிகனான வெம்பெருமானைப்பேசி, ஏவம்விதனானவன் திருவடிகளிலே (க) "ஸ்வரூபேண ... ஸ்வாமிநஃ - குணைர்தாஸ்யமுபாகதஃ" என்னும்படி அடிமைசெய்துஉஜ்ஜீவியென்று தம் திருவுள்ளத்தை அநுஶாஸித்தருளிச் செய்த முதற்றிருவாய்மொழியினர்த்தத்தை யநுவதித்து, * உயர்வேபரன்படியாலே யருளிச்செய்கிறானென்கை.

வ்யா;—(உயர்வேபரன்படியை யுள்ளதெல்லாந்தான்கண்டு) பரத்வத்தில் பரத்வமாயிற்று இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கப்படுகிறது. "ஆமவையாயவையாய் நின்றவவர்" என்றும், "முழுதுண்டபரபரன்" என்றும் "அரிபொறையாய் நின்றபரனடிமேல்" என்றும்,பரத்வத்தையாயிற்று இதிற்சொல்லுகிறது,‡ உயர்வேபரன்படியாவது (உ)"தேஜஸாம்ராஶிமூர்ஜிதம் - தமீஶ்வராணாம்

(க) ரா-கி-சு-கஉ (உ) ப்ரவேதா-ச.

‡ இங்கு ஸமீசீநபாடம்கோஶாந்தரத்தில் காண்க-

பரமம்மஹேஶ்வரம்" என்றும் "வராத்வராணாம் வரத:-பர: பராணாம் பரம:" (௧) என்றுஞ்சொல்லுகிற ஸர்வஸ்மாத்பரத்வத்தையாயிற்று, "உயர்வற உயர்நலம்" என்றருளிச்செய்தது; அத்தையடி பொற்றியாயிற்று இவரிப்படி யருளிச் செய்கிறது. "உயர்வே" என்கிற அவதா(ர)ணத்தாலே அல்லாதாருயர்த்திகளைப்போலே தாழ்கையன்றிக்கே மேன்மேலென என்று முயர்த்தியேயாயிருக்கை (௨) "நெதிநெதி-நேதிநேதி" (௩) "நெதாத்ருஶோநாதிஶ-நோத்யமதோ நதிஶோரதே" (௪) "நலத்தாலுயர்ந்துயர்ந்தப்பாலவன்" (௫) "அயர்வறுமமரர்களதிபதி" (௬) "தேவர்க்குந்தேவாவோ" என்னக்கடவதிறே. அன்றிக்கே, உயர்வென்று-உச்ச்ராயமாய், "ஏ" என்று-ஏய்கையாய் - பொருந்துதலாய் அது அல்லாதார்க்குப்போலே அநநுரூபமாயிருப்பதன்றிக்கே, ஏய்ப்பரனென்று - அநுரூபமாய்ப் பொருந்தியிருக்கிற பரனென்றுமாம். இப்படி உயர்த்தியாயிருக்கிற பரன்படியாவது - பரத்வைகாந்தமான ஸ்வபாவம்.

உள்ளதெல்லாமாவது - முதற்பாட்டில் கல்யாணகுணயோகமும் நித்யவிபூதியோகமும் விக்ரஹ வைலக்ஷண்யமும், இரண்டாம் பாட்டில், இவற்றுக்காஶ்ரயமான திவ்யாத்மஸ்வரூபம் சேதநாசேதந விலக்ஷணமென்றமதுவும், மூன்றாம் பாட்டில் நித்யவிபூதியோபாதி ததீயத்வாகாரத்தாலே அவனுக்கந்தரங்கமாய்த் தோற்றுகிற லீலாவிபூதி யோக(ம)மும், நாலாம்பாட்டில் அந்த லீலாவிபூதியினுடைய ஸ்வரூபம் அவனதீநமென்னுமதுவும், ஐந்தாம்பாட்டில் அதினுடைய ஸ்திதியும் அவனதீநமென்னுமதுவும், ஆறாம்பாட்டில் அதினுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியும் அவனதீநமென்னுமதுவும் ஏழாம்பாட்டில் ஜகத்துக்குமீஶ்வரனுக்குமுண்டானஶரீராத்மபாவமும், எட்டாம்பாட்டில்‡ (இதுக்கிசையாதருத்ருஷ்டி நிரஸநமும்) த்ரிமூர்த்தி ஸாம்யவாத நிரஸநமும், ஒன்பதாம் பாட்டில் ஶூந்யவாதி நிரஸநமும், பத்தாம்பாட்டில் வ்யாப்தி ஸௌகர்யமுமாகிற இவை. இப்படி, உள்ளதெல்லாவற்றையும், (தான் கண்டு) (௭) "திவ்யந்ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோகமைஶ்வரம்" -

---

(௧) வி பு-௧-௨-௧௨. (௨) ப்ரு-௪-௩- (௩) ஸ்தோ-ர- (௪) தி-வாய்-௧-௭-௨
(௫) தி-வாய்-௧-௧-௧. (௬) தி-வாய்-அ-௧-௫. (௭) கீ-௧௧-அ.
‡ குண்டலிதம் க்வாசித்கம்.

திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்யமே யோகமைஶ்வரம்" என்னும்படி * மயர்வறமதிநலமருளி, அவன் ப்ரஸாதத்தாலே காட்டக் கண்டு. இப்படி அவன் †காட்டினவை களெல்லாவற்றையும்,

(உயர்வேத நேர்கொண்டுரைத்து) அபௌருஷேயமாய் நித்ய நிர்தோஷமாய் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் போலே ஹேத்வந்தரங்களாலழிக்க வொண்ணாதாகையாலே ஸர்வப்ரமாணோத்க்ருஷ்டமான ஶ்ருதிச்சாயையை யருளிச்செய்து. அதாவது-(க) "[illegible] - ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந்" என்று கல்யாணகுண யோகத்தை " நலமுடையவன்," என்றும் (உ) "[illegible]-தாதுப்ரஸாதாந்மஹிமாநம்" என்கிற க்ருபாவைபவத்தை " அருளினன்" என்றும், (ங) "[illegible] - தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய:" என்கிற விக்ரஹவிபூதியோகத்தை "அயர்வறுமமரர்களதிபதியவனவன் துயரறுசுடரடி" என்றும், (க) "[illegible] - ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" (ச) "[illegible] - ஆநந்தமய:" (ரு) "[illegible] - ஆநந்தோ ப்ரஹ்ம" என்கிற திவ்யாத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை "உணர்முழுநலம்" என்றும், (சு) "[illegible] - பாதோஸ்ய விஶ்வா பூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி" என்று உபயவிபூதியையுஞ்சொல்லி, (உ) "[illegible] - பதிம் விஶ்வஸ்ய" என்றும்சொன்ன அந்த உபயவிபூதிநாதத்வத்தாலே லீலாவிபூதியும் அவனதென்னுமத்தை "இலனது" என்று தொடங்கி தர்ஶிப்பித்தார், (எ) "[illegible] - ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" (அ) "[illegible] - நேஹ நாநாஸ்தி கிஞ்சந" (கூ) "[illegible] - ஸ ஆத்மா அங்காந்யந்யா தேவதா:" என்கிற ஸர்வப்ரகாரித்வத்தையும் ஸர்வாந்தர்யாமித்வேந ஸர்வஸாமாநாதிகரண்யத்தையும் "நாமவன்" "அவரவர்" என்கிற பாட்டுக்களிலே ப்ரகாஶிப்பித்தும், "[illegible] - தநவிநா த்ருணாக்ரமபி நசலதி" (கo) "[illegible]

† (பா) வகைகள்- (க) தை-ஆ-க. (உ) தை-நா-கo. (ங) ஸுபா-சு. (ச) தை-ஆ ரு. (ரு) தை-ப்ரு-சு. (சு) புருஷஸூ. (எ) சாந்தோ-ங-கச. (அ) கட-உ-ச- (கூ) தை-ஸீ-ரு, (கo) கீ-கஅ-சுக.

தாநிபஞ்ராமேஷா நிஷாயயா ஈஶ்வரஸ்ஸர்வ பூதாநாம்ஹ்ருத்தே ஶேஷர்ஜுநதிஷ்டதி। ப்ராமயந்ஸர்வபூதாநியந்த்ராரூடாநிமாயயா'' என்ற ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் தததி (ஊயீ) நமென்னுமத்தை "நின்றனரிருந்தனர்" என்றும், (க) "யஸ்யாத்மாஶரீரம் யஸ்யப்ருதிவீஶரீரம்'' என்ற ஸர்வ ஶரீரத்வத்தையும், (உ) 'அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்யநாராயணஸ்ஸ்திதஃ'' என்ற ஸர்வ வ்யாப்தியையும் (ங) 'ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" என்ற ஶ்ரியஃபதித்வத்தையும் "திடவிசும்பு" என்கிறபாட்டாலே காட்டியும், (ச) "தமீஶ்வராணாம் பரமம்மஹேஶ்வரம் தந்தேவதாநாம் பரமஞ்சதைவதம்' (ரு) 'நாராயணபரம் ப்ரஹ்மதத்வந்நாராயணபரஃ' என்று ஸர்வஸ்மாத் பரத்வத்தை ஸாதித்து த்ரிமூர்த்திஸாம்யத்தை நிவர்த்திப்பித்தபடியை * சாரநிவருநிலையாலே ஸங்க்ஷேபமாக்கியும், வேதபாஹ்யகுத்ருஷ்டிமதநிரஸநத்தை "உளனெனில்" இத்யாத்யுக்தியாலே நிரஸித்தும், (சு) "அணோரணீயாந் - அணோரணீயாந்' என்கிற வ்யாப்திஸௌகர்யத்தை *பரந்ததண்பரவையிலேபேசியும், இப்படிவேதமார்க்காநு ஸாரியாயிற்று முதற்பாட்டுதுடங்கியருளிச்செய்தது; அத்தைப்பற்றவிறே (உயர்வேதநேர்கொண்டுரைத்து) என்றிவரருளிச்செய்கிறது, "சுடர்மிகுசுருதி" என்றிறேஶ்ருதிப்ரமாணத்தை யங்கீகரித்தருளிற்று, (எ) 'அஹந்தாப்ரஹ்மணஸ்தஸ்ய'' என்றுஸ்வரூபாந்தர்பாவமுண்டாகையாலேஸ்வரூபம் புக்கிடத்தே ஸ்வரூபநிரூபகபூததையான பிராட்டியுமுண்டாகக் குறையில்லை.

(மயர்வேதும் வாராமல்) மயர்வாவது - அஜ்ஞாநம், அது அத்யல்பமும் வாராதபடி. "மயர்வற" என்று தம்முடைய வஜ்ஞாநத்தைஸர்வேஶ்வரன் ஸவாஸநமாகப்போக்கினாப்போலே இவர்களுடை யஜ்ஞாநாநுகயாந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞாநங்களை ஸவாஸநமாகப்போக்கி இப்படி பரத்வவிஷயமான வஜ்ஞாநகந்த (மு) ம்

(க) ப்ரு-ரு-எ- (உ) தை-நா-கக- (ங) யஜு-ஆ.
(ச) ஶ்வேதா-சு. (ரு) தை-நா-கல.

மூ.—வீடுசெய்து மற்றெவையு மிக்கபுகழ் நாரணன்தாள்
நாடுநலத்தாலடைய நன்குரைக்கும்—நீடுபுகழ்
வண்குருகூர் மாறனிந்த மாநிலத்தோர் தாம்வாழப்
பண்புடனேபாடி யருள்பத்து. (உ)

---

வாராதபடி. (மானிடரைவாழ்விக்கும் மாறன்சொல்) பரோபதேசகர்ப்ப(ஸ)ஸ்வாநுபவப்ரகாசகமான ஸ்ரீஸூக்தியாலேமநுஷ்யஜந்மாக்களாயுள்ளவர்களை வாழ்விக்கும். வாழ்விக்கையாவது-பகவதநுபவைகபரராக்கி(க)“ஸஞ்சிந்த்ய-ஸந்ததமேகம்” என்னும்படி பண்ணுகை, தம்மைத்தொழுதெழப் பண்ணினாப்போலே. (மாறன்சொல் வேராகவே விளையும்வீடு) அதாவது-இப்படி ஸகல ஜீவோஜ்ஜீவந தத்பரரான வாழ்வார் திவ்யஸூக்தியடியாக பகவத்ஜ்ஞாநமுண்டாய், அதடியாக மோக்ஷலாபமென்றபடி; ஸூக்திமூலமாகவே முக்திபலிக்குமிறே. “பரனடிமேல் குருகூர்ச் சடகோபன் சொல நிரனிறையாயிரத்திவை பத்தும்வீடே” என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்தபடி. அன்றிக்கே, ஆழ்வார் திருநாமமடியாகவே மோக்ஷம் ஸித்திக்குமென்கிறாராகவுமாம. ததுக்தியாலேயாதல், தத்விஷயமான வுக்தியாலேயாதலாகலாமிறே. (உ) “தென்குருகூர் நகர்நம்பிக்கன்பனாய் மதுரகவிசொன்னசொல் நம்புவார்பதிவைகுந்தம் காண்மினே” என்னக்கடவதிறே. (க)

---

பதவுரை.

| | |
|---|---|
| நீடுபுகழ் | பெரும்புகழையுடையரும் |
| வண்குருகூர் மாறன் | வளப்பத்தையுடைய திருக்குருகூர்க்குத் தலைவருமான நம்மாழ்வார் |
| இந்தமாநிலத்தோர் தாம் | இப்பெரிய பூமியிலுள்ளவர்கள் |
| வாழ | உஜ்ஜீவிப்பதற்காக |
| பண்புடனே | கிருபையுடன் |
| பாடியருள் | பாடியருளின |

---

(க) ஸைத-ஆ-கூ-    (உ) கண்ணி-கக.

| | |
|---|---|
| பத்து | ("வீடுமின் முற்றவும்" என்கிற) பத்துப்பாட்டுக்களானவை |
| மற்று எவையும் | (பகவத்விஷயந்தவிர) மற்றெல்லாவற்றையும் |
| வீடுசெய்து | விட்டு |
| மிக்க புகழ் | மிகுந்த புகழையுடைய |
| நாரணன் | ஸ்ரீமந்நாராயணனுடைய |
| தாள் | திருவடிகளை |
| நாடு | உலகத்தாரெல்லாரும் |
| நலத்தால் அடைய | அபிநிவேசத்தால் ஆஶ்ரயிக்க |
| நன்கு உரைக்கும் | நன்றாக உபதேசிக்கும். (உ) |

அவ; — இரண்டாம்பாட்டு (வீடுசெய்து) இதில் தம்முடைய திருவுள்ளம்போலே அநுபவத்துக்குத் துணையாய்த் திருந்தும்படி ஸம்ஸாரிகளைக் குறித்துப் பரோபதேசம்பண்ணுகிறபாசுரத்தை‡ அநுபவித்து அருளிச்செய்கிறார். அது எங்ஙனே யென்னில்; கீழ் எம்பெருமானுடைய பரத்வத்தை யநுபவித்தவர் அநுபவஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே *வொயயநுவஹாழ - போதயந்த: பரஸ்பரம் பண்ணியல்லது தரிக்கமாட்டாதே துணைத்தேடமாயநுக் கீடானரை ஸம்ஸாரத்திலே காணாமையாலே அவர்களைத் திருத்தியாகிலும் சேர்த்துக்கொள்ளுவோமென்று பரோபதேஶ ப்ரவ்ருத்தராய், பகவத்வ்யதிரிக்த விஷயங்களின் தோஷபாஹுள்யத்தையும், பகவத்குணவைலக்ஷண்யத்தையுமுபதேசியாநின்றுகொண்டு அப்ராப்த விஷயங்களைவிட்டு ப்ராப்தவிஷயமான வெம்பெருமானை பஜியுங்கோளென்கிற *வீடுமின் முற்றத்தினர்த்தத்தை "வீடுசெய்து" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா; — (வீடுசெய்து மற்றெவையும்) "த்ஸாவத்ராம்ஹூஷாராம் - த்யக்த்வாபுத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச" (க) என்னும்படி †பரிக்ரஹங்களுடைய பரித்யஜித்து. வீடுசெய்து - விடுகையைச் செய்து.

---

(க) ரா-யு-கள-அசு- † (பா) பரித்யஜித்த பரிக்ரஹங்களுடையவும்

‡ அநுபவித்து.

(மற்றவையும்) பகவத்வ்யதிரிக்தமாயிருந்துள்ளவை யெல்லாவற்றையும் நினைக்கிறது. பஜநவிரோதிகளாய் அஹங்கார ஹேதுவாயுள்ள தடங்கலும் முமுக்ஷுவுக்கு த்யாஜ்யமிறே. "வீடுமின் முற்றவும்வீடுசெய்து" என்றதைப் பின்சென்றபடி. "மின்னின் நிலையில மன்னுயிராக்கைகளென்னுமிடத்திறையுன்னுமினீரே" "நீர் நுமதென்றிவைவேர் முதல்மாய்த்து" என்றும், 'அதுசெற்று" என்றும் "உள்ளமும் மூன்றையுமுள்ளிக்கெடுத்து" என்றும், இப்படி ஸதோஷமாயிருக்குமதெல்லாம் த்யாஜ்யமாய், அத்தால் ஸகுணமாயிருக்குமது உபாதேயமாயிறே யிருப்பது; அத்தைச் சொல்லுகிறது (மிக்க புகழ்நாரணன்றாளென்று). "ஏறிலவண்புகழ்நாரணன்" என்றதைப் பின்சென்றபடி. ஸம்ருத்தமான கல்யாணகுண ஸஹிதனாய் ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுடைய சரணங்களை. (நாடுநலத்தாலடையநன்குரைக்கும்) "வீடுசெய்மின்" 'இறையுன்னுமினீரே" என்று நாடாகவே ஆஶ்ரயிக்கும்படி இவருபதேசிக்கிறது. அத்தை நினைத்திறே "நாடுநலத்தாலடைய" என்கிறது. நலத்தாலடைகையாவது - "எல்லையிலன்னலம்புல்கு" "அவன் முற்றிலடங்கே," "ஈசனடங்கெழிலஃதென்றடங்குகவுள்ளே" 'இறையுள்ளிலொடுங்கே" 'ஒடுங்கவவன்கண்" என்று அங்கநா பரிஷ்வங்கம்போலே அபிநிவேசத்தாலே யாஶ்ரயிக்கும்படியை விதித்தபடியென்கை. இப்படி லோகத்திலுண்டான ஜநங்கள் பக்தியாலே பஜிக்கும்படி நன்றாக உபதேசித்தருளும். உபதேசத்துக்கு நன்மையாவது - நிர்ஹேதுகமாகவும், உபதேஶ்யார்த்தங்களில் ஸங்கோசமின்றிக்கே உபதேசிக்கையுமென்றபடி.

திருவாய்மொழிதோறும் திருநாமப் பாட்டுண்டாகையாலே அத்தையும் தத்தத்பலத்தோடே தலைக்கட்டாக வருளிச்செய்கிறார் (நீடுபுகழ் வண்குருகூர் மாறனிந்த மாநிலத்தோர் தாம் வாழப்பண்புடனேபாடி யருள்பத்தென்று). அதாவது-ஸம்ஸாரிகள் வைமுக்யம்பாராமல் பரோபதேசம் பண்ணுகையாலே நித்யமாய்நெடுகிப் போருகிற யஶஸ்ஸையுடையராய்; தர்ஶநீயமாயுதா(ஊா)ரமான திருநகரிக்கு நிர்வாஹகராய் வாழ்வாரென்னுதல்; அன்றிக்கே வண்மை-

மூ — பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும் பிறப்பால்
முத்திதருமாநிலத்தீர் மூண்டவன்பால்—பத்திசெயும்
என்றுரைத்த மாறன்றனின் சொல்லாற்போம் நெடுகச்
சென்றபிறப்பாமஞ்சிறை. (௩)

"வண்குருகூர் வண்சடகோபன்" என்னும்படி ஆழ்வார்க்கு, விசேஷணமாதல். இப்படியான தம்மௌதார்யத்தினாலே இந்த மஹாப்ருதிவியிலுண்டானவர்களெல்லாரும் பகவத் பக்தியாலே ஸத்தைபெற்றுவாழும்படி. (பண்புடனேபாடியருள்பத்து) பண்பு-ஸ்வபாவம். தம்முடைய க்ருபாஸ்வபாவத்தாலேயாதல், ஔதார்யஸ்வபாவத்தாலேயாதல், பரப்பறப்பாடி யருளினதுபத்துப்பாட்டாயிற்று. "சேர்த்தடத்தென்குருகூர்ச்சடகோபன் சொல் சீர்த்தொடையாயிரத்தோர்த்தவிப்பத்து" என்றதைப் பின்சென்றபடி. "பாட்டுக்கு க்ரியையும், பத்துக்குக் கருத்தும்" என்கையாலே பத்துப்பாட்டுக்கு முயிர்ப்பாட்டு ப்ரதாநமாயிருக்கும், அந்த ப்ரதாநப்பாட்டுக்குசேஷமாயிருக்கும் மற்றப்பாட்டுகளும்; இதுஇத்திருவாய்மொழி திவ்யப்ரபந்தத்துக்கெல்லாமுள்ளதொன்றிறே. "வீடுமினென்று - த்யாஜ்யோபாதேய ஶோதநோத்தீர்ண - த்யாஜ்யோபாதேய தோஷகுணபரித்யாக ஸமர்ப்பணக்ரமத்தை ஸாலம்பநமந்த்ரமாகவுபதேசித்து" என்று ஆசார்யஹ்ருதயத்திலே நாயனாருமருளிச்செய்தார். இத்தை பக்திபரமாக யோஜித்தார் பாஷ்யகாரர் பாஷ்யம் தலைக்கட்டியருளின பின்பு, ப்ரபத்திபரமாகயோஜித்த க்ரமத்தைப்பற்றவாயிற்று ஆசார்யர்களெல்லாருமப்படியே யோஜித்தார்கள்; இவருமப்படியேயருளிச்செய்தார். (௨)

பதவுரை.

| | |
|---|---|
| பரன் | ஸர்வேஶ்வரன். |
| பத்துஉடையோர்க்கு | பக்திமான்களுக்கு |
| என்றும் | எந்நாளும் |
| எளியன் ஆம் | ஸுலபனானவன் ; |
| பிறப்பால் | அவதாரத்தாலே |
| முத்திதரும் | மோக்ஷத்தைக்கொடுத்தருள்வன்; |

(ஆதலால்,)

| | |
|---|---|
| மாநிலத்தீர் | (இந்தப்)பெரியபூமியி லுள்ளவர்களே! |
| மூண்ட அன்பால் | படிந்த அன்பினாலே |
| பத்திசெயும்—என்று உரைத்த | (அவன்விஷயத்தில்) பக்திபண்ணுங்கள்" என்றருளிச்செய்த |
| மாறன் தன் | ஆழ்வாருடைய |
| இன்சொல்லால் | மதுரமான திருவாய்மொழியின் அநுஸந்தாநத்தினால் |
| நெடுகச்சென்ற பிறப்பாம் அம்சிறை | நீளமாகத் தொடர்ந்துவந்த பிறவியாகிய கடுஞ்சிறை |
| போம் | நீங்கும். (௩) |

அவ;—மூன்றும்பாட்டு (பத்துடையோர்க்கென்றும்) இதில். ஸௌலப்யத்தை யுபதேசித்த திவ்யஸூக்தியை யநுவதித்தருளிச் செய்கிறார், அதெங்ஙனேயென்னில்; 'ஸர்வஸ்மாத்பரனாய் அதீந்த்ரியனானவனை க்ஷுத்ரரான நாங்கள் கண்டு பஜிக்கும்படியெங்ஙனே யென்றுவெருவுகிறஸம்ஸாரிகளைக்குறித்து "பரனானவன்றானே அதீந்த்ரியமான வடிவைக்கண்ணுக்கிலக்காக்கிக்கொண்டு இதர ஸஜாதீயனாய்ஸம்ஸாரிகளுக்கும் பஜிக்கலாம்படித்தன்க்ருபையாலேராமக்ருஷ்ணாதிரூபேணவவதரித்து ஸுலபனானபின்புபஜிக்கத்தட்டில்லை என்கிற * பத்துடையடியவரிலர்த்தத்தை "பத்துடையோர்க்கு" என்றருளிச் செய்கிறாரென்கை.

வ்யா;— (பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும் பிறப்பால்) பத்துடையோர்க்கு - பக்திமான்களுக்கு. பத்துடையோர் - "விதியுடையோர்" என்னுமாபோலே. ஆஸாலேஸமாத்ரத்தையே போரப்பொலிய வெண்ணியிருக்கு மீஸ்வராபிப்ராயத்தாலே யருளிச்செய்கிறார்; "பத்துடையடியவர்" என்றாரிறே. ஏவம் விதபக்தியுக்தர்க்கு. (என்றும்) ஸர்வகாலத்திலும். (பரன்) "யாவையும் யாவரும் தானாமமைவுடை நாரணன்" "மலர்மகள் விரும்புமநமரும் பெறலடிகள்" என்று சொல்லப்படுகிற ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரன், (எளியனும்)(௧)"வாயுஸூநோ: - வாயுஸூநோ:" (௨) "ஐடி ளஷ - இமௌஸ்ம" இத்யாதிப்படியே யெளியனும். "பத்

(௧) ரா-யு-௯௯-௧௨௦. (௨) ரா-பா-௩௧-௪-

மூ.—அஞ்சிறையபுட்கள்தமையாழியானுக்கு நீர்
என்செயலைச்சொல்லுமெனவிரந்து—விஞ்ச
நலங்கிய மாறனிங்கே நாயகனைத்தேடி
மலங்கியதும்பத்திவளம். ... (௪)

---

தடைபடிவர்க்கெளியவன், மத்துறுகடை வெண்ணெய் களவினி லுரவிடையாப் புண்டுரலினோ டிணைந்திருந்தேங்கிய வெளிவெத்திறம்'' என்னும்படி கட்டவுமடிக்கவுமாம்படி யெளியனும் - ஸுலபனும். அது எத்தாலேயென்னில் (பிறப்பால்) அவதாரத்தாலே; 'பலபிறப்பாயொளிவரும்'' என்றத்தை நினைக்கிறது.

(முக்திதரும்) அவதரித்தவிடத்தே பக்ஷிக்கும் ரக்ஷஸ்ஸுக்கும் மோக்ஷத்தைக்கொடுக்கும். “வீடாந்தெளிதருநிலைமைய தொழிவிலன்'' என்றதைப்பின்சென்றபடி. (மாநிலத்தீர்) அவனவதரிக்கைக்கிடான விந்த மஹாப்ருதிவிலுள்ளவர்களே! (ஆண்டவன்பால்பத்திசெய்யும்) விதிப்ரேரிதராயன்றிக்கே அத்யந்தாபி(வி)நிவேஶயுக்தராய் பரத்வஸௌலப்யாதிகுணவிஶிஷ்டனானவவன் திருவடிகளிலே பக்தியைப் பண்ணுங்கோள். (என்றுரைத்த) என்றருளிச்செய்த. இத்தால் - “நன்றெனநலஞ்செய்வதவனிடை'' என்றத்தை யநுபாஷித்தபடி. (பத்திசெயுமென்றுரைத்த மாறன்றனின் சொல்லாற்போம்) அவதாரஸௌலப்யத்தை முன்னிட்டாஶ்ரயியுங்கோளென்று ஆழ்வார் ஶ்ராவ்யமாக வருளிச்செய்த வித்திருவாய்மொழியினநுஸந்தாநத்தாலே நிவ்ருத்தமாம். (நெடுகச்சென்றபிறப்பாமஞ்சிறை) அநாதிகாலம் தீர்க்கமாய்ப்போந்த ஜந்மமாகிக்ரூரமானசிறை. “அறுவர்தம்பிறவியஞ்சிறை'' என்றத்தை யநுவிதா(யா)நம் பண்ணினபடி. ‘ஜந்மகர்மசமே திவ்யமேவம் யோ வேத்தி தத்த்வத: - த்யக்த்வாதேஹம் புநர்ஜந்ம நைதிமாமேதி ஸோர்ஜுந'' (௧) என்னக்கடவதிறே. (௫)

---

பதவுரை.

| | |
|---|---|
| மாறன் | ஆழ்வார் |
| அம்சிறைய புட்கள்தமை | அழகிய சிறகுகளையுடைய (நாரை முதலிய) பறவைகளை (நோக்கி) |

---

(௧) கீ-௪-௯

| | |
|---|---|
| ஆழியானுக்கு | "சக்ராயுதத்தை யுடைய ஸர்வேஸ்வரனுக்கு |
| நீர் | நீங்கள் |
| என் செயலை | என்படியை |
| சொல்லும் என | தெரிவியுங்கள்" என்று |
| இரந்து | வேண்டிக்கொண்டு |
| விஞ்ச | மிகவும் |
| நலங்கியதும் | நலங்குலைந்ததும் |
| இங்கே | இவ்விபூதியிலே |
| நாயகனை | (தமக்கு)நாயகனான எம்பெருமானை |
| தேடி | தேடி |
| மலங்கியதும் | நிலைதளும்பியதும் |
| பத்திவளம் | (அவருடைய) பக்தியின் பெருமையாம். (ச) |

அவ;—நாலாம்பாட்டு. (அஞ்சிறையவித்யாதி) இதில், "அபராதஸஹத்வத்தை யறிவியுங்கோள்" என்றுதூதப்ரேஷணம்பண்ணுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்.

அதெங்ஙனேயென்னில்; அவதாரஸௌலப்யத்தை யுபதேசித்து, "அவனையாஸ்ரயியுங்கோள்" என்று பிறர்க்கு உபதேசித்தவிடத்தில் அவர்கள்அதில் விமுகராயிருக்கையாலே அவர்களைவிட்டு, குணஸாம்யத்தாலே க்ருஷ்ணாவதாரத்தோடுபோலியான த்ரிவிக்ரமாவதாரத்தை யநுஸந்தித்து,தச்சரணங்களை த்ரிவிதகரணத்தாலுமநுபவிக்கப் பாரித்தவிடத்தில் அது முற்காலத்திலேயாய், தாம் பிற்பாடராகையாலே பாரித்தபடியநுபவிக்கப்பெறாமல் கலங்கினதசையை *மதியினால் குறண்மாணாயுலகிரந்தகள்வரான வத்தலைக்கறிவிக்கவேணுமென்று க (வ) டகரையர்த்தித்துச் சொல்லுகிற க்ரமத்தை, கலந்து பிரிந்தாற்றாளாய்த்தலைமகள் "என்னபராதத்தைப்பார்த்துப் பிரிந்துபோனவர்க்கு

"கிம்கோபமூலம் மநுஜேந்த்ரபுத்ர - கிங்கோபமூலம் மநுஜேந்த்ரபுத்ர" (க) என்னும்படி தம்மபராதஸஹத்வத்தையுமொருகால் பார்க்கக் கடவதன்றோவென்று சொல்லுங்கோளென்று தன்னுத்யாநத்திலே வர்த்திக்கிற பக்ஷிகளைத் தன் ப்ராணரக்ஷணத்துக் குறுப்பாகத் தூதுவிடுகிற பேச்சாலே சொல்லச்சொல்லுகிற *அஞ்சிறையமடநாரையிலர்த்தத்தை "அஞ்சிறையபுட்கள்தமை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(அஞ்சிறையபுட்கள்தமை) விலக்ஷணமான பக்ஷங்களையுடையபக்ஷிகளை. "அஞ்சிறையமடநாராய்" என்றிறேயருளிச்செய்தது. புட்களென்றது-"இனக்குயில்காள்" "மென்னடையவன்னங்காள்" "நன்னீலமகன்றில்காள்" "வண்சிறுகுருகே" "ஆழிவரிவண்டே" "இளங்கிளியே" "சிறுபூவாய்" என்றிப்படியருளிச் செய்தவற்றை. (ஆழியானுக்குநீர்) "கடலாழிநீர்தோற்றியதனுள்ளேகண்வளருமடலாழியம்மானை" என்றத்தைக்கடாக்ஷித்தபடி. முதல்தூதுக்குவிஷயம் வ்யூஹமிறே. (நீர்) வ்யூஹத்தையும் ஸே(பே)வித்துக்காணவல்ல நீங்கள். (என்செயலைச் சொல்லுமெனவிரந்து) என்செயலைதர்ஸிப்பியுங்கோளென்றர்த்தித்து.

என்செயலாவது - "மதியெல்லா முள்கலங்கிமயங்குமால்" என்றும், "என்னீர்மை" என்றும் "நன்னீர்மையினியவர்கண்தங்காது" என்றும் "மல்குநீர்க்கண்ணேற்கு" என்றும் "அவராவிதுவராமுன்" என்றும் "சாயலொடுமணிமாமை தளர்ந்தேன்" என்றும் தன்னுற்றாமையை ஆவிஷ்கரித்தமை; "என்பிழையே நினைந்தருளியருளாத திருமாலார்க்கென் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கென்றொருவாய்ச்சொல்" என்று அவனபராத ஸஹத்வத்தைஆவிஷ்கரித்ததும் இதிலேஸூசிதம். இப்படியாற்றாமையை யாவிஷ்கரித்து.

(விஞ்சநலங்கியதும்) மிகவும் நலங்குலைந்ததும். (மாறனிங்கே நாயகனைத்தேடி மலங்கியதும் பத்திவளம்) ஆழ்வாரிங்கே-இவ்விபூதியிலே கூப்பிடு கேட்குமிடமான கடலிலே *அடலாழியம்மானை நாயகனைத்தேடி, (உ) "பாலாழி நீகிடக்கும் பண்பையாங்கேட்டேயும்

(க) ரா-கி-ருஅ-ச௦.    (உ) பெரியதிருவ-உச.

மூ.—வளமிக்கமால் பெருமைமன்னுயிரின் தன்மை
உளமுற்றங்கூடுருவவோர்ந்து - தளர்வுற்று
நீங்கநினைமாறனை மால் நீடிலகுசீலத்தால்
பாங்குடனேசேர்த்தான் பரிந்து. (ரு)

காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்று மலங்கியதும், பக்தயதிஶயம்- * மதியெல்லாமுள் கலங்கினபக்திப்ரபாவம். வளம்- பெருமையும், ஸம்பத்தும். நலங்குதல் - நலக்கேடு. மலங்குதல்— திண்டாட்டம். (௪)

பதவுரை.

| | |
|---|---|
| வளம்மிக்க | செல்வத்தால்மிகுந்த |
| மால் | எம்பெருமானுடைய |
| பெருமை | (நித்யஸூரி நிர்வாஹகத்வமாகிற) பெருமையும் |
| மன்னுயிரின் தன்மை | ஆத்மாவின் சிறுமையும் |
| உளம் உற்று | திருவுள்ளத்திலேபட, |
| அங்கு | இப்படி திருவுள்ளத்தில் பட்டதசையில் |
| ஊடுருவ ஓர்ந்து | தீர்க்கமாக ஆராய்ந்து |
| தளர்வுற்று | தளர்ந்து |
| நீங்கநினை | (அவ்வெம்பெருமானை விட்டு) நீங்க வேணுமென நினைத்த |
| மாறனை | ஆழ்வாரை |
| மால் | ஸர்வேஶ்வரன் |
| நீடு இலகு சீலத்தால் | நெடுகிவிளங்குவதான (தனது) சீல குணத்தினால். |
| பரிந்து | ஸ்நேஹித்து |
| பாங்குடனே | ஸந்தோஷத்துடனே |
| சேர்த்தான் | அணைத்துக்கொண்டான். (ரு) |

அவ;-அஞ்சாம்பாட்டு. (வளமிக்கமால் பெருமை) இதில் ஸர்வ ஸமாஶ்ரயணத்துக்குறுப்பாக ஸௌஶீல்யத்தைப்பேசுகிறபாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிறார்.

அநிகந்தனே யென்னில்; * அஞ்சிறையமடநாரையில் - தூதப்ரேஷணவ்யாஜத்தாலே தம்மாற்றாமையை யவனுக்கறிவிக்க வநந்தரம் அவன்வந்து ஸம்ச்லேஷித்தருளக்கண்டு அவன் பெருமையையும் தஞ்சிறுமையையும்நினைத்து 'ஸர்வபோக்யனானவனை அயோக்யனான நான் கிட்டி தூஷிப்பதில் அகன்றுபோகை நன்றென்று தாமகலப்புக, "ஆழ்வீர்! உம்முடைய பொல்லாங் கைப்பாராதே நம்முடைய செல்லாமையைப்பாரீர்" என்று "ஸக்ருதாவாகராத் - ஆக்ரம்யலோகாந்" (க) என்கிற த்ரிவிக்ரமாபதாநஸித்தமான தன் ஸௌசீல்யத்தையும், நவநீதசௌர்யவ்ருத்தாந்தஸித்தமான தன் செல்லாமையையுங்காட்டித் தம்மை அவன் சேர்த்துக்கொள்ள, அத்தாலே தாம் அகலுகை தவிர்ந்து பொருந்தினபடியை யருளிச்செய்கிற * வளவேழுலகிலர்த்தத்தை "வளம்மிக்க" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா;-(வளமிக்கமால்பெருமைமன்னுயிரின் தன்மை) அதாவது, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த(ரு)ரான நித்யஸூரி நிர்வாஹகத்வத்தாலே வந்த ஸர்வேச்வரனுடைய பெருமையையும், அசித்ஸம்ஸ்ருஷ்டமாகையாலே ஹேயஸம்ஸர்க்கார்ஹமாய் அணுபரிமாணமாயிருக்கிற வாத்மாவினுடைய தன்மையுமென்கை. "வளவேழுலகின் முதலாய வானோரிறையைக் களவேழ்வெண்ணெய் தொடுவுண்டகள்வா வென்பன் - அருவினையேன்" என்றருளிச்செய்தபடியை அடியொத்தினபடி. (உளமுற்று) எம்பெருமானுடையவும் தம்முடையவும் உத்கர்ஷாபகர்ஷங்கள் திருவுள்ளத்திலேபட்டு. (அங்கூடுருவோர்ந்து) இப்படித்திருவுள்ளத்திலுற்றதசையில் நிரூபிக்குமிடத்து முடியவிசாரித்து. "அருவினையேன்" என்று தொடங்கி "அடியேன் சிறியஞானத்தன்" என்னுமளவுமாராய்ந்து. இப்படி தீர்க்கதர்சியாக தர்சித்து.

(தளர்வுற்று) மிகவுமவஸந்நராய். "நவஹ்யேவ - நகல்வத்யைவ" (உ) "யதிவீரதி: - யதிப்ரீதி:" (ந) இத்யாதிப்படியே. (நீங்க நினைமாறனை) அகன்று அத்தலைக்கதிசயத்தைப்பண்ணவெண்ணுகிற வாழ்வாரை. நீங்க, ஸைத-ஸ்வவிநாசமாகிலும் ஸ்வாமிக்கதி

(க) ரா-பா-௨௧-௨௦. (உ) ரா-உத்தர-௪௮.
(ந) ரா-உத்தர-௧௦௧.

மூ—பரிவதிலீசன் படியைப் பண்புடனேபேசி
அரியனலனாராதனைக் கென்று-உரிமையுடன்
ஓதியருள்மாறனொழிவித்தானிவ்வுலகில்
பேதையர்கள் தங்கள் பிறப்பு. (சு)

---

ஸயாவஹராய் விஶ்லேஷிக்கஸ்மரிக்கிறவரை. (மால்) தன்செல்லாமையைக்காட்டி ஆஶ்ரிதவ்யாமுக்தனான ஸர்வேஶ்வரன். “நெடுமாலே” “மாலேமாயப்பெருமானே” என்றத்தைக்கடாக்ஷித்தருளிச் செய்தபடி. ஏவம்வித வ்யாமுக்தனானவன். (நீடிலகுசீலத்தால்) நெடுகிப்போருமதான நித்ய விஶத ஶீலகுணத்தாலே அதாவது - “திசைகளெல்லாம் திருவடியாற்றாயோன்” என்றும், “உண்டாயுலகேழ்முன்னமே’ என்று தொடங்கி “நெய்யூண்மருந்தோ மாயோனே” என்றும், இப்படி ஸௌஶீல்யாதிகளாலே வஶீகரித்தபடியென்கை. (பரிந்துபாங்குடனே சேர்த்தான்) பரிந்துபாங்குடனே சேர்க்கையாவது-இவரை ஸ்நிக்த (ஶ்ரு) ஜோதியாக ஸ்நேஹித்து மங்கவிடாமல் அலப்யலாபமாக ஹர்ஷத்துடனே ஸங்க்ரஹப்பண்ணினான். திருவாய்ப்பாடியில் வெண்ணெயோபாதி இவரையும் சேரவிரும்பினான். “வைகலும் வெண்ணெய் கைகலந்துண்டான்பொய்கலவாது என்மெய்கலந்தானே” என்னக்கடவதிறே. (ரு)

---

பதவுரை.

| | |
|---|---|
| பரிவதுஇல் | ஹேயப்ரத்யநீகனான |
| ஈசன் | ஸர்வேஶ்வரனுடைய |
| படியை | (ஆராதிப்பதற்கு எளியன் என்கிற) ப்ரகாரத்தை |
| பண்புடனே பேசி | பரிபூர்ணனாகையாலேஇட்டதுகொண்டு த்ருப்தனாகிற ஸ்வபாவத்துடனே அருளிச் செய்து |
| ஆராதனைக்கு | திருவாராதநத்திற்கு |
| அரியன் அலன் என்று | (அவன்) அருமையானவனல்லனெ |

| | |
|---|---|
| உரிமையுடன் | அந்தரங்க ஸ்நேஹத்தோடு |
| ஓதிஅருள்மாறன் | (பாசுரங்களை)ஓதியருளின ஆழ்வார் |
| இவ்வுலகில் | இந்த உலகத்திலுள்ள |
| பேதையர்கள் தங்கள் | அறிவிலிகளுடைய |
| பிறப்பு | பிறவியை |
| ஒழிவித்தான் | ஒழித்தருளினார். (சு) |

அவ. - ஆறும்பாட்டு. (பரிவதிலீசன்படியை) இதில், ஆஶ்ரயணத்திலருமையில்லாமையை யருளிச்செய்த பாசுரத்தை அநுவதித்தருளிச்செய்கிறார்.

அதெங்ஙனேயென்னில; ஶீலவானேயாகிலும்,ஶ்ரிய:பதியாய்பரிபூர்ணனானவன் பெருமைக்கீடாகக்ஷுத்ரனாய் க்ஷுத்ரோபகரணனானவனால்பச்சையிட்டாஶ்ரயிக்கப்போமோவென்ன; ஶ்ரிய:பதித்வம்-இத்தலையில் குற்றம்பாராமலங்கீகரிக்கும் நீர்மைக்கு உடலாகையாலும், பரிபூர்ணத்வம் - இத்தலையில் குற்றம்பாராமல் பெற்றது கொண்டு ஸந்தோஷிக்கைக்குடலாகையாலும், ஆஶ்ரயிப்பார்க்கு பத்ரபுஷ்பாதிகளாலே ஸ்வாராதனென்கிற * பரிவதிலீசனிலர்த்தத்தை "பரிவதிலீசன்படியை" இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

வ்யா-(பரிவதிலீசன்படியை) ஹேயப்ரத்யநீக.கல்யாணைகதானனான ஸர்வேஶ்வரனுடைய ஸ்வாராதஸ்வபாவத்தை. (பண்புடனே பேசி) பரிபூர்ணனாகையாலே இட்டது கொண்டு த்ருப்தனும் ஸ்வபாவத்துடனே யருளிச் செய்து. "பரிவதிலீசனை" என்று தொடங்கி, "புரிவதுவும் புகைபூவே" என்றத்தைப் பின்சென்றபடி. அன்றிக்கே, பண்புடனே பேசியென்று - அவனுடைய ஸ்வாராததையைச்சொல்லி யல்லது நிற்கமாட்டாததம் ஸ்வபாவத்தாலே சொல்லி யென்றுகவுமாம். (அரியனலனாராதனைக்கென்று) இப்படி பத்ரபுஷ்பாதிகளாலே ஸ்வாராதனாகையால், -ஆஶ்ரயிக்குமிடத்தில், 'ஶவய-ாவ-ஜிதஹஸ்தக - ஶபர்யா பூஜிதஸ்ஸம்யக்' (க) என்னும்படி ஸபர்யைக் கருமையில்லாதவனென்று, (உரிமையுடனோதியருள் மாறன்) அந்தரங்கமான ஸ்நேஹத்தோடேயருளிச்செய்தவாழ்வார். அதாவது-"எதுவேதென் பணியென்னாததுவே

(க) ரா-பா-க-டுஎ.

மூ.-பிறவியற்று நீள்விசும்பிற் பேரின்பமுய்க்கும்
திறமளிக்குஞ் சீலத்திருமால் — அறவினியன்
பற்றுமவர்க்கென்று பகர்மாறன்பாதமே
உற்றதுணையென் றுளமேயோடு. (எ)

யாட்செய்யுமீடே'' என்றும், "உள்கலந்தார்க்கோரமுதே" என்றும், "அமுதிலுமாற்றவினியன்'' என்றும், "தாள்கள் தலையில் வணங்கிநாள் கடலைக்கழிமினே'' என்றும், "அவனைத்தொழுதால்'' என்றும், "தருமவரும்பயனாய திருமகளார் தனிக்கேள்வன்'' என்றும்-ஆஶ்ரயணீய பலபர்யந்தமாக வருளிச்செய்தவையென்கை. (ஒழிவித்தானிவ்வுலகில் பேதையர்கள் தங்கள் பிறப்பு) இப்படியுபதேசிக்கையாலே, இந்தலோகத்திலறிவிலிகளானவர்கள் பிறவியையகற்றுவித்தார், இஜ்ஜகத்தில் அஜ்ஞருடைய ஜந்மஸம்பந்தத்தை ஸ்வஸூக்தியாலேநிவர்த்திப்பித்தார். "ஏதமிலாயிரத்திப்பத்தோத வல்லார் பிறவாரே'' என்றதைப் பின்சென்றபடி. (சு)

பதவுரை.

| | |
|---|---|
| உள்ளமே | நெஞ்சே! |
| பிறவி அற்று | ஜந்மஸம்பந்தமற்று |
| நீள் விசும்பில் | பரமாகாச (பரமபத) த்தில் |
| பேர் இன்பம் உய்க்கும் திறம் | பரமாநந்தத்தை அநுபவிக்கும் திறத்தை |
| அளிக்கும் சீலம் | அநுக்ரஹிக்கக் கடவ ஸ்வபாவத்தையுடைய |
| திருமால் | ஶ்ரிய:பதியானவன் |
| பற்றுமவர்க்கு | (தன்னை) ஆஶ்ரயிப்பவர்களுக்கு |
| அறஇனியன் என்று | மிகவும் போக்யனாயிருப்பனென்று |
| பகர் | அருளிச்செய்த |
| மாறன் | ஆழ்வாருடைய |
| பாதமே | திருவடிகளே |
| உற்றதுணை என்று | ப்ராப்தமான துணையென்று |
| ஓடு | விரைந்து சென்று பற்று. (எ) |

அவ.—ஏழாம்பாட்டு. (பிறவிபற்றுநீள்விசும்பில்) இதில், ஆஸ்ரயண ஸௌலப்யத்தைப் பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; ஆராதநத்தில் அல்பஸந்துஷ்டதையாலே இவனுக்குச் செய்யவேண்டுவது பணியில்லையேயாகிலும், உள்ளது தேவையாயிருக்குமென்று ஆஸ்ரயணங்கூடாதோவென்ன, ஸமர்த்தவ்ய விஷயஸாரஸ்யத்தாலே ப(ஹ)லத்தையிற்போலே ஆஸ்ரயணதசையே பிடித்தும் ரஸிக்கும் விஷயமாகையாலே, அபிமதவிஷயத்தில் பரிமாற்றம்போலே ஆஸ்ரயணம் அத்யந்தம் ஸரஸமாயிருக்குமென்கிற பிறவித்துயரிலர்த்தத்தை 'பிறவியற்று" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா;-(பிறவியற்று நீள்விசும்பில்பேரின்பமுய்க்குந்திறமளிக்கும் சீலந்திருமால்) ஜந்மஸம்பந்தமற்று நிரதிஸயபோக்யமான பரமாகாஸத்திலே நிரதிஸயாநந்தத்தை யநுபவிக்கும்படி யநுக்ரஹிக்கும் ஸ்வபாவனான ஸ்ரியஃபதியானவன். "தருமவரும்பயனாய திருமகளார் தனிக்கேள்வன்" என்றதை யநுபாஷித்தருளினபடி. ஏவம்விதனானவன் (அறவினியன்பற்றுமவர்க்கென்று) மிகவும்ஸரஸனாயிருக்கும் ஆஸ்ரயிக்குமவர்களுக்கென்று. "எப்பாலெவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்தப்பாலவன்" "தாயவமுதைப் பருகிப்பருகி யென்மாயப்பிறவி மயர்வறுத்தேனே" என்னுமதத்தையும் அடியொற்றியருளிச் செய்தபடி.

மற்றும் அவனுடைய போக்யதைக் கநுகுணமாக "ஆழிப்படையந்தணனை" என்றும், "ஒண்சுடர்க்கற்றையை" என்றும், 'விடுவேனோ என்விளக்கை" என்றும், "பின்னும் விராய்மலர்த்துழாய்வேய்ந்தமுடியன்" என்றும், 'பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை முன்னையமரர் முழுமுதல்" என்றருளிச் செய்தவையும் தச்சேஷங்களாகக்கடவது. (அறவினியன் பற்றுமவர்க்கென்று பகர்மாறன் பாதமேயுற்றதுணையென்றுள்ளமேயோடு) இப்படியாஸ்ரயிப்பார்க்கு "[illegible]-குணைர்விருருசேராமஃ" (க) என்

மூ.- ஓடுமனஞ்செய்கையுரையொன்றி நில்லாதாருடனே
கூடிநெடுமாலடிமை கொள்ளுநிலை—நாடறிய
ஓர்ந்தவன்றன் செம்மையுரைசெய்த மாறனென
ஏய்ந்துநிற்கும் வாழ்வாமிவை. (அ)

ளும்படி நிரதிஶயபோக்யனுயிருக்குமென்று இத்திருவாய்மொழி முகேந வருளிச்செய்யுமாழ்வார் திருவடிகளே ப்ராப்தமான துணையென்று நெஞ்சே ஶீக்ரகதியாய்ச் சென்றுபற்று. * முந்துற்றநெஞ்சாய் அங்கேபற்றும்படி ஓடு. (எ)

பதவுரை.

| | |
|---|---|
| ஓடும் | (விஷயாந்தரங்களில்படிவதற்காக) விரைந்து போகின்ற |
| மனம் | நெஞ்சும் |
| செய்கை | காயமும் |
| உரை | வாக்கும் (ஆகிய இவை) |
| ஒன்றி நில்லாதாருடனே | ஒருவழிப்பட்டு நிற்கப்பெறாத குடிலரோடு |
| கூடி | சேர்ந்து |
| நெடுமால் | ஸர்வேஶ்வரன் |
| அடிமைகொள்ளும் நிலை | அடிமை கொள்ளுகிற குணத்தை |
| நாடு அறிய | நாட்டார் அறியும்படி |
| ஓர்ந்து | ஆராய்ந்து |
| அவன்தன் செம்மை | அவனது ஆர்ஜவத்தை |
| உரைசெய்த | அருளிச்செய்த |
| மாறன் என | ஆழ்வார் என்று அநுஸந்திக்க |
| வாழ்வு ஆம் இவை | ஸ்வரூபாநுரூபமான ஸம்பத்துக்களாகிய இவை |
| ஏய்ந்து நிற்கும் | பொருந்தி நிலைநிற்கும். (அ) |

அவ.—எட்டாம்பாட்டு. (ஓடுமனம்) இதில்ருஜுக்களோடு குடிலரோடுவாசியற ஆர்ஜவகுணயுக்தனென் றநுஸந்தித்தவாழ்வார் திவ்யஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில், ஆஶ்ரயணம் அத்யந்தஸுலபமா யிருந்ததேயாகிலும், ஆஶ்ரயிக்கிற

மூ.-இவையறிந்தோர் தம்மளவிலீசனுவந்தாற்ற
அவயவங்கடோறுமணையும்—சுவையதனைப்
பெற்றார்வத்தான்மாறன் பேசின சொற்பேச, மால்
பொற்றாள் நஞ்சென்னிபெறும். (கூ)

வர்கள் கரணத்ரயத்தாலும் செவ்வைக்கேடான ஸம்ஸாரிகளா கையாலே பரிமாற்றத்திலருமை தட்டியிராதோமென்னில் ; நீரேறு மேடுகளிலே விரகாலே நீரேற்றுவாரைப்போலே, இவர்களுடைய செவ்வைக்கேடே தனக்குச்செவ்வையாம்படி இன்றுஸ்ராயிக்கிற விவர்களளவிலும்செவ்வையனாய்ப்பரிமாறுமார்ஜவகுணயுக்தனென் கிற * ஓடும்புள்ளிலர்த்தத்தை "ஓடுமனஞ்செய்கை" இத்யாதி யாலே யருளிச்செய்கிறார்.

வ்யா;-(ஓடுமனஞ்செய்கையுரை யொன்றி நில்லாதாருடனேகூடி) சஞ்சலமாய் (க) * நின்றவாநில்லாநெஞ்சும், அதின்வழியைப் பின் செல்லும் வாக்காயங்களும், ஒருமைப்பட்டிருக்கையன்றிக்கே, செவ்வைகெடநடக்கும் குடில்ரோடுகூடிக்கலந்து. (நெடுமாலடிமை கொள்ளுநிலை) ஸர்வஸ்மாத்பரனானவன் அடிமைகொள்ளுமார்ஜவ ஸ்வபாவத்தை, (நாடறியவோர்ந்து)நாட்டாரறியும்படியாராய்ந்து. (அவன்றன்செம்மை) "தெநதெதஉநவரதா:- தெநதேதமநு வ்ரதா:" (உ) "ராஓோராஜூஉவாஸிநா-ராமோராஜ்யமுபாஸித் வா"(ங)என்னும்படியான அவனுடையஆர்ஜவத்தை.(உரைசெய்த) அருளிச்செய்த. அதாவது - "ஒடும்புள்ளேறிச்சூடும் தண்டுழாய் நீடுநின்றவையாடும்மானே" என்று-நித்யஸூரிகள் திறத்தில் பரி மாறுமார்ஜவத்தையும், "அம்மானாய்" என்றும், "கண்ணாவான்" என்றும், 'நீர்புரைவண்ணன்' என்னுமளவும் நித்யஸம்ஸாரிகளோ டே செவ்வையனாய்ப் பரிமாறுமார்ஜவத்தையு மருளிச்செய்தாரெ ன்கை. இப்படி உரைசெய்த (மாறனென) ஆர்ஜவகுணத்தை யரு ளிச்செய்த ஆழ்வாரென்றநுஸந்திக்க, (எய்ந்துநிற்கும் வாழ்வாமி வை). ஸ்வரூபாநுரூபமான ஸம்பத்தாயுள்ளவையெல்லாம் பொருந் தி "சென்றொன்றி நின்றதிரு" (ச) என்னும்படி நிலைநிற்கும். (அ)

பதவுரை.

| | |
|---|---|
| இவை | கீழ்த்திருவாய்மொழியில் வெளி யிட்ட ஆர்ஜவாதி குணங்களை |

(க) தி-மொ-க-ச. (உ) (ங) ரா-பா-க-கஎ. (ச) சு-திரு-வ-சுக.

| | |
|---|---|
| அறிந்தோர் தம் அளவில் | அறிந்தவர்கள் பக்கலில் |
| ஈசன் | ஸர்வேஶ்வரன் |
| உவந்து | ஸந்தோஷித்து |
| ஆற்ற | ஸாத்மிக்க ஸாத்மிக்க |
| அவயவங்கள்தோறும் | எல்லா அவயவங்களிலும் |
| அணையும் | கலக்கப்பெறுகிற |
| சுவையதனைப்பெற்று | ரஸத்தைப்பெற்று |
| ஆர்வத்தால் | (அதனைப்பெற்ற) ப்ரீதியாலே |
| மாறன்பேசின | ஆழ்வார் அருளிச்செய்த |
| சொல் | ஸ்ரீஸூக்திகளை |
| பேச | (நாம்) உச்சரிக்க, |
| மால் | ஸர்வேஶ்வரனுடைய |
| பொன்தாள் | அழகிய திருவடிகள் |
| நம் சென்னி | நம்முடைய தலைமீது |
| பொரும் | சேரும். (கூ) |

அவ; - ஒன்பதாம்பாட்டு. (இவையறிந்தோர் தம்மளவில்) இதில் எம்பெருமானுடைய ஸாத்ம்யபோக(ஹோம)ப்ரத(²)த்வத்தை யருளிச்செய்த பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்; இத்தலையில் செவ்வைக்கேடு தனக்குச் செவ்வையாம்படி அவர்களுக்குப் பாங்காகத்தன்னை யமைத்துப்பரிமாறு மார்ஜவகுண யுக்தனேயாகிலும், தன்னினைவறிந்து செவ்வியராய்ப் பரிமாறும் திருவடி திருவனந்தாழ்வான் தொடக்கமான நித்யாஶ்ரிதரோடே உகப்போடே கலக்குமாபோலே இன்றாஶ்ரயிக்கிறவர்களோடு உடம்புடனே கலந்து பரிமாறக்கூடுமோவென்னில்; அவர்களெல்லாரோடும் ஓரோப்ரகாரத்தாலே பரிமாறுகிறவன் அவர்களெல்லாரோடும் பரிமாறுகிற பரிமாற்றமெல்லாவற்றையும் இவனொருவனுடனே ஸர்வேந்த்ரியங்களாலும் ஸர்வகா(மா)த்ரங்களாலும் பொருந்தப் பொருந்தப்பரிமாறுமென்கிற * இவையுமவையி லர்த்தத்தை " இவையறிந்தோர் தம்மளவில் " இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

வ்யா:- (இவையறிந்தோர் தம்மளவில்) இந்தஆர்ஜவகுணத்தை யறிந்தவர்கள் விஷயத்திலே. (ஈசனுவந்தாற்றவவயவங்கள்தோறுமணை

மூ. பொருமாழி சங்குடையோன் பூதலத்தே வந்து
தருமாறேரே தவறத் தன்னைத்—திரமாகப்
ப்பார்த்துரை செய்மாறன் பதம்பண்ணிக வென்சென்னி
வாழ்த்திடுகவென் னுடையவாய். (கo)

யும் சுவையதனைப்பெற்று) ஸர்வேஶ்வரன் ஹ்ருஷ்டனாய் ஸாத்மிக்க ஸாத்மிக்க, ஸர்வாவயவங்களிலும் ஸம்ஶ்லேஷிக்கும் ரஸந்தன்னைப் பெற்றுப் பொறுக்கப்பொறுக்க உறுப்புத்தோறும் சுறிப்புத்தீரக் கலக்குமதான பெரும்பேற்றைப்பெற்று. அதாவது - 'ஸாரமோ வா நமோந்த்ர ஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே" (க) என்னும்படி "என்னுடைச்சூழ லுளானே" "அருகலிலானே" 'ஒழிவிலனென்னோடுடனே' 'கண்ணனென்னொக்கலையானே' "மாயனென்னெஞ்சினுளானே" 'என்னுடைத்தோளிணையானே' "என்னுடை நாவினுளானே" 'கமலக் கண்ணனென் கண்ணினுளானே' 'என்னெற்றியுளானே' 'என்னுச்சியுளானே' என்று தலைக்குமேலே ஏறினபடியை அடியொற்றினபடி.

அணையுஞ்சுவையாவது - அருகலிலறுசுவை. "பிராட்டி, திருவடி, திருவனந்தாழ்வான் தொடக்கமானோரோட்டைக்கலவியில் ரஸங்களெல்லாம் ஏகவிஷயத்திலுண்டாம்படி கலந்து" என்றத்தை நினைக்கிறது. (ஆர்வத்தால்மாறன் பேசினசொல் பேச) இப்படி பெரும்பேறு பெற்று, அத்தாலுண்டான வபிநிவேஶத்தாலே ஆழ்வாரருளிச்செய்த திவ்யஸூக்தியை கேவலம் வாக்காலே வசி(வி)க்க; (மால்பொற்றாள் நம் சென்னிபொரும்; ஆஶ்ரிதவ்யாமுக்த(ம)னான ஸர்வேஶ்வரனுடைய ஸ்ப்ருஹணீயமான சரணங்கள் நம்முடைய சென்னித்திடரிலே சேரும். பொருமென்று-ஒப்பாய், அத்தால் - சேருமென்றபடி. "நிச்சலும் விண்ணப்பஞ்செய்யநீள் கழல் சென்னிபொரும்" என்றத்தை யருளிச்செய்தபடி. (கூ)

பதவுரை.

| | |
|---|---|
| பொரும் | (பகைவர்மீது) போர்புரியாநிற்கிற |
| ஆழி | திருவாழியாழ்வானையும் |
| சங்கு | ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் |

(க) ரா-கி-ச-உக.

| | |
|---|---|
| உடையோன் | (திருக்கையிலே) உடைய எம்பெருமான் |
| பூதலத்தே வந்து | இப்பூமியில் வந்தவதரித்து |
| ஓர் ஏது அற | ஒரு ஹேதுவில்லாமல் (நிர்ஹேதுகமாக) |
| தன்னை தரும் ஆறு | (அடியார்க்கு) தன்னை (அநுபவிக்கத்) தருகிறபடியை |
| திரமாக | ஸ்திரமாக |
| பார்த்து | ஸாக்ஷாத்கரித்து |
| உரைசெய் | அருளிச்செய்த |
| மாறன் | ஆழ்வாருடைய |
| பதம் | திருவடிகளை |
| என்சென்னி | என் ஶிரஸ்ஸானது |
| பணிக | வணங்குக; |
| என்னுடையவாய் | என்வாக்கானது |
| வாழ்த்திடுக | மங்களாஶாஸநம் பண்ணுக. (௧௦) |

அவ. - பத்தாம்பாட்டு. (பொருமாழி) ஸர்வாங்க ஸம்ஶ்லேஷம் பண்ணுகைக்கு ஹேத்வந்தரங்காணுயல் "நிர்ஹேதுகமாகாதே" என்று நிர்வ்ருத்தராகிறபடியைப் பேசுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனே யென்னில்; இப்படி உகப்புடனே பண்ணும் ஸர்வாங்க ஸம்ஶ்லேஷமாகிற விததப்பேற்றுக்குத் தகுதியாக இவனால்நேர்ந்து செய்யத்தக்கதுண்டோவென்னில்; புத்த்(யா)யாதி ஸகலபதார்த்தங்களுக்கும் நியாமகனுகையாலே, அத்வேஷந்துடங்கி பரிகணனைநடுவாகப் பரமபக்திபர்யந்தமாகத்தானே விளைவித்துவந்து நிர்ஹேதுகமாக வங்கீகரிக்கும் ஸ்வபாவனென்று அவனுடைய நிர்ஹேதுகோபகாரகத்வத்தை யநுஸந்தித்து நிர்வ்ருதராகிற * பொருமாநீள் படையிலர்த்தத்தை "பொருமாழி சங்குடையோன்" என்று துடங்கி யருளிச்செய்கிறார்.

வ்யா.-(பொருமாழி சங்குடையோன் பூதலத்தே வந்து) ஶத்ருக்கள் மேலே பொரா நிற்கிற திருவாழி ஸ்ரீ பாஞ்சஜந்யமாகிற திவ்யாயுதங்களையுடைய ஸர்வேஶ்வரன், எதிரம்பு கோக்கிற

மூ.-வாயுந்திருமால் மறைய நிற்க வாற்றாமை
போய்விஞ்சிமிக்க புலம்புதலாய்—ஆய
அறியாதவற்றோடணைந் தழுதமாறன்
செறிவாரை நோக்கும் திணிந்து. (கக)

இந்தப் பூதலத்திலே சக்ஷுர்விஷயமாம்படி வந்து "பொருமா நீள்படை" என்று தொடங்கி "கருமாணிக்கமென் கண்ணுளதாகும்" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச் செய்தபடி. (தருமாறேதேது வறத்தன்னை) நிர்ஹேதுகமாகத் தன்னையுபகரிக்கிற வுபாயத்தை; (ஓரேதுவறத் தன்னைத் தருமாறு) ஒருஹேதுவின்றிக்கே நிர்ஹேதுகமாக ப(ர)ஸ்வரூபஞான தன்னையே தருகிற ப்ரகாரத்தை (திடமாகப் பார்த்துரை செய் மாறன்) அதாவது—கண்ணுள்ளே நிற்கும் கா தன்மையால்தொழிலெண்ணிலும் வரும்" என்கிற-பத்துக்கும் பரிகணனைக்குமொக்க முகங்காட்டும்படிக்குமேலே, "ஓரானாய் அடிமை வந்திலுமாயு - கண்டாயே" என்று—"வலிக்...." (க) 'வஜ்ஜ்கஃ-ஸந்ததஃ' (உ) என்று கரைசேர்ந்த நிர்ஹேதுகக்ருபையை அல்பஜ்ஞராலே அவிசா(வா)ல்யமாம்படி ஸ்த்திரமாக தர்சித்து, அந்த ப்ரகாரத்தை யருளிச்செய்தவாழ்வார். (பதப்பணிக வென் சென்னி வாழ்த்திடுக வென்னுடைய வாய்) இப்படி நிர்ஹேதுகவைபவத்திலே நிர்வ்ருதராகிறபடியை வெளியிட்டவாழ்வார் திருவடிகளை "உத்தமாங்கம் ஜாதிமூர்த்தாப்ரணமாமி" (ங) என்னும்படி என் ஸிரஸ்ஸானது ப(ஹு)ஜீத்திடுக; "திருக்குருகைப்பெருமான் தன்திருத்தாள்கள் வாழியே" (ச) என்று என்வாக்காலே மங்களாஸநம் பண்ணிடுக. இப்படி உபகாரஸ்ம்ருதியாலே தாம் ஆழ்வார் திருவடிகளிலே ஆழங்காற்பட்டபடியையருளிச்செய்தருளினர். கo.

பதவுரை.

| | |
|---|---|
| வாயும் | (அடியார் அநுபவிக்கலாம்படி) கிட்டுகையையே ஸ்வபாவமாக வுடைய |
| திருமால் | ஸ்ரியப்பதியானவன் |

(க) நா-பா-க-உக. (உ) நா-பா-க-பூஅ. (ங) ஸ்தோ-ங- (ச) வாழித்.

| | |
|---|---|
| மறையநிற்க | (கண்ணுக்குப் புலப்படாமல் பிரிந்து) மறைந்திருக்க, (அதனாலே) |
| ஆற்றாமைபோய் விஞ்சி | ஶோகம் அதிகரித்து |
| மிக்கபுலம்புதலாய் | மிகவும் அழும்படியான நிலைமை நேர்ந்து, |
| ஆய அறியாதவற்றோடு | (அசேதநங்களாகையாலே) தம்முடைய துக்கத்தை ஆராய அறியாதவற்றை |
| அணைந்து | கட்டிக்கொண்டு |
| அழுத | (அவற்றை ஸமதுக்கிகளாகக்கொண்டு) அழுத |
| மாறன் | ஆழ்வார் |
| செறிவாரை | ஆஶ்ரிதர்களை |
| திணிந்து நோக்கும் | த்ருடமாகக்கடாக்ஷித்தருள்வர். (௧௧) |

அவ;—பதினோராம்பாட்டு. (வாயுந்திருமால்) இதில்-ஸகல பதார்த்தங்களையும் ஸமதுக்கிகளாகவெண்ணி, துக்கிக்கிறபடியைப்பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனே யென்னில்;"பெருநிலங்கடந்த நல்லடிப்போதயர்ப்பிலனலற்றுவன் தழுவுவன் வணங்குவன்' (௧) என்று இவர் பாரித்தபடியே அநுபவிக்கப் பெறாமையால் ஷட்குணஸாம்யத்தாலே தாமான தன்மை குலைந்து, பிராட்டியான தன்மையை ப(ஹ)ஜித்துத் தூதுவிடக்ஷமரானார் அஞ்சிறையமடநாரையில்; இங்கு "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" (௨) இத்யாதிப்படியே-மேன்மை, நீர்மை, வடிவழகு, மூன்றுங்குறைவற உண்டாய், அவதாரத்தில் பிற்பாடருமிழக்க வேண்டாதபடி முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறஸ்தலமான அர்ச்சாவதாரத்திலே யநுபவிக்க வாசைப்பட்டுக் கிடையாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு, நாரை, அன்றில், கடல், வாடை, வானம், மதி, இருள், கழி, விளக்குத்தொடக்கமான லௌகிகபதார்த்தங்களும் தம்மைப்போலே பகவத்விரஹத்தாலே நோவுபடுகிறனவாகக் கொண்டு அவற்றுக்குமாகத்தாம் நோவுபட்டுச் செல்லுகிறபடியை அந்யாபதேஶத்தாலே பேசிச்சொல்லுகிற *வாயுந்திரையுகளிலர்த்தத்தை, 'வாயுந்திருமால்' இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

(௧) தி-வாய்-௧-௩-௧௦. (௨) தி-வாய்-௫-௧௦-௧.

மூ.—திண்ணிதாமாறன் திருமால் பரத்துவத்தை
நண்ணியவதாரத்தேநன்குரைத்த—வண்ணமறிந்து
அற்றார்கள் யாவரவரடிக்கேயாங்கவர்பால்
உற்றாரைமேவிடாதூன். (௧௨)

வ்யா;—(வாயுந்திருமால் மறையநிற்க) அநுபவயோக்யமாம்படி கிட்டுகையே ஸ்வபாவமாயிருக்கிற ஸ்ரியஃபதியானவன், போக(ஸாம)ஸாத்ம்ய ஹேதுவாக விஶ்லேஷித்து அத்ருஶ்யனாய்நிற்க, கீழே "மைந்தனைமலராண்மணவாளனை" (௧) என்றத்தை யநுபாவித்தபடி. அன்றிக்கே "நீயுந்திருமாலால்" என்றதாகவுமாம். 'மணியை வானவர்கண்ணனைத்தன்னதோரணியை' (௨) என்று -மேன்மையும், நீர்மையும், வடிவழகுமுடையவன் விஶ்லேஷிக்கையாலே. (ஆற்றாமைபோய் விஞ்சிமிக்கப் புலம்புதலாய்) 'ஆராத காதல்' என்னும்படி விஶ்லேஷவ்யஸநமானது கைகழியப்போய் மிக்கு, 'ஸீதேச்ச்ரு த்வச்வசுர: விதாஹீநோ விலக்ஷண-ஸீதே ம்ருதஸ்தே ஶ்வஶுர: பித்ராஹீநோஸிலக்ஷ்மண" (௩) என்னும்படி, 'எம்மேபோல்நீயும்' என்று பலகாலுஞ்சொல்லும்படி மிக்க ப்ரலாபமாய்.

(ஆயவறியாத வற்றோடணைந்தழுதமாறன்) அசேதநங்களாகையாலே தம்முடைய து:க்கத்தை யாராயவறியாதவற்றைக்கிட்டிக் கட்டிக்கொண்டு "ஆற்றாமைசொல்லியழுவோமை" என்றுஸமது:க்கிகளாக வழுதவாழ்வார். 'காற்றுங்கழியுங்கட்டியழ" (௪) என்றாரிறே. (செறிவாரை நோக்குந்திணிந்து) அநந்யப்ரயோஜநராய் அந்தரங்கமாக வாஶ்ரயிக்குமவர்களை த்ருடமாகக் கடாக்ஷிப்பர். தம்மைப்போலே அசேதநங்களைக் கட்டிக்கொண்டழாமல் பகவத்ஸம்ஶ்லேஷமுண்டாய் ஆநந்திக்கும்படி கடாக்ஷித்தருளுவர். (௧௧)

பதவுரை.

| | |
|---|---|
| திண்ணிதாம் மாறன் | த்ருடசித்தரான ஆழ்வார் |
| திருமால் | ஸர்வேஶ்வரனுடைய |
| பரத்துவத்தை | பரத்வத்தை |

(௧) தி-வாய்-௧-௧௦-௪. (௨) தி வாய்-௧-௧௦-௧௧. (௩) ரா-அ-௧௦௩-௧௫. (௪) ஆசார்யஹ்ருதயம்.

| | |
|---|---|
| அவதாரத்தே நண்ணி | அவதாரத்திற்பொருந்தி |
| நன்கு உரைத்தவண்ணம் | நன்றாக அருளிச்செய்தபடியை |
| அறிந்து | அறிந்து |
| அற்றார்கள்யாவர் | (அவ்வாழ்வார்க்கே அநந்யார்ஹ ஶேஷராக)அற்றுத்தீர்ந்தவர் யாவருண்டோ [ஹராய்) |
| அவர் அடிக்கே | அவர்கள் திருவடிக்கே (அநந்யார் |
| ஆங்கு | அவ்விடத்திலே |
| அவர்பால் உற்றாரை | அவர்விஷயத்திலே அந்தரங்கராய்க் கிட்டுமவர்களை |
| ஊன் | தேஹஸம்பந்தம் |
| மேவிடாது | மேற்கொள்ளாது. (கஉ) |

அவ;—பன்னிரண்டாம்பாட்டு. (திண்ணிதாமாறன்) ப்ராஸங்கிகமாக ப்ரஸ்துதமானபரத்வத்தை அவதாரத்திலே யநுஸந்தித்துப் பரோபதேஶம் பண்ணுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். அது எங்ஙனேயென்னில்; பிரிந்தாரைக்கண்ணுஞ் சுழலே யிடப்பண்ணுமளவன்றிக்கே, கூடினாலும் பிரிவைமறக்கும்படி பண்ணவற்றான விஷயவைலக்ஷண்யம், அதுக்கீடான குணவைலக்ஷண்யம், அதுக்கடியான ஸர்வேஶ்வரத்வம் இவற்றையநுஸந்தித்து, இப்படி ப்ராஸங்கிகமாக ப்ரஸ்துதமான ஸர்வேஶ்வரத்வத்தை இதிஹாஸ புராண ப்ரக்ரியையாலே பிறரைக்குறித்து உபதேசித்துச் செல்லுகிற *திண்ணன்வீட்டிலர்த்தத்தை 'திண்ணிதாமாறன்' இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

வ்யா;-(திண்ணிதாமாறன்) கீழே "மூவாமுதல்வா வினியெம்மைச் சோரேலே" என்றவநந்தரம்; "சோராதவெப்பொருட்கு மாதியாஞ் சோதி" என்கிறகாரணத்வத்தால் வந்தபரத்வத்தைக்காட்டி ஸமாதாநம் பண்ண, அத்தாலேதரித்ததா (சா)ர்ட்ட்யத்தையுடைய வாழ்வாரென்னுதல்; எல்லார்க்கும் ஸுத்ருடமாம்படி பரத்வத்தை யருளிச்செய்த ஆழ்வாரென்னுதல். (திருமால்பரத்துவத்தை) ஶ்ரியஃபதியான ஸர்வேஶ்வரனுடைய பரத்வத்தை. "நீயுந்திருமாலால்" என்றிறேயருளிச்செய்தது. (நண்ணியவதாரத்தே நன்குரைத்த) திருமால்பரத்துவத்தை அவதாரத்தேநண்ணி நன்குரை

த்த. முதற்றிருவாய்மொழியிலே ஶ்ருதிச்சாயையாலே பரத்வே பரத்வத்தை யருளிச்செய்தாப்போலன்றிக்கே; இதிஹாஸபுராண ப்ரக்ரியையாலே அதிஸுலபமான அவதாரத்திலே பரத்வத்தை யாஶ்ரயணீயமாம்படி நன்றாக வருளிச்செய்த. அன்றிக்கே, திருமால் பரத்துவத்தைத்தாம் நண்ணி† (அவதாரத்திலே)நன்குரைத்த வென்றாகவுமாம்.

நன்குரைத்த வண்ணமறிகையாவது - இப்படி அவதாரே பரத்வத்தை ஸுஸ்பஷ்டமாம்படி "கண்ணன் கண்ணல்ல தில்லையோர்கண்" என்றும், "கோபாலகோளரியேறன்றி-ஏழுலகு மீபாவஞ் செய்தருளாலளிப்பாரார்" என்றுமருளிச்செய்த ப்ரகாரத்தை யறிகை. மற்றும் தச்சேஷமாக "தேவனெம்பெருமானுக் கல்லால் பூவும் பூசனையுந் தகுமே" என்றும் "தகுங்கோலத்தாமரைக் கண்ணனெம்மான் மிருஞ்சோதி மேலறிவார் யவரே" என்றும் "கள்வா" என்று தொடங்கி "புள்ளூர்திகழல் பணிந்தேத்துவர்" என்று மருளிச்செய்தவையுமுண்டிறே. இப்படி யருளிச்செய்யுமிடத்து (க) "க்ருஷ்ணஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய: - க்ருஷ்ண ஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய:" என்றும் (உ) "ஸைஷப்ருதிர்க்காக்ஷஸ ஸம்பந்தீ தேஜநார்தந: - ஸைஷப்ருதிர்க்காக்ஷஸ ஸம்பந்தீதேஜநார்தந:" என்றும், (ங) "அர்ச்யமர்ச்சிதுமிச்சாமஸ்ஸர்வே ஸம்மதம் அர்ஹத - அர்ச்சயமர்ச்சிதுமிச்சாமஸ்ஸர்வே ஸம்மதந்துமர்ஹத" என்றும், (ச) "பாதே தஸ்யைவ கமலாபேந ப்ரஹ்மருத்ரார்சிதேந ச - பாதேநகமலாபேநப்ரஹ்மருத்ரார்சிதேநச" என்றுஞ்சொல்லுகிற ப்ரமாணங்களைப் பின்சென்றிறே யருளிச்செய்தது; (ரு) "ராம: கமலபத்ராக்ஷஸ் ஸர்வஸத்வமநோஹர: - ராம:கமலபத்ராக்ஷஸ் ஸர்வஸத்வமநோஹர:" (சு) "பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந - பாவநஸ்ஸர்வலோகாநாந்த்வமேவரகுநந்தந" இத்யாதிப்ரமாணங்களைப்பற்ற "தகுங்கோலத்தாமரைக்கண்ணனெம்மான்" என்றும் "ஈபாவஞ்செய்தருளாலளிப்பாரார்" என்று மருளிச்செய்தாரிறே. இப்படி பரோபதேஶ ப்ர

(க) பார-ஸபா-ருஅ-உரு. (உ) பார-ஆர-கஅக-ருஉ. (ங) பார-ஸபா-ருக-ச.
(ச) (ரு) ரா-ஸு-ரு-அ. (சு) ரா-உத்தர-அஉ.

† குண்டலிதம் க்வாசித்கம்.

மூ.—ஊனமறவேவந்துள் கலந்தமாலினிமை
ஞானதனுபவித்தற்காந்துணையா—வானில்
அடியார் குழாங்கூடவாசையுற்றமாறன்
அடியாருடன் நெஞ்சேயாடு. (கரு)

காரத்தையறிந்து பரத்வஸ்தா (ஸூா) பகரான ஆழ்வாரிடத்திலே, (அற்றார்கள் யாவர்) அற்றுத்தீர்ந்து அநந்யார்ஹராயிருப்பார் யாவர்சிலர்; (அவரடிக்கே யாங்கவர்பாலுற்றாரைமேவிடா தூன்) அவர்கள்திருவடிகளுக்கு அநந்யார்ஹராய், அவ்விடத்திலே அப்படியே அவர்கள் விஷயத்திலே அந்தரங்கராய்க் கிட்டினவர்களை மாம்ஸாஸ்ருகா(மா)தி மலரூபமான தேஹம் அபிப(லிஹ)வியாது. இத்தால் தேஹஸம்பந்தம் மேவிடாதென்றபடி. (கஉ)

பதவுரை.

| | |
|---|---|
| நெஞ்சே | நெஞ்சமே! |
| ஊனம் அறவந்து | நிஸ்ஸங்கோசமாகவந்து |
| உள்கலந்த | அந்தரங்கமாய்க்கலந்த |
| மால் இனிமையானது | ஸர்வேஶ்வரனுடையகலவியின்பத்[தை |
| அநுபவித்தற்கு | அநுபவிப்பதற்கு |
| ஆம் துணையா | அநுகூலமானதுணை அபேக்ஷிதமா[ய் |
| வானில் | பரமபதத்திலுள்ள |
| அடியார் | அடியார்களுடைய |
| குழாம் கூட | திரளிற்சேர்வதற்கு |
| ஆசை உற்ற | ஆசைப்பட்ட |
| மாறன் | ஆழ்வாருடைய |
| அடியாருடன் | அடியார்களோடே |
| ஆடு | நீ கூடிவாழ்வாயாக. (கரு) |

அவ:-பதின்மூன்றாம்பாட்டு. (ஊனமறவேவந்து) இதில் எம்பெருமான் "ஏகதத்வம்" என்னும்படி ஸம்ஶ்லேஷிக்க, தததுபவ ஸஹகாரிஸாபேக்ஷரா யருளிச்செய்த பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்.

எங்ஙனேயென்னில்; இப்படி ப்ராஸங்கிகமான பரோபதேசத்தைத் தலைக்கட்டின வநந்தரம், கீழ், தம்முடைய ஆர்த்திதீரவந்து கலந்த எம்பெருமானுடைய ஸம்ஶ்லேஷ ரஸத்தைப் பேசவொருப்பட்டு எப்பேர்ப்பட்ட இனிமையும் விளையும்படி தம்முடனே அ

வன்வந்து "ஸாஜ்ஞோ-ஸீதயாஸாயூ-ராமஸ்துஸீதயாஸார்த்தம்" (க) இத்யாதிப்படியே "ஏகதத்வம்" என்னலாம்படி கலந்தபடியை யும் அந்தக்கலவியால் வந்தரஸம் தம்மொருவராலு முண்டறுக்க வொண்ணுதபடி யளவிறந்திருக்கிற படியையுமநுஸந்தித்து, தனித் தேட்டமான இதரவிஷயங்கள் போலன்றிக்கே, துணைத்தேட்ட மாய், அதுக்கிவ்விபூதியிலாளில்லாமையாலே, "இவ்வநுபவத்தில் நிலைநின்ற நித்யஸூரிகள்திரளிலே போய்ப்புக்கநுபவிக்கப் பெறு வதெப்போதோ" என்று ப்ரார்த்திக்கிற * ஊனில்வாழிலர்த்தத் தை "ஊனமறவேவந்து" இத்யாதியாலே யருளிச்செய்கிருர்.

வ்யா;-(ஊனமறவேவந்துள்கலந்தமாலினிமையானது)அதாவது, "நித்யஸம்ஸாரி" என்று ஸங்கோசியாமல், ஸங்கோசமறஸர்வேஸ்வரன் வந்து "தானும் யானுமெல்லாந்தன்னுள்ளே கலந்தொழிந் தோம் தேனும்பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்தே" என் றும் "எனதாவியுள் கலந்த பெருநல்லுதவி" என்றும் "கனிவார் வீட்டின்பமே" என்றும், "அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித் தேனே" என்றும் இப்படி ஸர்வரஸங்களுமுண்டாம்படி அந்தரங்க மாகக்கலந்த கலவினினிமையானது - ஸஹ்ருதயமாகஸம்ஶ்லேஷித்த ஸாரஸ்யமானது,

(அநுபவித்தற்காந் துணையா) ஏவம்விதாஸ்பதையை யநுபவிக்கைக்கு "அடியார்கள்குழாங்களையுடன் கூடுவதென்று கொலோ" என்று - அநுகூலஸஹவாஸமபேக்ஷிதமாய், (வானிலடியார் குழாங்கூடவாசையுற்றமாறனடியாருடன் நெஞ்சே யாடு)* வையத்தடியவர்களன்றிக்கே, அநுபவத்துக்கு தேசிகரான வானிலடியார் குழாங்களுடனே கூடவேணுமென்று அபிநிவேசத் திலே யூன்றின வாழ்வாரடியாரான விங்குத்தை ஶ்ரீவைஷ்ணவர்க ளோடே நெஞ்சேகூடியாடு. அன்றிக்கே, அக்குழாத்திலே முழு கியநுபவிக்கப்பாரென்றுமாம். "அடியீருடன்கூடி நின்றாடுமினே" என்ருரிறே. (கரு)

(க) ரா-பா-எஎ-உ௫.

மூ.—ஆடி மகிழ்வானிலடியார் குழாங்களுடன்
கூடியின்பமெய்தாக் குறையதனால்—வாடிமிக
அன்புற்றார் தன்னிலைமையாய்ந் துரைக்கமோகித்துத்
துன்புற்றான்மாறனந்தோ. (கச)

பதவுரை.

| | |
|---|---|
| ஆடிமகிழ் | (பகவதநுபவத்தாலே) நர்த்தநம் பண்ணிக்களிக்கிற |
| வானில் | பரமபதத்தில் உள்ள |
| அடியார்குழாங்களுடன் | அடியார்களுடைய திரளோடே |
| கூடி | கலந்து |
| இன்பம் எய்தாக்குறையதனால்- | களிக்கப்பெறாத குறையாலே |
| மிகவாடி | மிகவும் வாட்டமடைந்து |
| அன்புற்றார் | திரவதிகஸ்நேஹயுக்தரானமதுரகவி முதலானோர் |
| தன்நிலைமை | தமது தசையை |
| ஆய்ந்து உரைக்க | ஆராய்ந்து சொல்லும்படியாக |
| மாறன் | ஆழ்வார் |
| மோகித்து | மோஹமடைந்து |
| துன்புற்றான் | துக்கித்தார்; |
| அந்தோ | ஐயோ!. (கச) |

அவ;—பதினாலாம்பாட்டு. (ஆடிமகிழ்வானில்) இதில் - ததீயரையுமவனையும் பிரிகையாலே மிகவும்தளர்ந்து, தாய்பேச்சாலே பேசுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்.

எங்ஙனேயென்னில், எம்பெருமானைப் பிரிந்த வளவன்றிக்கே, அவனுக்கு ப்ராணபூதரான நித்யஸூரிகளையுங் கூடப் பிரிகையாலே, தம்தசையைத்தாமறியாத படி மோஹிதராய்க் கிடக்கிற தம்படியைப் பார்ஸ்வஸ்தரான பரிவர் அவனுக்கு விண்ணப்பஞ் செய்கிற ப்ரகாரத்தைக் கலந்துபிரிந்துமோஹங்கதையான பிராட்டியுடைய விரஹபரவசவ்யாபாரோக்திகளை யநுகரித்து அவனுக்கறிவிக்கிற திருத்தாயார் பேச்சாலே யருளிச்செய்கிற * ஆடியாடியி லர்த்தத்தை "ஆடிமகிழ்" இத்யாதியாலேயருளிச்செய்கிறார்.

வ்யா;—(ஆடிமகிழ்வானிலடியார் குழாங்களுடன்கூடியின்ப மெய்தாக்குறையதனால் வாடிமிக) (ஆடிமகிழ்வானில்) பகவதநுபவத்திலே யவகாஹித்து ஹ்ருஷ்டராகிரவென்னுதல்; அன்றிக்கே, பகவதநுபவ ப்ரகர்ஷத்தாலே "நந்த்ருத்யந்தி கேசித்" (க) என்னும்படியாடி, அத்தாலே ஹ்ருஷ்டராகிறவென்னுதல். இப்படியானவானிலடியாருண்டு வைகுண்டவாஸிகளான நித்யஸூரிகள்; அவர்கள் ஸங்கத்திலே ஸங்கதராய், ஆநந்தத்தை யடையாத வபூர்த்தியாலே "வாடிவாடும்" என்றுமிகவாடி. (அன்புற்றார் தன்னிலைமையாய்ந்துரைக்க) "முயல்கின்றேனுன்றன்மொய்கழற்கன்பை" (உ) என்று நிரவதிகஸ்நேஹயுக்தரான மதுரகவிப்ரப்ருதிப்ரபுத்த(ஸ) ஸுஹ்ருத்துக்கள், இவர் வ்யாமோஹத்தை எம்பெருமானுக்கு நிரூபித்து, தம்முகேந "இதும் அவர் க்ருபாஸாத்யம்" என்று விஜ்ஞாபிக்கிறபடியை, தன்திறத்திலே பரிவுடைய திருத்தாயார் தன்ஸ்வபாவத்தை யாராய்ந்து பேசும்படியாக.

(மோகித்துத் தன்புற்றூன்மாறனங்கே) தாம் தம்தசையைப் பேசமாட்டாமல் பிறர்பேசும்படிமோஹித்து துக்கத்தை ப்ராப்தரானாழ்வார், ஐயோ. "ஊரவிஸ்யதநஃ-மமாப்வ்யதிதம்மநஃ" (ங) என்று, (ச) * அற்றபற்றர்க்கு மிரங்கவேண்டும் படியாயிறே இவர்தசையிருப்பது. அன்புற்றார் தன்னிலைமையாய்ந்துரைக்கையாவது-"ஸாதியம்-ஸாதியர்கூர்த்தவஞ்ச" (ரு) இத்யாதிப்படியே "எங்கும் நாடி நாடி நரசிங்காவென்று வாடி வாடும்" என்றும் "உம்மைக்காணுமாசையுள்நைகின்றாள், உம்மைக்காண நீரிரக்கமிலீரே" என்றும், "வண்டுதிவளுந்தண்ணந்துழாய்கொடீரென தவளவண்ணர் தகவுகளே." என்றும், "உம்மைத்தஞ்சமென்றிவள் பட்டனவே" என்றும் "நுமதிட்டமென்கொலிவ்வேழைக்கே" என்றும் "இவள் மாழைநோக்கொன்றும் வாட்டேன்மினே" என்றுமிப்புடைகளிலே யருளிச்செய்தவையென்கை. இப்படி தம்தசை தமக்கும் வாசாமகோசரமாய், கண்டாரெல்லாமிரங்க வேண்டும்படியா யிருக்குமாயிற்று. (கச)

(க) ரா-ஸு-கக-கச. (உ) கண்ணி-கO. (ங) ரா-ஸு-கக உஅ.
(ச) தி ச வி-ரு. (ரு) ரா-ஸு ஙக-கக.

மூ.—அந்தாமத்தன்பா லடியார்களோடிறைவன்
வந்தாரத்தான்கலந்த வண்மையினால்—சந்தாபம்
தீர்ந்தசடகோபன் றிருவடிக்கே நெஞ்சமே
வாய்ந்தவன்பை நாடோறும்வை. (௧௫)

---

பதவுரை.

| | |
|---|---|
| நெஞ்சமே | மனமே! |
| அம்தாமத்து அன்பால் | ஸ்ரீ வைகுண்டத்தில் பண்ணும்விருப்பத்தோடே |
| அடியார்களோடுவந்து | அஸ்த்ரபூஷண ப்ரமுகராயுள்ள நித்ய ஸூரிகளோடேகூடி (பரமபதத்தினின்றும்) வந்து |
| இறைவன் தான் | ஸர்வேஶ்வரன் |
| ஆர கலந்த வண்மையினால் | பரிபூர்ணமாகக் கலந்த ஔதார்யத்தாலே |
| சந்தாபம்தீர்ந்த | தாபமொழியப்பெற்ற |
| சடகோபன் | ஆழ்வாருடைய |
| திருவடிக்கே | ஸ்ரீபாதங்களிலே |
| வாய்ந்த அன்பை | பொருந்தின பக்தியை |
| நாள்தோறும் வை | எப்போதும் வைப்பாயாக. (௧௫) |

அவ; பதினைந்தாம்பாட்டு. (அந்தாமத்தன்பால்) இதில்-*ஆடியாடியில் விடாய்தீர * அடியார்கள் குழாங்களோடே வந்து கலந்தபடியைப்பேசின பாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; இவருடைய வார்த்திதீரவந்துகலந்து * வாட்டமில் புகழ்வாமனனானவன், ஆயிரமாண்டு முதலையின் கையிலேயகப்பட்டு இடர்பட்டவானையினிடரைச் சடக்கென வந்து போக்கினாப்போலே, * ஆடியாடியில்தான்பட்ட இடரெல்லாம் போம்படி, ஆசைப்பட்டபடியே அடியார்கள் குழாங்களோடே வந்து ஸம்ஶ்லேஷித்தருளக்கண்டு, தம்மோட்டைக் கலவியாலே அவன்வடிவிலே பிறந்த புதுக்கணிப்பை மண்டியநுபவித்து ப்ரீதராய்ச்செல்லுகிற * அந்தாமத்தன்பிலர்த்தத்தை * அந்தாமத்தன்பாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா;—(அந்தாமத்தன்பால்) அழகிய ஸ்ரீவைகுண்டதாமத்திற் பண்ணும் விருப்பத்தாலே. அத்தேசத்திலும் அத்தேசிகரிடத்திலு

மூண்டான அதிஸ்நேஹத்தாலே. (அடியார்களோடிறைவன்) அடி
யார்களுண்டு; அஸ்த்ரபூஷண ப்ரமுகராயுள்ள நித்யஸூரிகள்; அவர்
களோடேகூட ஸர்வேஶ்வரன் ஸபரிகரனாயுளனாம்படி ஸம்ஶ்லிஷ்ட
னாய். "அந்தாமத்தன்புசெய்தென்னாவி சேரம்மானுக்கந்தாமவாழ்
முடி சங்காழி நூலாரமுள" என்றத்தை நினைக்கிறது. (வந்தாரத்
தான் கலந்தவண்மையினால்) ஸர்வஸ்மாத்பரனானதான் பரமபதத்
தினின்றும் (க) *பரமபதமாபந்நரான விவரிருந்த விடத்தளவும்
வந்து பரிபூர்ணமாக ஸம்ஶ்லேஷித்த ஔதார்யத்தாலே. (சந்தா
பந்தீர்ந்த) விஶோதிதஜடஸ்ஸ்நாதஃ தஸ்தௌதத்ரஶ்ரியாஜ்வலந் -
விஶோதிதஜடஸ்ஸ்நாதஃ-தஸ்தௌதத்ரஶ்ரியாஜ்வலந்" (உ) ஸுதீவ
ராமஶ்ஶுஶுபே - அதீவராமஶ்ஶுஶுபே" (ங) என்னும்படி "செந்
தாமரைத்தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்
கள் செம்பொன் திருவுடம்பே" என்றும்; "திருவுடம்புவான்சுடர் -
என்னுள் கலந்தானுக்கே" என்றும்; "என்னுள் கலந்தவன் செங்
கனிவாய் செங்கமலம்மின்னுஞ் சுடர்மலைக்குக் கண்பாதங் கைகம
லம்" என்றும்; "எப்பொருளுந்தானாய் மரதகக்குன்றமொக்கும்"
என்றும் *வாட்டமில் புகழ்வாமனன் மலைபோலே பெருத்து
அவயவ ஸௌந்தர்யாதிகளையு முடையனாயிருக்கிறபடியை யநுப
வித்து ஸந்தாபமானது ஸவாஸநமாக நிவ்ருத்தமான. ஸந்தாபமா
வது - *ஆடியாடியில் - வாடுதல் இரக்கம் வெவ்வுயிர்தல் வாய்வெ
ருவுதல் உள்ளமுகவுருகுதல் உள்ளுளாவியுலருதல் தனநெஞ்சம்
வேதல் தொடக்கமானவை. *உள்ளுளாவியுலர்ந்தது தீர "அல்
லாவியுள்கலந்த" என்றும் "என்முடிவுகாணாதே யென்னுள் கலந்
தான்" என்றும் "என்னுள் கலந்தவன்" என்றுமிறே யருளிச்
செய்தது. (சந்தாபந்தீர்ந்த சடகோபன் திருவடிக்கே நெஞ்சமே
வாய்ந்தவன்பை நாடோறும் வை) வானோர் தனித்தலைவன்,
*அந்தாமத்தன்பு செய்யும்படியான ஆழ்வார் திருவடிகளிலே "உன்
றன் மொய்கழற்கன்பை முயல்கின்றேன்" (ச) என்கிறபடியே மந
ஸ்ஸே ஸஹஸங்கதமான ஸங்கத்தை நித்யமாக நிக்ஷிப்தயாக்கு. நிதி
யை அடியிலே யிட்டுவைப்பாரைப்போலே அன்பையடியிலே யிட்
டுவை. (கரு)

(க) வி-த-கூஅ. (உ) ரா-யு-கஙக-கரு. (ங) ரா-பா-எஎ-உகூ. (ச) கண்ணி-கப.

மூ.—வைகுந்தன் வந்து கலந்ததற் பின்வாழ் மாறன்
செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து-நைகின்ற
தன்மைதனைக்கண்டுன்னைத்தான் விடேனென்றுரைக்க
வன்மையடைந்தான் கேசவன் (கசு)

பதவுரை.

| | |
|---|---|
| வைகுந்தன் | நித்யவிபூதியுக்தன் |
| வந்து கலந்ததற்பின் | வந்து (தம்முடன்) கலந்தபிறகு |
| வாழ் | ஸத்தைபெற்ற |
| மாறன் | ஆழ்வார் |
| செய்கின்ற நைச்சியத்தை | செய்கிற நைச்யாநுஸந்தாநத்தை நோக்கி |
| சிந்தித்து | (ஈச்வரன்) விசாரமடைந்து |
| நைகின்ற தன்மைதனைகண்டு | சிதிலனாகிறபடியைப் பார்த்து |
| உன்னை விடேன் என்று உரைக்க | '(என்னுடைய பிரிவில்பயப்படுகிற) உன்னை நான் விடமாட்டேன்' என்றருளிச்செய்ய |
| கேசவன் | எம்பெருமான் |
| வன்மை அடைந்தான் | ஸ்தைர்யத்தை அடைந்தான். (கசு) |

அவ;—பதினாறும்பாட்டு (வைகுந்தன்) இதில்-"அப்பொழுதைக்கப்பொழுதென் னாராவமுதம்' என்றநுபவிக்கிறவிவர், 'அயோக்யன்' என்றகலிற்செய்வதென்" என்று ஈச்வரனதிசங்கை பண்ண, இவர் அஸ்தாநபயசங்கை பண்ணித் தேற்றினபடியைப் பேசுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்; ஸர்வேச்வரனோடே ஸம்ஸ்லேஷிக்கிறவிவர், 'அல்லாவியுள் கலந்த" என்று தம்சிறுமையை யநுஸந்திக்கையாலே, '*வளவேழுலகு தலையெடுத்து இன்னமுமிவர் நம்மைவிடிற்செய்வதென்" என்றதிசங்கைபண்ணி அவனலாமாக்கிற படியைக்கண்டு "இவனுக்கு நம்பக்கல் பாரதந்த்ர்ய வாத்ஸல்யங்களிருந்தபடியென்?" என்று விஸ்மிதராய், தாமகலாமைக் குறுப்பான பலவற்றையுஞ்சொல்லி அவனதிசங்கையைத் தீர்த்து, அவனை தரிப்பிக்கிற *வைகுந்தா மணிவண்ணனிலர்த்தத்தை "வைகுந்தன்" இத்யாதியாலேயருளிச்செய்கிறாரென்கை.

மூ.-கேசவனாலெந் தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும்
தேசடைந்தாரென்று சிறந்துரைத்த-வீசுபுகழ்
மாறன் மலரடியே மன்னுயிர்க்கெல்லாமுய்கைக்
காறென்று நெஞ்சேயணே. (௧எ)

வ்யா;—(வைகுந்தன் வந்து கலந்ததற்பின்) நித்யவிபூதியுக்தன் "அந்தாமத்தன்பு செய்தென்னாவிசேரம்மான்" என்னும்படி ஒரு நீராகக்கலந்த பின்பு (வாழ்மாறன்) அத்தாலேலத்தைப்பெற்று ஸம்பந்நரானவாழ்வார். (செய்கின்ற நைச்சியத்தைச்சிந்தித்து) இவர் "அல்லாவி" என்று அகலநினைக்கிறநைச்யாநுஸந்தாநத்தைக்கண்டு-"இதென்னைப் விளையக்கடவது" என்றீஸ்வரன்விசாரித்து (நைகின்ற தன்மைதனைக்கண்டு) அவன்ஸிதிலனாகிற ப்ரகாரத்தை தர்ஸித்து·

(உன்னைத்தான் விடேனென்றுரைக்க) இப்படியென் விஸ்லேஷத்தி லசிபி(ஸீ)ருவாயிருக்கிற உன்னைத்தான் விடேனென்று-'உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கெனவே' 'உன்னை யெங்ஙனம் விடுகேன்' 'அந்தமிலடிமை யடைந்தேன் விடுவேனோ' 'உன்னை நானடைந்தேன் விடுவேனோ' என்று ஈஸ்வரனைக் குறித்தருளிச்செய்ய-(வன்மையடைந்தான்கேசவன்)(௧)"விஜ்வரஃ ப்ரமுமோதஹ-விஜ்வரஃ ப்ரமுமோதஹ" என்னும்படி' * துளக்கற்றமுதமா யெங்கும் பக்கநோக்கறியாதே "என் மரதகமலையே" என்னும்படி ஸ்த்தைர்யத்தை ப்ராபித்தான் ப்ரஸஸ்தகேஸனானவன். (௩௬)

பதவுரை.

| | |
|---|---|
| நெஞ்சே | மனமே! |
| கேசவனால் | 'எம்பெருமானாலே |
| எந்தமர்கள் | அஸ்மதீயர்கள் |
| கீழ்மேல் எழுபிறப்பும் | கீழும்மேலு முண்டான ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் |
| தேசு அடைந்தார் என்று | ஒளி பெற்றார்கள்' என்று |
| சிறந்து உரைத்த | நன்றாக அருளிச்செய்த |
| வீசுபுகழ் | (எங்கும்) பரவுகின்ற கீர்த்தியை யுடையரான |

(௧) ரா-யு-௬௮௫.

| | |
|---|---|
| மாறன் | ஆழ்வாருடைய |
| மலர் அடியே | திருவடித்தாமரைகளே |
| மன் உயிர்க்கு எல்லாம் | நித்யமான ஆத்மாக்களுக்கெல்லாம் |
| உய்கைக்கு ஆறு என்று | உஜ்ஜீவநோபாயமென்று (நிச்சயித்து) |
| அணை | (அத்திருவடிகளை) ஆஶ்ரயிப்பாயாக. (கஎ) |

அவ:-பதினேழாம்பாட்டு. (கேசவனால்) இதில்-கீழ்மேலுண்டானவர்களெல்லாரும் தம்முடையஸம்பந்தத்தாலே பகவத்தாஸ்ய லாபத்தை லபித்தார்களென்று ஹ்ருஷ்டராய்ப்பேசுகிற பாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில், கீழ் - தம்மளவிலுண்டான வுகப்புத் தம்மொருவரளவிலும் சுவறிவிடுகையன்றிக்கே, தம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளளவும், "எமர் கீழ்மேலெழுபிறப்பும் விடியாவென் நரகத்தென்றுஞ் சேர்தல்மாறினர்" என்கிற -விரோதிநிவ்ருத்தி யளவுமன்றிக்கே, ப(ஶ)லத்தலும் வெள்ளமிட்டலை யெறிகிறபடியைக்கண்டு, "ஊரவெ்யஷயயாதவ-மமாப்யேஷ யதாதவ" (க) என்னும்படி ஒருவனுடைய வ்யாமோஹ மிருக்கும்படியே' என்று † வித்த(ஶ)ராய், தம்மையிப்படி ஸபரிகரமாக விஷயீகரிக்கைக்கடியான அவன்குணசேஷ்டிதங்களைத்திருத்வாதஶநாமமுகத்தாலே பேசி யநுபவித்து ப்ரீதராகிற கேசவன்றமரிலர்த்தத்தை "கேசவனலெந்தமர்கள்" இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

வ்யா:-(கேசவனலெந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்புந்தேசடைந்தாரென்று இறந்துரைத்த) 'எம்பிரானெம்மான் நாராயணனாலே- தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும்-கேசவன்றமரானார்கள்-மாசதிரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்றத்தை நினைக்கிறது. (கேசவனலெந்தமர்கள்) ஜகத்காரணபூதனாய், விரோதிநிரஸகரணமென்னுமவனாய், ப்ரஶஸ்தகேசனுமான வவனாலே மதீயர் தேசடைந்தாரென்று - தேஜஸ்ஸை ப்ராப்தரானார்களென்று. கேச

(க) ரா-யு-கக௩-௪0௧. † (பா) விஜ்வரராய்

வன்மையராகையிறே-இவர்களுக்குத்தேசு. தாஸ்யமிறே ஆத்மாவுக்கு தேஜஸ்கரமாவது; அத்தைத் தம்மோட்டை ஸம்பந்தத்தாலே கீழ் மேலுண்டான ஸம்பந்தி பரம்பரையிலுள்ளவர்களெல்லாரும் லபித்தார்களென்று, அந்தவுபகார கௌரவத்தாலே, அவன் குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாய் வைஷ்ணவத்வ சிஹ்நமாய் "கேசவன், நாரணன், மாதவன், கோவிந்தன், விட்டு, மதுசூதன், திரிவிக்கிரமன், வாமநன், சிரீதரன், இருடீகேசன், பற்பநாபன், தாமோதரன்" என்கிற திருத்வாதசநாமத்தைப் பேசியநுபவித்து ஹ்ருஷ்டராய், அத்தைப்படி நன்றாகவருளிச்செய்த. சிறப்பு - நன்றி. (வீசுபுகழ்மாறன்) ஸம்பந்திஸம்பந்திகளளவும் வைஷ்ணவத்வமேறிப்பாயும்படியான வைபவத்தால் வந்த ப்ரசுரமான - யஶஸ்ஸையுடையரான வாழ்வாருடைய.

(மலரடியேமன்னுயிர்க்கெல்லா முய்கைக்காமென்று) புஷ்பம் போன்ற திருவடிகளே நித்யமான வாத்மாக்களுக்கெல்லா முஜ்ஜீவிக்கைக்கு உசிதோபாயமென்று. (நெஞ்சேயணை) அவர்களிலே யொருவனாய் அம்ஶம்பெறும்படியான வெனக்கு உபகரணமாய் ஸௌமநஸ்ய முள்ளமநஸ்ஸே ப்ரஸந்நஸமமான திருவடிகளை நீயும் ஸமாஶ்ரயணம்பண்ணு.

"நாராயணனாலே" என்று-அவனுடைய ஸ்வீகாரமே நிரபேக்ஷோபாயமென்றதினநுவாதமான - கேசவனாலென்கிற விப்பதத்திலே - தத்விவரணமாக, "மாதவனென்றதே கொண்டு" என்றும், "எமர்கீழ்மேலெழுபிறப்பும் மேவும்தன்மயமாக்கினான்" என்றும், "என்னைக்கொண்டு" என்றும், தன்பேறானமைக்கு, "விட்டிலங்கு செஞ்சோதி" என்றும், "அம்மான்றிரிவிக்கிரமனை - எனக்கேயருள்கள்செய்ய-எனக்கென்ன-விதிசூழ்ந்தது" * என்றும், "தொழும்மனமே தந்தாய்" என்றும், "என்னைத்தீமனம் கெடுத்தாய்" என்றும், "உன்னையென்னுள் வைத்தனையென்னிருடீகேசனே" என்றும், "எற்பரனென்னையாக்கிக் கொண்டெனக்கே தன்னைத்தந்த கற்பகம்" என்றும், "தாமோதரனை" என்றுமருளிச்செய்த சந்தைகளு மநுஸந்தேயங்கள்.

(௧௭)

மூ.—அணைந்தவர்கட்டம்முடனேயாயனருட்காளாம்
குணந்தனையேகொண்டுலகைக்கூட்ட—இணங்கிமிக
மாசிலுபதேசம் செய்மாறன் மலரடியே
வீசுபுகழெம்மாவீடு. (௧அ)

பதவுரை.

| | |
|---|---|
| அணைந்தவர்கள் தம்முடனே | ஸர்வேஶ்வரனைக்கிட்டியடிமை செய்கிற நித்யஸூரிகளுடனே |
| ஆயன் அருட்கு ஆளாம் | கண்ணனுடைய க்ருபைக்குவிஷயமாம்படியாக |
| குணந்தனையேகொண்டு | மோக்ஷப்ரதத்வமாகிற குணமொன்றையேகொண்டு (திருத்தி) |
| உலகை | நித்யஸம்ஸாரிகளை |
| கூட்ட | (நித்யஸூரிகளோடு) சேர்க்க |
| மிகஇணங்கி | மிகவும் பொருந்தி |
| மாசு இல் | குற்றமற்ற |
| உபதேசம் | உபதேசத்தை |
| செய் | செய்தருளின |
| மாறன் | ஆழ்வாருடைய |
| மலர் அடியே | திருவடித்தாமரைகளே |
| வீசுபுகழ் | விக்யாதமான கீர்த்தியையுடைய |
| எம்மாவீடு | ஸர்வப்ரகாரத்தாலும் மேன்மையுடைய மோக்ஷம். (௧அ) |

அவ;—பதினெட்டாம்பாட்டு. (அணைந்தவர்கள் தம்முடனே) இதில் - மோக்ஷப்ரதத்வத்தையுபதேசித்த பாசுரத்தை அநுவதித்தருளிச்செய்கிறார். அது எங்ஙனேயென்னில்; இப்படி ஈஶ்வரன் ஸபரிகரமாக விஷயீகரித்து விடுகிற மாத்ரமன்றிக்கே முக்தப்ராப்யமான போகத்தைத் தமக்கும் தம்பரிகரத்துக்கும் தருவானாகப்பாரிக்கிற படியைக்கண்டு எல்லார்க்கும் தம்மோடே யொரு ஸம்பந்தம் ஸித்திக்கும்படி ஸம்ஸாரிகளுக்கு அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தையுபதேசிக்க, அவர்கள் அத்தைக்காற்கடைக்கொள்ள ஸ்வலாபத்தைப்பேசி த்ருப்தராகிற * அணைவதரவணையிலர்த்தத்

னதை "அணைந்தவர்கள் தம்முடனே" என்றருளிச்செய்கிறானகை.

வ்யா;-(அணைந்தவர்கள்தம்முடனே)*அணைவதரவணைமிற்படியே ஸ்ரீபூமிநீளாநாயகனும் அநந்தபோக(ஹோம்)பர்யங்கத்திலேயெழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனைக்கிட்டியடிமை செய்கிற அநந்த ர முகரானஸூரிஸங்க(ஜ)ங்களோடே கூட்டவென்னுதல்; அன்றிக்கே "கேசவன்தமர்" என்னும்படி இமே அந்தரங்கரானவர்கள் † தங்களோடே கூட்டவென்னுதல். தம்முடனே யென்கிறது - ஆழ்வார் தம்முடனே யென்னவுமாம், (தம்முடனே-அணைந்தவர்கள்) "எமர்" என்று தாமபிமானிக்கும்படியாகத் தம்மோடேயந்வயமுண்டாம்படியானவர்களென்னுதல்.

(ஆயனருட்காளாம் குணந்தனையே கொண்டு) "எப்பொருட்கும் - இணைவனும்" என்று ஆஶ்ரிதஸுலபனையவதரித்த க்ருஷ்ணனுடைய க்ருபைக்கு விஷயமாம்படியாக. மேலும் "என் கண்ணனை நான் கண்டேனே" என்றாரிறே. ஏவம்விதனானவனுடைய மோக்ஷப்ரதத்வமாகிற குண மொன்றையுமே கொண்டென்னுதல். அன்றிக்கே, "குணங்களையேகொண்டு" என்று பாடமானபோது-"வீடு முதலாம்" என்கிறமோக்ஷப்ரதத்வாதி குணங்களையே யுபாயாந்தர நிரபேக்ஷமாகத் திருத்துகைக்குப்பரிகரமாகக்கொண்டென்னுதல். அவ்வவதாரத்திலேயிறே இடைச்சி, இடையன், தயிர்த்தாழி, கூனி, மாலாகாரர் பிணவிருந்து, வேண்டடிசிலிட்டவர்கட்கெல்லாம் மோக்ஷம் கொடுத்தது. "இணைவனாமெப்பொருட்கும் வீடு முதலாம்" என்று- அவதாரஸாமாந்யமாய், வேடன், வேடச்சி, பக்ஷி, குரங்கு, சராசரங்களுக்கும் மோக்ஷம் கொடுத்தமையுண்டாயிருக்கவும், "ஆயனருட்கு" என்றத்தைப்பற்ற - க்ருஷ்ணாவதாரத்திலே யூன்றிச் சொல்லிற்று. "மஹூ மோ கா ந ந-ஊ ஹா ந - கச்சலோகாநநுத்தமாந்" (ரு) என்றிறே பெருமாள் பெரிய உடையாருக்கு ப்ரஸாதித்தது. இப்படியவதாரத்திலே மோக்ஷப்ரதத்வாதி குணங்களைக்கொண்டு திருத்தி.

(உலகைக்கூட்டவிணங்கிமிக) நித்யஸம்ஸாரிகளை நித்யஸூரிகளோடே கூட்டமிகவுமிணங்கி-மிகவும்பொருந்தி. அவர்கள் துர்க்

(க) ரா-ஆ கா அ-௩௦. † (பா) என் தங்களோடே.

மூ—எம்மா வீடும் வேண்டாவென்றனக்குன் றாளிணையே
அம்மா வமையுமெனவாய்ந் துரைத்த—தம்முடைய
வாழ்முதலா மாறன் மலர்த்தாளிணை சூடிக்
கீழ்மையற்று நெஞ்சே கிளர். (௧௯)

---

கதியை ஸஹிக்க மாட்டாமல் அவர்களோடே இணக்குப் பார்வை போலே ஸஜாதீயராயிணங்கி. [ஆயனருட்காளாம் குணங்களையே கொண்டுலகை - அணைந்தவர்கள் தம்முடனே கூட்ட - மிக விணங்கி] என்றந்வயம். (மிக - இணங்கிமாசி லுபதேசம் செய்மாறன்) க்யாதிலாபபூஜாதிதோஷரஹிதமாயிருக்கும் ஸத்தோபதேசத்தை மிகவுமடுத்தடுத்துப்பண்ணும்பரிசுத்தஜ்ஞானரான வாழ்வார். “இணைவனுமெப்பொருட்கும் வீடுமுதலாம்” என்றும், “பிறவிக்கடல் நீந்துவார்க்கு புணைவன்” என்றும் “புலனைந்துமேயும் பொறியைந்து நீங்கி நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர் - பலமுந்து சீரில் படிமின்னொவாதே” என்றுமிறே யுபதேசித்தருளிற்று. (மாசி லுபதேசம்செய்மாறன் மலரடியே) ஏவம்விதோபதேஷ்டாவான ஆழ்வாருடைய புஷ்பஹாஸஸுகுமாரமான திருவடிகளே. (வீசுபுகழெம்மாவீடு) “[illegible] - பரமே வ்யோமந்” (௧) என்று விக்யாதமான யஶஸ்ஸையுடைய ஸர்வப்ரகார விலக்ஷணமோக்ஷம். ஆழ்வார்க்கு * செம்மாபாதமிறே எம்மாவீடு, இவர்க்கு மாறன் மலரடியாயிற்று; (௨)*[illegible]-விபூதிஸ் ஸர்வம் [illegible] யாமுந-ஸ்ரீமத்ததங்க்ரியுகளமிறே. (௧௮)

---

பதவுரை.

| | |
|---|---|
| அம்மா | ‘ஸ்வாமிந்!’ |
| எம்மா வீடும்வேண்டா | எல்லாவகையாலும் மேலான மோக்ஷமும் வேண்டா, |
| என்றனக்கு | அடியேனுக்கு |
| உன்தாளிணையே | தேவரீருடைய திருவடிகளே |
| அமையும் என | போதும், என்று |
| ஆய்ந்து உரைத்த | ஆராய்ந்து அருளிச்செய்தவரும் |

---

(௧) தை-ஆ ௧. (௨) ஸ்தோ-௫.

| | |
|---|---|
| நம்முடைய வாழ்முதலாம்மா றன் | நம்முடைய வாழ்ச்சிக்குக் காரணமானவருமான ஆழ்வாருடைய |
| மலர்த்தாளிணை | திருவடித்தாமரைகளை |
| சூடி | ஶிரஸாவஹித்து |
| கீழ்மை அற்று | அதமபுருஷார்த்தங்களில்விருப்பமற்று |
| நெஞ்சே | மனமே! |
| கிளர் | மேன்மேலுங் கிளரக்கடவை (கக) |

அவ;—பத்தொன்பதாம்பாட்டு. (எம்மாவீடும்) இதில்-ப்ராப்ய நிஷ்கர்ஷம் பண்ணின பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்; பிறர்க்கு "அவன் மோக்ஷப்ரதன்" என்னுமத்தை யுபதேசிக்கிற வளவில், முதல், நடுவு, இறுதி, இவர் மோக்ஷத்தை ஶ்லாகித்துக்கொண்டு பேசுகையாலே, "இவருக்கு மோக்ஷத்திலே அபேக்ஷையாயிருந்தது" என்றீஶ்வரன் அத்தைக்கொடுக்கப்புக, தமக்குஉகப்பாகத்தரும் மோக்ஷமும் அஹங்கார கர்ப்ப(முஹ-ல்) மாகையாலே "அபுருஷார்த்தம்" என்று அத்தைக் கழித்து; "பரமபதஸ்தனுப் ஸுகிக்கவுமாம், ஸம்ஸாரஸ்தனுய்துஃகிக்கவுமாம், எனக்கு அதிலொருநிர்ப்பந்தமில்லை,தேவர்க்குறுப்பாமதுவே எனக்குவடிவாம்படி பண்ணி யருளவேணுமென்று ஸ்வப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிற * எம்மாவீட்டிலர்த்தத்தை "எம்மாவீடும் வேண்டா" என்று தடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா;-(எம்மாவீடும் வேண்டாவென்றனக்குன்றாளிணையேயம்மாவமையுமெனவாய்ந்துரைத்த) எவ்வகையாலும் விலக்ஷணமான மோக்ஷமும்வேண்டா; ஶேஷபூதனான வெனக்கு "யாவஞ்சரணௌ-ஶிரஸாயாராயிஷ்யாமி - யாவந்சரணௌ - ஶிரஸாதாரயிஷ்யாமி" (க) என்னும்படி ஶேஷியானதேவருடைய அங்க்ரியுகளமே யமையுமென்று உபபாநுகுணமாக முக்தியையாராய்ந்து தலைசேர நிஷ்கர்ஷித்தருளிச்செய்த. வாய்ந்தென்று-இவ்வர்த்தத்திலே பொருந்தியென்றுமாம். இது - * எம்மாவீட்டையடியே தடங்கி அடியொத்தினபடி;

(க) ரா-அ-கூஅ-அ.

மூ.—கிளரொளிசேர் கீழுரைத்த பேறுகிடைக்க
வளரொளிமால் சோலைமலைக்கே-தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனும் நீடுபுகழ் மாறன்றாள்
முன்செலுத்துவோமெம்முடி. (௨௦)

"நின் செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்று தொடங்கி, "உன்பொன்னடிச்சேர்த்து" என்றிறே தலைக்கட்டித்தானிருப்பது. "தாளிணையே" என்கையாலே —"தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்றது ஸூசிதம்; திருமுடியைத்திருவடிகளுக்குப்பாதபீடமாக்குகிறது அத்யந்தபாரதந்த்ர்யமிறே (நம்முடையவாழ்முதலாமாறன்) நம்முடைய ஸ்வரூபாநுரூபமான ஸம்பத்துக்கடியாமாய்வார். ஆழ்வாருடைய வாழ்வுக்கடி "தனியேன் வாழ்முதலே" என்கிறவீஸ்வரனாயிருக்கும்; இவருடைய வாழ்வுக்கடி ஆழ்வாராயிருக்கும். (மலர்த்தாளிணைசூடி)(க)"கோலமாமென்சென்னிக்குன்கயலமன்னகுரைகழலே" 'பாதபற்புத்தலைசேர்த்து" என்கிறபடியே செவ்விப்பூச்சூடுவாரைப்போலே பூப்போன்ற அடியிணையைச்சூடி. (கீழ்மைபற்று நெஞ்சேகிளர்) ததிதரஸேவையாகிற தாழ்ச்சியற்று ஆழ்வார் ஸேவையாலே ஸத்தைபெற்று மநஸ்ஸே மயங்காமல் மேலமேலனக்கிளர்ந்துபோரு. (கக)

பதவுரை.

| | |
|---|---|
| கிளர் ஒளிசேர் | அதிசயமான ஒளியையுடையதும் |
| கீழ் உரைத்த | கீழேசொல்லப்பட்டதுமான |
| பேறு | புருஷார்த்தம் |
| கிடைக்க | கிடைப்பதற்காக |
| வளரொளிமால் சோலைமலைக்கே | நாளுக்குநாள் வளர்ந்து வருவதான ஒளியை யுடையபெருமான் வர்த்திக்கிறதிருமாலிருஞ்சோலை மலைக்கே |
| தளர்வு அறவே | தளர்ச்சியில்லாமல் |
| நெஞ்சைவைத்து | மநஸ்ஸை வைத்து |
| சேரும் எனும் | பேர்ய்ச்சேருங்களென்றருளிச்செய் [த |

| | |
|---|---|
| நீடுபுகழ் | பெரும்புகழையுடைய |
| மாறன் | ஆழ்வாருடைய |
| தாள்முன் | திருவடிகளின் முன்பே |
| எம்முடி | எம்முடைய தலையை |
| செலுத்துவோம் | வைக்கக்கடவோம். (௨௦) |

அவ;—இருபதாம்பாட்டு (கிளரொளிசேர்) இதில் - "ஸர்வ ப்ரகாரத்தாலும் திருமலையை யாஶ்ரயிக்கையே புருஷார்த்த ஸாதநம்" என்று பரோபதேசம் பண்ணுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அன்றிக்கே ஸ்வயம் புருஷார்த்தமாக வநுபவிக்கிற ப்ரகாரத்தை யநுவதித்தருளிச் செய்கிறாரென்றாகவுமாம். எங்ஙனேயென்னில்; * எம்மா வீட்டில் ஸ்வப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறவளவில் "ஒல்லை" "ஒல்லை" என்று இவர் த்வரிக்கப்புக்கவாறே, இவர் த்வரைக்கநுகுணமாக இங்கே யிவ்வுடம்போடே கிட்டியடிமை செய்யலாம்படி தெற்குத் திருமலையில் தான் நிற்கிறபடியை இவர்க்குக்காட்டிக்கொடுக்க, அத்தையநுஸந்தித்து, அவனிலுமவனுகந்து வர்த்திக்கிற தேசமே ப்ராப்யமென்று நினைத்து, திருமலையாழ்வாரைப் பெரியவாதரத்தோடே யநுபவித்து ப்ரீதராய், ஸம்ஸாரிகளையும் அங்கே யாஶ்ரயிக்கும்படி பரோபதேசம்பண்ணுகிற * கிளரொளியிளமையிலர்த்தத்தை "கிளரொளி சேர்" இத்யாதியாலே யருளிச்செய்கிறார்.

வ்யா;-(கிளரொளிசேர் கீழுரைத்தபேறு கிடைக்க) அதிஶயமான வௌஜ்வல்யத்தை யுடைத்தாய் கீழுக்தமான * எம்மாவீட்டில் ப்ராப்யமானது லபிக்கைக்காக. (வளரொளிமால் சோலைமலைக்கே) "பயிலும் சுடரொளிமூர்த்தியை" (க) என்னும்படி, இளரொளிமாயோனாய், நாள் செல்ல நாட்செல்ல வளர்ந்து வாரா நின்றுள்ள வொளியையுடைய ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருமாலிருஞ் சோலைமலைக்கே. (தளர்வறவே நெஞ்சைவைத்துச் சேருமென்னும்) பகவத்ஸ்மரணாஹித்யமாகிற வநர்த்தமின்றிக்கே அவன் வர்த்திக்கிற திருமலையிலே மநஸ்ஸை வைத்தாஶ்ரயியுங்கோளென்றருளிச் செய்யும்.

(க) தி-வாய்-உ-எ-க.

தளர்வு-மநோதௌர்ப்பல்யம். (அபவே) அதில் நீக்கேயென்றபடி ஸுப்ராப்யமான ( *பாதபற்புக்கு, *தென்னனுயர் பொருப்பை ப்ராபகமாக விதித்தபடி. இது * வன்றுட்சிமயமாகையாலே ஆஸ்ரயிக்கைக்கடியுடைத்து. 'சரண்கொள் வீடுதரும் தடங்குன்றமே' இப்படி (நெஞ்சை வைத்துச்சேருமெனும்) நெஞ்சை வைத்துச் சேருமென்கிறதுக்கு மூலம்-"கிளரொளியிளமை" என்கிறபாட்டு. "மாநஸ்ரத்தை மாறுவதற்குமுன்னே" என்றிறே அதுக்கர்த்தமருளிச் செய்தது. "உய்த்துணர்வென்னு மொளி கொள் விளக்கு" (க) என்னக்கடவதிறே. சேருமென்றது-"கிளரொளியிளமை கெடுவதன்முன்னம்" என்கிற முதற்பாட்டு ப்ரதாநமாய், "போதவிழ்மலையே புகுவது பொருளே" என்னுமளவு மருளிச்செய்தவை.

அதாவது -"சார்வதுசதிரே, "எத்தியெழுவதுபயனே" "அயன்மலையடைவதுகருமமே" "திருமலையதுவேயடைவதுதிறமே" "நெறிபடவதுவே நினைவது நலமே" "ப்ரதக்ஷிணஞ்சகுர்வாணா ஸ்ரீத்ரகூடம்மஹாகிரிம் - ப்ரதக்ஷிணஞ்ச குர்வாணஸ்சித்ரகூடம்மஹாகிரிம்" (உ)என்னும்படி "வலம்செய்துநாளும் மருவுதல் வழக்கே" "தொழக்கருதுவதே துணிவதுசூதே" "போதவிழ்மலையேபுகுவதுபொருளே" என்று -திருமலையோடு, அத்தோடு சேர்ந்த அயன்மலையோடு, புறமலையோடு, திருப்பதியோடு, போம் வழியோடு, "போகக்கடவோம்"என்று துணிந்த துணிவோடுவாசியற ப்ராப்யாந்தர்க்கதமாய்ஸ்வாநுபவகர்ப்ப(ஸஹ)பரோபதேசமுகேநவநுபவித்துஇனியராகிறப்ரகாரமும் இவர்க்கிப்பாட்டிலேவிவக்ஷிதம். "அந்தர்க்கதகுணோபாஸநத்தை மதித்துப்பெருக்கிமூழ்கியமுங்கிழ்மைவலஞ்சூழ்துசெய்திளமைகெடாமல்செய்யும்க்ஷேத்ரவாஸஸங்கீர்த்தநாஞ்ஜலி ப்ரதக்ஷிணாதிசிந்தநாத்யங்க யுக்தமாச்சுகிறுர்ரண்டாம்பத்தில்" (௩)என்றிறேநாயனாருபாயபரமாகவருளிச்செய்தது; ஆகையால், திருமலையை ப்ராப்யதயாவும் ப்ராபகதயாவு மாஸ்ரயிக்கும்படி யருளிச்செய்யக்குறையில்லையிறே. (நெஞ்சைவைத்துச் சேருமெனும் நீடுபுகழ்மாறன் தாள்)இப்படிபராநர்த்தம்கண்டு பரோ

(க) ௩-திருவ-௯௪. (உ) ரா-அ-௯௩-௩. (௩) ஆசார்யஹ்ரு

மூ.—முடியார் திருமலையில் மூண்டுநின்றமாறன்
அடிவாரந்தன்னிலழகர்-வடிவழகைப்
பற்றிமுடியுமடியும் படிகலனும்
முற்றுமநுபவித்தானமுன். (உக)

பதேசம் பண்ணுகையாலே நெடுகிப்போருமதாய், அததாலே சிக்ப மான யசஸ்ஸையுடைய ஆழ்வார் திருவடிகளில். (முன்செலுத்து வோமெம்முடி) அவர் திருவடிகளின்முன்பே நம்முடைய தலைசே ரும்படி நடத்துவோம். "ஸ்ரீ ...... - ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமிமூர்த்நா" (க)என்னக்கடவதிறே இனி அவரடியறியவேயிறே வேண்டுவது. அன்றிக்கே ஆழ்வார் திருவடிகள் நம்சென்னியிலே சேருவதற்குமுன்னமே நாம்முற்பட்ட ராய் முடியைச்செலுத்துவோமென்றாகவுமாம். (உ0)

பதவுரை.

| | |
|---|---|
| முடி ஆர் | கொடுமுடிகள் நிறைந்த |
| திருமலையில் | திருமலையிலே |
| மூண்டு நின்ற | மண்டி அநுபவித்த |
| மாறன் | ஆழ்வார் |
| அடிவாரம்தன்னில் | திருத்தாழ்வரையிலே |
| அழகர் | அழகருடைய |
| வடிவு அழகைப்பற்றி | திவ்யவிக்ரஹ ஸௌந்தர்யத்தைப் பற்றி |
| முடியும் | கிரீடமும் |
| அடியும் | சிலம்பும் |
| படிகலனும் | திருமேனியிலுள்ள மற்ற ஆபா ணங்களுமாகிய |
| முற்றும் | முழுமையும் |
| முன் | முற்காலத்தில் |
| அனுபவித்தான் | அநுபவித்தார். (உக) |

அவ;—இருபத்தோராம்பாட்டு. (முடியார்திருமலையில்) இதில் திருமலையிலே கல்ஸ்தரான அழகருடைய வழகை, முழுதமநு பவித்த பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார்.

(க) ஸ்தோ-ர.

அது எங்ஙனேயென்னில்; கீழ் - அயன் மலையோடு புறமலையோடு திருப்பதியோடு உத்தேஸ்யமாகத் திருமலையாழ்வாரையநுபவித்துக்கொண்டு வருகிற * மருளில் வண் குருகூர்வண் சடகோபனை ஆழ்வார் (க) "வடமாமலையுச்சி" என்கிறபடியே அம்மலையிலே யொருகொடிமுடியென்னலாம்படியாயும், அதுக்கவயவமாயிருப்பதொரு கல்பகதரு பஹுஸாகமாகத் தழைத்துப்பூத்தாப்போலேயுமாயிருக்கிற (உ) * மேலிரும் கற்பகமான அழகருடைய திவ்யாவயங்களுக்கும் திருவணிகலன்களுக்கு முண்டான ஸௌக(வு)மார்த்தவத்தையும், வேதவைதிக புருஷர்களாலு மளவிடவொண்ணாதபெருமையையும், அத்தையும் விளாக்கொலைகொள்ளும்படியான ஆஸ்ரிதவாத்ஸல்யத்தையுமநுபவித்து விஸ்மிதராகிற * முடிச்சோதியிலர்த்தத்தை "முடியார் திருமலையில்" என்று தொடங்கியருளிச்செய்கிறார்.

வ்யா; — (முடியார் திருமலையில் மூண்டு நின்ற மாறன்) "विराजते वृषाद्रेश्च शिखरं समधात् इव। भूषितो भूपतिरिव किरीटेनार्कवर्चसा" - "விராஜதேவ்ருஷாத்ரேஸ்சஸிகரம் தமதாதுபி: । பூஷிதோபூபதிரிவகிரீடேநார்க்கவர்ச்சஸா" என்கிறபடியே * விண்முதல் நாயகன் நீண்முடியோடொத்த * மதி தவழ்குடுமிதொடக்கமான கொடுமுடிகளாலே மிக்கிருப்பதாய், (௩) "ஆயிரம் பைந்தலையவநந்தன்" என்னும்படியான திருமலையாழ்வாரிலே மண்டியநுபவித்த வாழ்வார். (அடிவாரந்தன்னிலழகர் வடிவழகைப்பற்றி) திருமலையில் திருத்தாழ்வரையிலே * மாலிருஞ்சோலையென்னும் மலையையுடையமலையான வழகர் திவ்யாத்மஸ்வரூபம், திவ்யகுணம் முதலாயுள்ளவை யெல்லாம் குமிருக்கும்படி அவர் திவ்ய விக்ரஹஸௌந்தர்யத்தை யநுபா(ஸா)வ்ய விஷயமாகப்பற்றி. அத்தையநுபவிக்குமிடத்தில்.

(முடியுமடியும் படிகலனும் முற்று மநுபவித்தான் முன்) "முடிச்சோதியாயுனதுமுகச்சோதி மலர்ந்ததுவோ, அடிச்சோதி நீ நின்ற தாமரையாயலர்ந்ததுவோ, படிச்சோதி யாடையொடும் பல்கலனாய் நின் பைம்பொற்கடிச்சோதி கலந்ததுவோ திரு

(க) தி-மொ-எ-௧௦-௩ (உ) பெரி-தி-ச-௩-௧௧. (௩) பெ-ரி-தி-ச-௩-௧௦.

மூ.—முன்னமழகரெழில் மூழ்குங்குருகையர்கோன்
இன்னவளவென்ன வொணக்கரிதாய்த்-தென்ன
கரணக்குறையின் கலக்கத்தைக் கண்ணன்
ஒருமைப்படுத்தானொழித்து. (உஉ)

---

மாலே கட்டுரையே" என்று - அபரிச்சேத்யமாம்படியை யருளிச்செய்ததைத் யடியொத்தினபடி. (க) "ஸௌவம் ஸம் ஹாநநம் ஓஜஸ்ஸ்ரீ - ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் - ரூபம் ஸம்ஹநநம் லக்ஷ்மீம் - தத்ருஶுர்விஸ்மிதாகாரா:" * என்னக்கடவதிறே; (முடியுமடியும்) கிரீடாதி நூபுராந்தமாக வநுபவித்தபடி. (படிகலனும்) நடுவுள்ளவையாய்ப்படியிலேயுள்ள திருவாணிகலன்களென்னுதல்; படிந்து ஸங்க(வ)டிதமானவையென்னுதல். முடிகொண்டான்வெள்ளக்கால்கள ய்ப்பின்பு பெருவெள்ளமாய் நட்டாறுப்சுழித்து அரையாற்றுக்கடியானபடி.

இப்படி * ஸௌந்தர்ய ஸாகரதரங்கதாடந தரளசித்தவ்ருத்தியாய். (முற்று மநுபவித்தான் முன்) முழுதுமநுபவித்தார் முற்காலத்திலேயென்னுதல், மூன்னுறமுன்ன மநுபவித்தாரென்னுதல். முற்றுமென்கிறது-"முடிச்சோதி" என்கிற பாட்டிலுக்தமானவையெல்லாமென்னுதல்; மற்றும் "கட்டுரைக்கில்-சுட்டுரைத்த நன்பொன்னுன் திருமேனியொளியொவ்வாது" என்றும், "பரஞ்சோதி" என்றும், "கின்மாட்டாயமலர்புரையுந்திருவுருவம்" என்றும், "மலர்கதிரின் சுடருடம்பாய்" என்றும், "போதுவாழ் புனந்துழாய்முடியினாய்பூவின்மேல்மாதுவாழ்மார்பினாய்" என்றும், "மாசூணச்சுடருடம்பாய்" என்றும், "உன் சுடர்ச்சோதி" என்றும்-முதற்பாட்டின் விவரணமாகவருளிச்செய்தவையாகவுமாம்.

---

பதவுரை.

| | |
|---|---|
| முன்னம் | முன்னமே |
| அழகர் | அழகருடைய |
| எழில் | வடிவழகிலே |
| மூழ்கும் | அழுந்தின |
| குருகையர்கோன் | ஆழ்வார் |

---

(க) ரா-ஆ-கக.

| | |
|---|---|
| இன்ன அளவென்ன | 'இவ்வளவென்று பரிச்சேதிக்க |
| எனக்கு | (மயர்வற மதிநலமருளப்பெற்ற) எனக்கும் |
| அரிது ஆய்த்து என்ன | கஷ்டமாயிற்று'என்றருளிச்செய்ய, |
| கரணக்குறையின் கலக்கத்தை | கரண ஸங்கோசத்தாலுண்டான கல்மஷத்தை (அஜ்ஞானத்தை) |
| கண்ணன் | எம்பெருமான் |
| ஒழித்து | தவிர்த்து (உஉ) |
| ஒருமைப்படுத்தான் | அந்தமசஸ்ஸை ஒருநீராக்கினான். |

அவ.—இருபத்திரண்டாம்பாட்டு. (முன்னமழகர்) இதில் - 'ஸௌந்தர்யாதிகள் † முகந்து கொண்டநுபவிக்கவொண்ணாமைக்கு ஹேது-கரணஸங்கோசம்'' என்றுகலங்க, அந்தக் கலக்கத்தை அவன் தீர்த்தபடியைப்பேசின பாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார்.

எங்ஙனேயென்னில்; கீழ் அழகருடைய அழகு முதலானவற்றை யநுபவிக்கப் புக்கவிடத்தில் விளாக்கொலை கொண்டநுபவிக்க வொண்ணாதொழிய, "அதுக்கடி-விஷயபௌஷ்கல்யம்" என்றறிய மாட்டாமல் "கரணஸங்கோசம்" என்றநுஸந்தித்து, "இஸ்ஸங்கோசமற்றுத்தன்னையநுபவித்து வாழுகைக்கு உடலாக அவன் பண்ணின ஸ்ருஷ்ட்யவதாராதிகளைத்தப்பி அநர்த்தப்பட்ட நான் இனி அவனைக்கிட்டுகையென்றொரு பொருளுண்டோ" என்று சோகபரவசராய்க்கூப்பிட்ட * முந்நீர் ஞாலத்தினர்த்தத்தை "முன்னமழகரெழில்" என்று தொடங்கி யருளிச்செய்கிறார்.

வ்யா.—(முன்னமழகரெழில் மூழ்கும்) முந்துறமுன்னம் ஸ்வரூபகுணாதிகளிலகப்படாதே, அழகருடைய வழகிலே யாயிற்றகப்பட்டது. மூழ்குகையாவது - அந்த ஸௌந்தர்ய ஸாகரத்திலே ஆழங்காற்பட்டழுந்துகை. இப்படி ஸௌந்தர்யஸாகரத்திலே மக்நரான வாழ்வார். (இன்னவளவென்ன) இவ்வளவென்று பரிச்சேதிக்க. (எனக்கரிதாய்த்தென்ன) * மயர்வறமதிநலமருளப்பெற்ற வெனக்கரிதாயிற்றென்றருளிச்செய்ய. 'திருமாலே

† (பா) முகந்துகொண்டு.

மூ.—ஒழிவிலாக்கால முடனாகிமன்னி
வழுவிலாவாட்செய்யமாலுக்கு—எழுசிகர
வேங்கடத்துப்பாரித்த மிக்கநலம்சேர் மாறன்
பூங்கழலைநெஞ்சே புகழ். (உ௬)

கட்டுரையே" என்று-அவளோட்டைச்சேர்த்தியாலே * எல்லையில் ஞானத்தனாய் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனானவனைக் கேட்கையாலே, "தமக்குப் பரிச்சேதிக்கவரிது" என்னுமிடந்தோற்றுகிறது.

(கரணக்குறையின் கலக்கத்தை) அவனநுபவ பரிகாரமாகக்கொடுத்த கரண ஸங்கோசத்தால் வந்தகாலுஷ்யத்தை. அஜ்ஞதையை. அதாவது - "அந்நாள்நீதந்தவாக்கையின்வழியுழல்வேன்" "வினைகளைவேரறப் பாய்ந்தெந்நாள் யானுன்னை யினிவந்து கூடுவன்" "பன்மாமாயப்பல்பிறவியிற்படுகின்றயான்தொன்மாவல்வினைத்தொடர்களை முதலரிந்து நின்மாதாள் சேர்ந்து நிற்பதெஞ்ஞான்றுகொலோ" "பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலறு சொல்லாயானுன்னைச்சார்வதோர் சூழ்ச்சியே" என்றித்யாதிகளிலநுளிச் ~ சய்தவை. (க) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ... லங்காமுந்மூலிதாம் க்ருத்வாகதா த்ரக்ஷ்யதிமாம்பதிः" இறே. இப்படி கரணஸங்கோசமடியாகவந்த கண்கலக்கத்தை. (கண்ணெனுருமைப்படுத்தாளொழித்து) (உ) "ஜாநா.... மா..." என்று ஆஸ்ரிதருடையஸோகநிவர்த்தகனான க்ருஷ்ணன் அக்ரூஸங்கே. சநிபந்தநமாய் வந்த துஃக்கத்தைப்போக்கிக்கொடுத்து, அக்கரணங்களைக்கொண்டநுபவிக்கும்படி திருவுள்ளத்தை ஒருதலைக்கும்படி பண்ணினான். "கலைப்பல் ஞானத்தென் கண்ணனைக்கண்டுகொண்டு நிலைப்பெற்றென்னெஞ்சம்பெற்றது நீடுயிர்" என்றத்தைநினைத்தருளிச்செய்தபடி. கரணஸங்கோசமுடையதிர்யக்குக்களும் பரிசர்யை பண்ணும்படியான பெரிய திருமலையில் நிலையைக்காட்டி ஸமாதானம் பண்ணினானாயிற்று. (உ௨

பதவுரை.

| | |
|---|---|
| ஒழிவிலாக்காலம் | ஸர்வகாலங்களிலும் |
| உடனாகிமன்னி | கூடவேயிருந்து |

(க) ரா-ஸு-கூள கூ. (உ) கீ-கஅ-ககூ.

| | |
|---|---|
| மாலுக்கு | எம்பெருமானுக்கு |
| வழு இலா ஆள்செய்ய | குற்றமற்ற கைங்கர்யம் பண்ண |
| எழுசிகரம் | ஓங்கின சிகரங்களையுடைய |
| வேங்கடத்து | திருமலையிலே |
| பாரித்த | உத்ஸாஹித்து |
| மிக்கநலம்சேர் | அதிக ஆநந்தமடைந்த |
| மாறன் | ஆழ்வாருடைய |
| பூங்கழலை | அழகிய திருவடிகளை |
| நெஞ்சே | மனமே! |
| புகழ் | புகழ்வாயாக. |

(௨௩)

அவ.—இருபத்துமூன்றாம்பாட்டு. (ஒழிவிலாக்காலம், இத்திக் கைங்கர்யத்தில் பெரியபாரிப்பைப் பேசினபடியை யநுவதித்தருளிச் செய்கிறார்.

எங்ஙனேயென்னில்; இப்படிப்ரக்ருதிஸம்பந்தத்தினுடையகொடுமையை யநுஸந்தித்து ஸோகாவிஷ்டரானவிவருடையஸோகத்தை மாற்றுகைக்காகத்தான் வடக்குத்திருமலையிலே நிற்கிற நிலையைக் காட்டிக்கொடுக்க, “நிலைப்பெற்றென் நெஞ்சம்பெற்ற துநீடுயிர்” என்று அவனைக்கிட்டி, தம்முடைய ஸ்வரூபம் பெற்றவாறே “ஸ்வரூபாநுரூபமாகவடிமைசெய்து வாழவேணும்” என்றுசிலாகிகனை திருவேங்கடமுடையான் திருவடிகளிலே வழுவிலாவடிமைசெய்து வாழப்பாரிக்கிற * ஒழிவில்காலத்தின் தாத்பர்யத்தை “ஒழிவிலாக் காலம்” என்று தொடங்கி யருளிச்செய்கிறார்.

வ்யா.—(ஒழிவிலாக்காலமுடனாகிமன்னி) ஸர்வதேஶஸர்வகால ஸர்வாவஸ்தைகளையும் நினைக்கிறது (வழுவிலாவாட்செய்யமாலுக்கு) அடிமையிலொன்றும் நழுவுதலின்றிக்கே ஸர்வவிதகைங்கர்யங்களும் ஸர்வேஶ்வரனுக்குச்செய்யவேணுமென்று. (எழுசிகரவேங்கடத்துப்பாரித்த) எழுச்சியையுடைத்தான சிகரங்களையுடைய திருமலையிலேபாரித்த.(க) ‘ஸவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா கிரிஸாநு-ஷு ரம்ஸ்யதே। அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதஶ்ச தே। பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே। அஹம்ஸர்வம்

(க) ரா-அ-௩௧-௨௫.

கரிஷ்யாமி ஜாக்ரதஸ்ஸ்வபதஸ்சதே" என்று-திருச்சித்ரகூடத்திலே இருவருமான சேர்த்தியிலே அனைத்தடிமையும் செய்யவேணுமென்றாசைப்பட்ட இளையபெருமாளைப்போலே, இவரும் * அலர்மேல் மங்கையுறைமார்வனாய் * ஒங்குவேங்கடம் மேவி * தானோங்கிநிற்கிற * சென்னியோங்குதண் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே யெப்பேர்ப்பட்ட வடிமைகளும் செய்யவேணுமென்றுஉத்ஸாஹித்த.

(மிக்கநலம் சேர்மாறன்) (க) "ஸ்நேஹாச்ச ஸுஹ்ருத்வாச்ச-அநுரக்தஸ்ச பக்தஸ்ச" என்று - * ஆராவன்பிளையவனைப்போலே (உ) "ஆராவன்பிலடியேன்" என்னும்படி நிரவதிக ப(ஹ)க்தியுக்தரான வாழ்வார். (பூங்கழலை நெஞ்சே புகழ்) அவர் * பூவார்கழல்களிலே யடிமைசெய்தாற்போலே, மநஸ்ஸே! நீயும் அபி(வி)ராமமாய், புஷ்பம் போலே ம்ருதுளமாயிருக்கிற அவர் சரணங்களை ஸ்துதித்துப்போரு. அவர் விஷயத்திலே வாசிகமான வடிமையைச்செய்யப்பார். உத்தர வாக்யத்திற்ப்ரதிபாதிக்கிற கைங்கர்யந்தான் ததீயபர்யந்தமாயாயிற்றிருப்பது.

இத்தால் - "ஒழிவில் காலமெல்லாம்" என்ற முதற்பாட்டிலர்த்தத்தை யநுஸரித்தபடி. மேல் "சிந்துபூமகிழும்" என்று - காயிககைங்கர்யத்தையும், "தெண்ணிறைச்சுனைநீர் திருவேங்கடம்" என்று - மாநஸமான வடிமையையும், "ஈசன்வானவர்க்கு" என்று-வாசிகமான வடிமையையும் சொல்லி, "வேங்கடத்துறைவார்க்குநம" என்று - ஸ்வபோ(ஹ)க்த்ருத்வநிவ்ருத்தி சொல்லி, "சமன்கொள் வீடுதரும் தடங்குன்றம்" என்று அந்தக்கைங்கர்யத்தை திருமலையாழ்வாரே தந்தருளுமென்றும், "திருவேங்கடமாமலையொன்றுமே தொழநம்வினையோயும்" என்று அந்தக் கைங்கர்யவிரோதி நிவ்ருத்தியையும் திருமலையாழ்வாரே பண்ணியருளுமவரென்றும், இப்படி முதற்பாட்டிலர்த்தத்தை விவரித்தருளினவைகளும் இவர்க்கு விவக்ஷிதம். (உக)

(க) ரா-அ-ரு-ச-கஉ. (உ) திவாய்-ரு-கO-உ.

மூ.—புகழொன்று மாலெப்பொருள்களுந்தானாய்
நிகழ்கின்றநேர் காட்டிநிற்க—மகிழ்மாறன்
எங்குமடிமைசெயவிச்சித்து வாசிகமாய்
அங்கடிமை செய்தான் மொய்ம்பால். (உச)

பதவுரை.

புகழ் ஒன்றும் மால் — கீர்த்திபொருந்தினஸர்வேஶ்வரன்
எப்பொருள்களும் தானாய் நிகழ்கின்ற — எல்லாப்பொருள்களுந்தானேயாய் விளங்குகின்ற
நேர்காட்டிநிற்க — நேர்மையைக்காட்டிநிற்க,
மகிழ்மாறன் — வகுளாபரணரான ஆழ்வார்
எங்கும் அடிமைசெய இச்சித்து — எவ்விடத்தும்தொண்டுசெய்யவிரும்பி
அங்கு — விரும்பின அவ்வண்ணமே
மொய்ம்பால் — மயர்வற மதிநலமருளப்பெற்ற சீர்மையினால்
வாசிகமாய் அடிமைசெய்தான் — வாசிககைங்கர்யம்பண்ணினார் (உச)

அவ.—இருபத்து நாலாம்பாட்டு. (புகழொன்றுமால்) கீழ் பாரித்த கைங்கர்யத்துக்கநுகுணமாக அவன்ஸர்வாத்மபா(ஸா)வத்தைக்காட்ட,அத்தைப்பேசியடிமைசெய்த பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்.

என்னனேயென்னில்;கீழிவர்(க)"ஸஹம்ஸவம்கரிஷ்யாமி-அஹம் ஸர்வம்கரிஷ்யாமி" என்றுபாரித்தபடியேஸர்வாத்மபாவத்தைக்காட்டியடிமை கொள்வதாக வொருப்பட்ட ஸர்வேஶ்வரனுக்கு, உத்யோகமாத்ரத்திலே வயிறுநிறையும் அவன்ப்ரக்ருதிக்கும்,வாசிகத்துக்கு மேற்பட்டவடிமைசெய்யமாட்டாத தம்ப்ரக்ருதிக்கும்சேர வாசிகமாக வடிமை செய்து தலைக்கட்டுகிற * புகழுநல்லொருவனிலர்த்தத்தை "புகழொன்றுமால்" என்று தொடங்கி யருளிச்செய்கிறார்.

வ்யா.—(புகழொன்றுமால்) கீழ் * எண்ணில்தொல் புகழ் வானவரீசனாய் 'புகழுநல்லொருவன்" என்று-ஸர்வஸ்ஸ்துத்யனுமது ஸத்ருஶமாய்ச் சேரும்படியான ஸர்வேஶ்வரன். *பொழி

(க) ரா-அ-கக-உடு.

லேழும் காவல் பூண்டபடியாலே புகழும் பொருந்தியிருக்கு மிறே. அன்றிக்கே, இவரையடிமைகொள்ளுகையல்லவ்ந்த * அந்த மில் புகழ்பொருந்தின வென்றுமாம். (எப்பொருள்களுந்தானாய் நிகழ்கின்ற நேர்காட்டிநிற்க) ஸமஸ்த வஸ்துக்களும் தானென் னும்படி ஸர்வபூத வார்யனுய் வர்த்திக்கிற ப்ரகாரப்ரகாரி (ஸா) பாவத்தை ப்ரகாஶிப்பித்துக்கொண்டு இவர்க்கு ஜ்ஞாந ஸாக்ஷாத் காரமாம்படிநிற்க

அதாவது-'பொருவில் சீர்பூமி யென்கோ" என்று தொடங்கி யருளிச்செய்த பூதங்கள், "குன்றங்களனைத்து மென்கோ மேவுசீர் மாரியென்கோ" என்றது தொடக்கமான பௌ (ஸள) திகங்கள், "சாதிமாணிக்கமென்கோ" இத்யாதியில்—உஜ்வலமானமாணிக்யா திகள், "அச்சுதன் - அச்சுவைக்கட்டியென்கோ" இத்யாதியில் - ரஸவத்பதார்த்தங்கள், "நான்கு வேதப்பயனென்கோ, சமயநீதிநூ லென்கோ நுடங்கு கேள்வியிசையென்கோ" என்றுகா(மா)காதிமு ப்தராகிகள், "வானவராதி" இத்யாதியில்-மோக்ஷாதிபுருஷார்த்தங் கள், "ஒளிமணிவண்ணன்" இத்யாதியில்-ஜகத்ப்ரதாநரானப்ரஹ்ம ருத்ராதிகள், இவற்றுக்கடைய காரணமான "யாவையும்யாருந்தா னே"என்கிற - ப்ரக்ருதி புருஷர்கள், இவற்றையடைய விபூதியாகவு டையனுய், இவற்றிலேஅந்தராத்மதயாவ்யாபித்து, "தோய்விலன்" என்று தத்க(ஹ)தகோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனுயிருக்கிறபடியையு மென்கை. (க) "ஜமதவஹம் ஶரீரம் தெவெவ்யஹெவஸ்யா தவெ | ஸுஃ கொவஃ ஹூவாஉவெலவொஉஹ ரவதூெலக்ஷண-ஜகத் ஸர்வம் ஶரீரம்தே ஸ்தைர்யந்தேவஸுதாதலம்| அக்நிஃகோபப்ர ஸாதஸ்தேஸோமஶ்ஶ்ரீவத்ஸலக்ஷண என்னும்படியே" இப்படி புகழு நல்லொருவனென்கோ, பொருவில் சீர்பூமியென்கோ" என் றுதொடங்கி, "நான்முகக்கடவுளென்கோ" என்னுமளவும் ஸமஸ்த வஸ்துக்களும் தானென்னும்படி ப்ரகாரமாக வர்த்திக்கிற ப்ரகா ரியைக் காட்டிக்கொண்டுநிற்க.

(மகிழ் மாறன்) வகுளத(ய)ரான வாழ்வார். (எங்குமடிமை செய விச்சித்து) ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே யடிமை செய்யவிச்

---

(க) ரா-யு-௧௨௦-உ௬.

மூ — மொய்ம்பாரும்மாலுக்கு முன்னடிமை செய்தவப்பால்
அன்பாலாட்செய்பவரையாதரிக்கும—அன்பிலா
மூடரைநிந்திக்கு மொழிந்தருளு மாறன்பால்
நேடரியபத்திநெஞ்சே செய். (உ௫)

சித்து. (வாசிகமாயங்கடிமை செய்தான்) அப்படியாசைப்பட்ட அவ்விஷயத்திலே - "என்கோ" "என்கோ" என்று வாசிகமாகவடிமை செய்தார். (மொய்ம்பால்) (க) "யஸ்ய ஸ்வாவஸ்தா - யஆத்மதாபலதா" (உ) 'வலந்தரும்' "கிலேப்பெற்றென்னெஞ்சம் பெற்றது நீங்கியிரே" என்று - அவன் தந்த ஆத்மபலத்தாலே ஸத்தையுண்டாகின்ற ஸம்ருத்தியை யபேக்ஷிப்பது. மொய்ம்பு - மிடுக்கு, "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்றும், '(ங) "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்றும், (ச) "கண்ணாயேழுலகுக்கு முயிராயவெங்கார்வண்ணனை விண்ணோர் தாம் பரவும் பொழில் வேங்கடவேதியனை" என்றும், "தாய் தந்தையுமிராகின்றாய் - பகின்றவிதால் புகழ் மூவுலகுக்கும் நாதனே பரமா தண் வேங்கடமேகின்றாய்' என்றும், 'திருவேங்கடத்தானுக்கு என் கட்பாசம் வைத்தபரஞ்சுடர்ச்சோதிக்கு" என்றும், (௫, "அம்பரம்" இத்யாதியாலும் - அவனுடைய வுபயவிபூதி நிர்வாஹகத்வத்தையும் அந்தர்வ்யாப்தியையும் ஸர்வகாலவர்த்தித்வத்தையுமருளிச்செய்கையாலே, வ்யாப்த்யநுஸந்தாநரூப வாசிக கைங்கர்யம் * திருவேங்கடத்தென்னானை யென்னப்பனெம்பெருமானுக்கேயிறே யேற்றிருப்பது. "அத்தைப்பற்றவிறே" "அங்கடிமைசெய்தான்" என்றிவாருளிச்செய்தது. (உ௪)

பதவுரை.

| | |
|---|---|
| மொய்ம்பு ஆரும் | மிகுந்த ஆற்றலையுடைய ஸர்வேஸ்வரனுக்கு |
| முன் அடிமைசெய்த உவப்பால் | முன்னே வாசிககைங்கர்யம் பண்ணின ஸந்தோஷத்தினால் |

(க) (உ திமொ-க-௪௦. (ங) ச-திருவ-சரு. (ச) தி-மொ-க௩.
(௫) தி-மொ-அ-அ.

| | |
|---|---|
| அன்பால் ஆட்செய்பவரை | பக்தி பூர்வகமாகக் கைங்கர்யம் பண்ணுமவர்களை |
| ஆதரித்தும் | கொண்டாடியும் |
| அன்பு இலா | பக்தியில்லாத |
| மூடரை | மூர்க்கர்களை |
| நிந்தித்தும் | வைதும் |
| மொழிந்தருளும் | (அவர்களுக்கு ஹிதோபதேசரூபஸூக்திகளை) அருளிச்செய்த |
| மாறன்பால் | ஆழ்வார்விஷயத்தில் |
| நெஞ்சே | மனமே! |
| தேடரிய பத்தி | அத்யுத்தமமான பக்தியை |
| செய் | பண்ணக்கடவை, (௨௫) |

அவ — இருபத்தஞ்சாம்பாட்டு. (மொய்ம்பாரும்) அடிமை செய்வாரை ஸ்துதித்தும், செய்யாதாரை நிந்தித்தும் போருகிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்.

எங்ஙனேயென்னில்; இப்படி வாசிகமாக வடிமைசெய்யப் பெற்ற ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே, இவ்வடிமையைக் காற்கடைக்கொண்டு உடம்பைவளர்த்துக்கொண்டுதிரியும் கழனிமிண்டரைப் பொடிந்தும், பகவத்குணாநுபவத்தாலேவந்த களிப்புக்குப்போக்குவிட்டு ஆடுவதுபாடுவதா யடிமைசெய்யும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கொண்டாடியும் ஹ்ருஷ்டராய்ச்செல்லுகிற *மொய்ம்மாம்பூம்பொழிலின்னர்த்தத்தையருளிச்செய்கிறார் "மொய்ம்பாருமாலுக்கு" இத்யாதியாலே.

வ்யா.—(மொய்ம்பாருமாலுக்கு) ஸமஸ்த ஜகதாதாரதயாஸக்தியால் ஸம்ருத்தனான ஸர்வேச்வரனுக்கு ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வங்களாலேயிறே பொய்கைமுதலைச் சிறைவிடுவித்துக் கைம்மாவுக்கருள் செய்தடிமை கொண்டதும். (முன்னடிமை செய்துவப்பால்) முன் - *புகழுநல்லொருவனிலே வாசிகமாகவடிமை செய்த அந்த ஹர்ஷத்தாலே, (அன்பாலாட்செய்பவரை யாதரித்தும்) பக்தியாலே கைங்கர்யம் பண்ணுமவர்களையாதரித்தும். அதாவது- "ஓதியுணர்ந்தவர்" என்றும், "முனிவின்றியேத்திக்குனிப்பார்முழு

மூ—செய்யபரத்துவமாய்ச் சீரார்வியூகமாய்த்
துய்யவிபவமாய்த் தோன்றிவற்றுள்—எய்துமவர்க்கு
இந்நிலத்திலர்ச்சாவதார மெளிதென்றான்
பன்னுதமிழ்மாறன் பயின்று. (உசு)

---

துணர் நீர்மையினர்'' என்றும், ''ஆர்வம் பெருகிக்குனிப்பாரமரர் தொழப்படுவார்'' என்றுமாதரித்தும். (க) ''மாயதிகெவிதுரண உதிகெவிஷ,தஜிகெவிக'' - காயந்திகேசித் ப்ராணமந்திகேசிந்நந்தயந்திகேசித்'' என்றதிறே. (அன்பிலா மூடரை நிந்தித்தும் மொழிந்தருளும்) * பக்தியிலாதபாவிகளான வஜ்ஞரை யநாதரித்து நிந்தித்தும். அதாவது - ''எழுந்தும் பறந்தும் துள்ளாதார் தம்மால் கருமமென்'' என்றும், ''மண்கொளுலகிற்பிறப்பார் வல்வினை மோதமலைந்து'' என்றும், ''அலைகொள்நரகத்தழுந்திக்கிடந்துழைக்கின்றவம்பர்'' என்றும், ''தம்பிறப்பால் பயனென்னே சாதுசனங்களிடையே'' என்றும், ''என்சவிப்பார் மனிசரே'' என்றும், ''உத்தமர்கட்கென்செய்வார்''என்றிறே அருளிச்செய்தது. (உ)'ஶாமலைவு நூலைய-மார்க்கம்ப்ரதர்ஶய''என்னும்படியிறே அதினுட்புகாதாரை யநாதரித்தபடி.

(மாறன்பாவித்யாதி) இப்படி அஜ்ஞானவர்களை நிந்தித்து அவர்களை அஸத்கர்மங்களினின்றும் நிவர்த்திப்பிக்கப் பார்த்த வாழ்வார் விஷயத்திலே பெறுதற்கரிதான பக்தியை மநஸ்ஸே பண்ணு. (உரு)

---

பதவுரை.

| | |
|---|---|
| செய்ய பரத்துவமாய் | விலக்ஷணமான பரத்வமாய் |
| சீர் ஆர்வியூகமாய் | மேன்மைபொருந்திய வ்யூஹமாய் |
| துய்யவிபவமுமாய் | பரிஶுத்தமான விபவமுமாய் |
| தோன்று இவற்றுள் | காணப்படுகிற இவற்றினுள் |
| எய்துமவர்க்கு | ஆஶ்ரயிக்குமவர்களுக்கு |
| இந்நிலத்தில் | இவ்விபூதியிலே |
| அர்ச்சாவதாரம் | அர்ச்சாவதாரமானது |

---

(க) ரா-ஸு-கக-கஏ,

எளிது என்றான் — ஸௌலபமென்றருளிச்செய்தார், (அவர்யாரெனில்,)

பயின்று பன்னுதமிழ் மாறன் — சேதநரோடே செறிந்து ஆராயப் படுவதான தமிழ் வேதத்தையே நிரூபகமாக வுடையரான ஆழ்வார். (உசு)

அவ;—இருபத்தாறும்பாட்டு. (செய்யபரத்துவமாய்) இதில்- அர்ச்சாவதார பர்யந்தமான ஸௌலப்யத்தை ஸம்ஸாரிகளைக்குறித்து உபதேசிக்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; "தாமேவிழுவாரைத் தடிகொண்டடிக்கையன்றோ நாமும் கைவிடுகை" என்றுமுன்ட நம்மாலே பொடியப்பட்ட நாட்டாரிழவுபொறுக்கமாட்டாதக்ருபாதிஶயத்தாலேமீண்டும்அவர்களுக்குஅவன்ஸௌலப்யத்தையுபதேசிக்கைக்காக பரவ்யூஹவிபவங்களையடைவே யருளிச்செய்துகொண்டு சென்று; நீங்களுகந்தபடியே யுகந்தருளப்பண்ண, அத்தை அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தோடொக்க விரும்பும்ஶீலாதிஶயத்தாலேஉங்களோடே புரையறக்கலந்து ஸர்வாபேக்ஷிதங்களையும் குறைவற வுபகரிக்குமர்ச்சாவதாரத்திலேயாஶ்ரயியுங்கோளென்கிற *செய்யதாமரைக்கண்ணனில் தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் "செய்யபரத்துவமாய்" இத்யாதியாலேயென்கை.

வ்யா.—(செய்யபரத்துவமாய்) (க) "பராணாம் பரமः - பரः பராணாம் பரமः" என்றுஇதரவிலக்ஷணமானவழகிய பரத்வமாய். (சீரார் வியூகமாய்) (உ) "ஏஷ நாராயணஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதநः-ஏஷநாராயணஶ்ஶ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதநः" என்னும்படியிறே வ்யூஹமிருப்பது, "சீர்" என்று-குணமாதல், ஐஶ்வர்யமாதல் (தூய்ய விபவமாய்) ப்ரத்யக்ஷாநுபவபோக்யமான தூய்மையை யுடையவிபவமாய். "செய்யதாமரைக் கண்ணன்" "அமரர்குலமுதல்" என்றும், "தடங்கடற்கிடந்தான்" என்றும், "அரவமேறியலைகடலமரும் துயில்கொண்டவண்ணல்" என்றும், "தென்னிலங்கையெரியெழச் செற்றவில்லி" என்றும் "தயரதற்காமகன்றன்

(க) வி-பு-க-உ-கஉ (உ) ஹரிவம்ஶ-ககந-கூஉ.

ரூ—பயிலுந் திருமால் பதந்தன்னினெஞ்சம்
தயலுண்டு நிற்குந்ததியர்க்கு-இயல்வுடனே
யாளானார்க்காளாகு மாறனடியதனில்
ஆளாகார் ஜன்மம் முடியா. (உஎ)

---

னே'' "குரவைகோத்தகுழகனைமணிவண்ணனைக் குடக்கூத்தனை" என்றுமிறே பரத்வாதிகளை யருளிச்செய்தது. (தோன்றிவற்றவன்) இப்படிதேஶகால'தி(யி)காரிநியமங்களையுடைத்தாய்,ப்ரமாணங்களாலேப்ரத்யக்ஷிக்கலாம்படியிருக்கிறவிவற்றில்வைத்துக்கொண்டு.

(எய்துமவர்க்கிந்நிலத்தில்)இவ்விபூதியிலே கிட்டியாஶ்ரயிக்குமவர்களுக்கு. (அர்ச்சாவதாரமெளிதென்றான்) ஸௌலப்யத்தாலே அர்ச்சாவதாரம் ஸமாஶ்ரயணத்துக்கு, சக்ஷுர்விஷயமுமாய், நித்யஸந்நிதியுமுண்டாகையாலே அதிஸுலபமென்கிறார். "நெஞ்சினால் நினைப்பான் யவனவனாகும் நீள்கடல்வண்ணன்" என்றத்தை நினைக்கிறது. (க) "எளிவரும் இணைவனுமென்றவைபரத்வமாம்படி அவனாகும் ஸௌலப்ய(ஹு)காஷ்டையைக்காட்டி" என்றாரிறே. (உ) "ஶ்ரீரத்ந்யதநேவிஷ்ணோஶ்ஶௌநராவாத்மஜ: - ஶ்ரீமத்யாயதநேவிஷ்ணோஶ்ஶிஶ்யேநராவாத்மஜ:" என்றும், (ங) "நாராயணமுபாகமத்-நாராயணமுபாகமத்" என்றும்-விபவத்தாலே அர்ச்யமானவேற்றமுண்டாயிறேயிருப்பது.இப்படியர்ச்சாவதாரவைபவத்தையருளிச்செய்தவர் தாம் இன்னாரென்கிறார் (பண்ணுதமிழ்மாறன்பயின்றென்று).அதாவது-சேதநரோடேசெறிந்துஆராயப்படுமதான த்ரவிடத்தையே நிரூபகமாக வுடையரானவாழ்வார், (ச) "பண்ணியதமிழ்" என்னும்படி ப்ரமாண சாரத்தைவெளியிட்டாப்போலே, ப்ரமேயசாரமான அர்ச்சாவதார†மெளிதென்று வெளியிட்டருளினாரென்கை. (உஅ)

---

பதவுரை.

| | |
|---|---|
| பயிலும் | ஆஶ்ரித ஸங்க்லேபாவனை |
| திருமால் | ஶ்ரிய:பதியினுடைய |
| பதம் தன்னில் | திருவடிகளில் |

---

(க) ஆசார்யஹ்ருதயம். (உ) ரா-அ-கூ-ச. (ங) ரா-அ-கூ-க.
(ச) தி-வாய்-உ-எ-க. † இனிதென்று.

| | |
|---|---|
| நெஞ்சம் தயலுண்டு நிற்கும் | மனம்பதிந்து நிற்கிற |
| ததியர்க்கு | பாகவதர்களுக்கு |
| இயலுடனே ஆளானார்க்கு | முறையே அடிமையாயிருக்குமவர் களுக்கு |
| ஆளாகும் | அடிமைசெய்யப்பெற்ற |
| மாறன் | ஆழ்வாருடைய |
| அடி அதனில் | திருவடிகளில் |
| ஆள் ஆகார் | அடிமை ய்யப் |
| சன்மம் | பிறவி |
| முடியா | நசிக்கமாட்டாது. (உஎ) |

அவ. — இருபத்தேழாம்பாட்டு. (பயிலும் திருமால்) இதில் - ததியரைப்பத்தும்பத்தாக உத்தேஶ்யராக வநுஸந்தித்த பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழே ஸௌலப்ய காஷ்டையை யுபதேசிக்க, அத்தையும்காற்கடைகொள்ளுகையான ஸம்ஸாரிகளோட்டை ஸஹவாஸத்தால் வந்த வெக்காய மாறும்படி, தனக்குப்பாதரேகைபோலே பரதந்த்ரரான ஸ்ரீவைஷ்ணவர்களை அவன் காட்டக்கண்டு அவர்கள் திருவடிகளிலே தலையைமடுத்து அவர்கள் தான் அவன்படிகளிலே பலபடியாக மண்டியிருக்கிறபடியைக்கொண்டாடி, அவர்களெல்லை நிலத்திலே சென்றினியராகிற * பயிலுஞ்சுடரொளியின் தாத்பர்யத்தை "பயிலும் திருமால்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை. (க) "மஹாத்மாநஸ்து மாம் பார்த²-கச்சதாமாதுலகுலம்" உதிவக² - இதிவத்.

வ்யா.—(பயிலுந்திருமால்) ஆஶ்ரித ஸங்கஸ்வபாவனை ஸ்ரிய:பதியினுடைய திருவடிகளிலே. இத்தால் - "திருநாரணன்" என்றத்தைச்சொல்லுகிறது. பயிலும்திருவென்று - எம்பெருமானோடே ஸர்வகாலமும் ஸம்ஶ்லிஷ்டையான ஸ்ரீயென்னவுமாம். பதந்தன்னில் நெஞ்சம் தயலுண்டு நிற்கும் ததியர்க்கென்றது - "பாதம் பணிய வல்லாரை" என்றபடி; நெஞ்சம் தயலுண்டுநிற்கையாவது - திருவடிகளில் போக்யதையை யநுஸந்தித்து ஸ்நேஹார்த்ரதாயுத சித்தராய் தந்நிஷ்ட

(க) ரா-அ-க-க,

மூ.— முடியாதவாசைமிக முற்றுகரணங்கள்
அடியார்தம்மைவிட்டவன்பால்-படியாவொன்
றென்றின் செயல் விரும்ப வுள்ளதெலாந்தாம் விரும்பத்
துன்னியதே மாறன்றன் சொல். (உஅ)

---

ராயிருக்கை யென்றபடி. (௧) "உன்னிணைத்தாமரைகட்கன்புருகி நிற்குமது" என்னக்கடவதிறே. அன்றிக்கே தயலென்று - தையலாய், திருவடிகளிலே†பந்தபாவராயிருக்குமவர்களென்றுகவுமாம். ததியர்க்கென்று - தத்ஸம்பந்தமே நிரூபகமாயுள்ளவர்களுக்கென்கிறது. "பயிலுந்திருவுடையார்" என்றும், "தாளுந்தடக்கையும் கூப்பிப்பணியுமவர்" என்றும், "பாதம்பணியவல்லார்" என்றும், "திருநாரணன் தொண்டர்" என்றுமிப்புடைகளிலே நிரூபகமாயிருக்கை.

(இயல்வுடனே யாளானார்க்காளாகும் மாறனடிய தனில்) வடிவழகிலும் ஆயுதாபரணாதிகளினைப் பனையழகிலும் தோற்றடிமையாயிருக்குமவர்க்காளாகையே ஸ்வரூபமென்றிருக்குமாழ்வார் திருவடிகளில். (ஆளாகார்) அடிமையாகாதார். (சன்மம் முடியா) ஜந்மக்ஷயம் பிறவாது. (௩) "எமர்கீழ்மேலெழு பிறப்பும் விடியா வெந்நரகத்தென்றும் சேர்தல் மாறினர்" என்னும்படி ஆழ்வார் ஸம்பந்தமுடையவர்களுக்கிறே ஸம்ஸார ஸம்பந்தம் முடிவது. * இவையுமோர் பத்துசொன்னுலிறே சன்மம்செய்யாமே இலங்குவான் பாவருமேறுவது, அல்லாதார்க்கு ஸித்தியாதிறே; ஆகையால் ததீயசேஷத்வத்தி னெல்லைநிலத்திலே நிற்கிறவாழ்வார் திருவடிகளை யாஸ்ரயிக்கவே ஜந்மஸம்ஸார (வாஸ)பந்த நிவ்ருத்திபூர்வகமாகவே மோக்ஷஸித்தியாமென்றபடி. (௨எ)

---

பதவுரை.

| | |
|---|---|
| முடியாத ஆசைமிக | ஆராதகாதல் அதிஶயிக்க |
| முற்று கரணங்கள் | ஸர்வேந்த்ரியங்களும் |
| அடியார்தம்மைவிட்டு | பாகவதர்களைவிட்டு [து, |
| அவன்பால் படியா | அந்த ஸர்வேஸ்வரனிடத்தில் படிந் |

---

(௧) தி வாய்-எ-க-௧௦
† (பா) ஸத்பாவராய் ஸ்தப்தராய் நிற்குமவர்.

ஒன்று ஒன்றின்செயல் விரும்ப-ஒருகரணம் ஒருகரணத்தின் வ்ருத்தியை ஆசைப்பட

உள்ளது எல்லாம் தாம்விரும்ப-கரணங்களின் விடாய் முழுதும் தாம் உடையராகலே விரும்ப

மாறன்தன் சொல் ஆழ்வாருடைய ஸ்ரீ ஸூக்தியானது

துன்றியது நெருக்க முற்றது. (உஅ)

அவ.—இருபத்தெட்டாம்பாட்டு. (முடியாதவாசைமிக)இதில் கரணங்களும் தாமும் பெருவிடாய்ப்பட்டுப் பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; * பயிலும் சுடரொளியிலே -உத்தேஸ்யராக வநுஸந்திக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்வரூபத்துக்கு நிரூபகத்வேந ப்ரஸ்துதமான பகவத் ஸௌந்தர்யாதிகள்விடாய்க்கு உத்தம்ப(ஹ)கமாய், அத்தாலேவிடாய்கரை புரண்டு, அநுபாவ்யமான பூஷணாயுத விக்ரஹ குணசேஷ்டிதாதிகளைச்சொல்லி, தாமும் தம்முடைய கரணக்ராமமுமாய்முழுமிடறுசெய்து கூப்பிடுகிற * முடியானேயிலர்த்தத்தை ஸங்க்ரஹித்தருளிச் செய்கிறார் "முடியாதவாசைமிக" இத்யாதயாலேயென்கை.

வ்யா.—(முடியாத வாசைமிக) * மயர்வற மதிநலமருளுகையாலே அடியேதொடங்கிவருகிற * ஆராதகாதலானது அநுபவாலாபத்தாலே யதிஶயிக்க, இங்கே - பாகவதஸ்வரூப நிரூபணத்துக்குஉடலாக பகவத்குணாதிகள்ப்ரஸ்துதமாக,அத்தாலேபக்த்யபி(ஹி)வ்ருத்தியாக. (முற்றுகரணங்கள்)பாஹ்யாப்யந்தரஸகலகரணங்களும். "முடியாதவாசைமிகு-முற்று" கரணங்கள்"என்று கரணவிசேஷணமாகவுமாம். (அடியார் தம்மைவிட்டு) "எம்மையாளும் பரமர்" "எம்மையாளுடைநாதர்" என்றும், "எம்மையாளுடையார்கள்" "எம்பெருமக்கள்" "எம்மையளிக்கும்பிராக்கள்" "எம்மைச்சன்மசன்மந்தாங்காப்பர்" "எம்மைநாளுய்யக்கொள்கின்ற நம்பர்" "எந்தொழுகுலந்தாங்கள்" "அடியாரெம்மடிகள்" "அடியார் தம்மடியாரடியோங்

கள்" என்று - இப்படிஸர்வ ப்ரகாரத்தாலும்சேஷிகளாக வநுஸந்திக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களைவிட்டு. (அவன்பாலபடியா) படிந்து; புருஷார்த்தகாஷ்டையைக் கொலைக்கும்படியான வவனிடத்திலே யவகாஹித்து. கரணங்களும் தாமும் தத்விஷயத்திலே ப்ரவணராய். (க) "மாமேதமஸ்லோகாஷிகஸி...மேத: | ஸம்ஸ்ருஷ்டமேயம்ஸகாரோஹம்- காத்ரைஸ்ஸோகாபிகர்ஷிதை:| ஸம்ஸ்ப்ருஸேயம் ஸகாமாஹம்" என்னும்படியாக (ஒன்றொன்றின் செயல் விரும்ப வுள்ளமெலாம் தாம்விரும்ப) "நெஞ்சமே நீணகராகவிருந்தவென் தஞ்சனே" "வாசகமேயேத்தவருள் செய்யும் வானவர் தம்நாயகனே" "கைகளாலாரத்தொழுதுதொழுதுன்னை" "கண்களாற்காணவருங்கொல்" என்று - வாக்பாணி சக்ஷுஸ்ஸ்ரோத்ரங்களான விந்த்ரியங்களை மநோவாக்பாணி சக்ஷுர்வ்ருத்திகள் ஆசைப்படும்படியாகிற இந்த்ரியவ்ருத்தி நியமமின்றிக்கே அவனை யநுபவிக்க வேண்டும்படியானபெருவிடாயை யுடையவாய்; (உள்ளமெல்லாம் தாம்விரும்ப) கீழ்ச்சொன்ன கரணங்களின் விடாயைக் கரணியானதாமொருவரு முடையராய் அவனையநுபவிக்கவாசைப்பட்ட. அதாவது - "உன்னையேயவிவின்றியாதரிக்குமெனதாவீ" என்றும் "பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும்கூவியும் காணப்பெறேனுனகோலம்" என்றும், "உன்னையெந்நாள் கண்டுகொள்வன்" என்றும், "உன்னையெஞ்ஞான்று பொருந்துவன்" என்றும், "உன்னையே இருந்திருந்தெத்தனைகாலம் புலம்புவன்" என்றுமிறே யிவருடையப்ராவண்ய மிருக்கும்படியென்கை. (துன்னியதே மாறன்றன் சொல்). இப்படிகரண க்ராமத்தினுடையவும்கரணியான வாழ்வார் தம்முடையவும்ஆர்த்த்யதிஸயத்தையுடைத்தான வாழ்வார் ஸூக்தியான வித்திருவாய்மொழி, "மிடைந்தசொல்" என்னும்படி ஸப்தநிபிடமாயிருந்தது. துன்னுதல் - நெருக்கம். (உஅ)

(க) ...-...-...

மூ.—சொன்னாவில் வாழ்புலவீர் சோறுகூறைக்காக
மன்னுதமானிடரை வாழ்த்துதலா-லென்னாகும்
என்னுடனேமாதவனையேத்துமெனும் குருகூர்
மன்னருளால் மாறும் சன்மம். (உகூ)

---

பதவுரை.

| | |
|---|---|
| சொல் நாவில் வாழ்புலவீர் | நாக்கில் கவநசாதுரியமுடைய பண்டிதர்களே! |
| சோறுகூறைக்காக | சோற்றுக்கும் துணிக்குமாக |
| மன்னாத மானிடரை | அல்பாயுஸ்ஸுக்களான மநுஷ்யர்களை |
| வாழ்த்துதலால் | கவிபாடிப் புகழ்வதனால் |
| என் ஆகும் | என்னபயனாம்? |
| என்னுடனே | என்னுடன்கூடி |
| மாதவனை | ஸ்ரியஃபதியை |
| ஏத்தும் எனும் | ஏத்துங்களென்று பரோபதேசம் பண்ணின |
| குருகூர்மன் | திருக்குருகூர்க்கு நிர்வாஹகரான ஆழ்வாருடைய |
| அருளால் | க்ருபையாலெ |
| சன்மம்மாறும் | பிறவி ஒழியும். (உகூ) |

அவ.—இருபத்தொன்பதாம்பாட்டு. (சொன்னாவில்) இதில்-அஸேவ்யஸேவையநர்த்தமென்றும்: பகவத்ஸேவை ப்ராப்தமென்றும் பேசுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; * முடியானேயில் முடியாதவாசையை யுடையராய்க்கூப்பிட்டவர், "தம்கூப்பீட்டுக்குத் துணையாவாருண்டோ?" என்று லௌகிகரைப்பார்த்த விடத்தில்அவர்கள்பகவதர்ஹகரணங்களைக்கொண்டு க்ஷுத்ரமநுஷ்யர்களைக்கவிபாடித்திரிகிறபடியைக் கண்டு, அதுபொறுக்கமாட்டாமல், 'இப்படி வகுத்தவிஷயத்தை விட்டுஅப்ராப்த விஷயத்தைக் கவிபாடுகையீடல்ல" என்று அவர்

களுக்கு ஹிதமருளிச்செய்ய, மீளவும் அவர்கள்பழையநிலைகளிலே நிற்க, அவர்களைவிட்டுஸ்வலாபத்தைச்சொல்லி ப்ரீதராகிற *சொன்னால் விரோதத்தினர்த்தத்தைத்†தொடுத்து ''சொன்னவில்'' இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா. —(சொன்னவில் வாழ்புலவீர்) பகவத்ஸ்தோத்ரம் பண்ணுகைக்குப் பரிகரமான நாக்கைக்கொண்டு அவனை ஸ்துதித்து ஜீவிக்கிற புலவீர்காள்! நீங்கள்விசேஷஜ்ஞரல்லிகோளோ? (சோறு கூறைக்காக மன்னுதமானிடரை வாழ்த்துதலாலென்னாகும்) அசந பாநாச்சாதநாதிகளாயுள்ளக்ஷுத்ர ப்ரயோஜநத்துக்காகக்ஷயிஷ்ணுக்களான க்ஷுத்ரமனுஷ்யரைக் கவிபாடி ஸ்தோத்ரம் பண்ணுகையாலென்ன ப்ரயோஜநம் ஸித்திக்கும்? த்ருஷ்டாத்ருஷ்ட பலங்களிலொன்றும் ஸித்தியாது, அநர்த்தமே ஸித்திக்குமென்றபடி. ''என்னாவதெத்தனை நாளைக்குப்போதும் புலவீர்காள் மன்னு மனிசரைப்பாடிப்படைக்கும் பெரும்பொருள்' என்றருளிச்செய்ததை நினைக்கிறது. (க) ''மொஸஹஸ ரவு ஊ-தாஙு — கோஸஹ ஸ்ரப்ரதாம்'' (உ) ''ஸஹஸ நயி-மொ ந ஊ ஷ்டீ ஸஜெ-கு வாகி ஈஞூவ - ஸஸர்வாநர்த்தி நோத்ருஷ்ட்வா ஸமேத்யப்ரதிநந்த்யச'' என்னும்விஷயமன்றே.

(என்னுடனே மாதவனையேத்துமெனும்) ''திருவேங்கடத்தென்னானை யென்னப்ப னெம்பெருமானுளனாகவே - என்னாவிலின்கவி யாதொருவர்க்கும் கொடுக்கிலேன்'' என்றும், ''ஓராயிரம் பேருமுடைய பிரானையல்லால் மற்றியான்கிலேன்'' என்றும், 'பாடிப்போய்க்காயம் கழித்தவன்றாளிணைக் கீழ்புகுங்காதலன் மாயமனிசரையென்சொல்லவல்லேனென்வாய்கொண்டே'' என்றும், ''வாய்கொண்டு மானிடம்பாடவந்தகவியேனல்லேன்' என்றும் ''உலகம்படைத்தான் கவி'' என்றும்- தம்முடைய வந்யவிஷயப்ரவ்ருத்தி நிவ்ருத்தியையும் ஸ்வவ்ருத்தியான பகவத்ஸ்தோத்ர ப்ரவ்ருத்தியையும் முன்னிட்டு ''(௩)* திருமாலவன் கவியாதொன்றோடே கூட * என்திருமாலான ஸ்ரிய:பதியை * ''கவிசொல்லவம்மின்'' என்று பரோபதேசம்பண்ணி, பரோபதேச நிரபேக்ஷமா

(க) ரா-யு உக-எ. (உ) ரா-அ கசு-உஎ. (௩) தி-வி-சஅ.
† தொகுத்து.

மூ — சன்மம்பலசெய்து தானிவ்வுலகளிக்கும்
நன்மையுடைமால் குணத்தை நாடோறும்—இம்மையிலே
ஏத்துமின்பம்பெற்றே னெனுமாறனேயுலகீர்
நாத்தழும்ப வேத்துமொருநாள். (௩0)

நத்திருந்தின தம்படியையும் பேசினவராய். (குருகூரித்யாதி) திருநகரிக்கு நாதரான வாழ்வாரருளாலே அங்யசேஷத்வத்துக்கடியான ஜந்மம் கழியும். * கண்டுசன்மம் கழிக்கவேண்டிற்று ஆழ்வார்க்கு. இவர்களுக்கு (க) "சூழ்பிறப்பும் மருங்கே வரப்பெறுமே" என்றவாழ்வாரருளாலே பிறவிப்பெருங்கடல் சுவறிற்று. மாறுகையாவது - ஸவாஸநமாகப்போகை. "இவையுமோர் பத்தேற்கும் பெரும்புகழ் சொல்லவல்லார்க்கில்லை சன்மமே" என்றிறே இத்திருவாய்மொழிக்கு பலஶ்ருதியும். (உ௬)

பதவுரை.

| | |
|---|---|
| உலகீர் | "இவ்வுலகிலுள்ளவர்களே! |
| சன்மம்பல செய்து | அநேக அவதாரங்களைச்செய்தருளி |
| தான் இவ்வுலகு அளிக்கும் | தானே இவ்வுலகங்களை ரக்ஷிக்கிற |
| நன்மையுடை | நன்மைபொருந்திய |
| மால் | ஸர்வேஶ்வரனுடைய |
| குணத்தை | கல்யாணகுணங்களை |
| நாடோறும் | எப்போதும் |
| இம்மையிலே | இந்த ஜந்மத்திலே |
| ஏத்தும் இன்பம்பெற்றேன் | துதிப்பதனாலுண்டான ஆநந்தத்தை அடைந்தேன்" |
| எனும் மாறனை | என்றருளிச்செய்த ஆழ்வாரை |
| ஒருநாள் | ஒருநாளாயினும் |
| நாதழும்ப | நாக்கு தழும்பேறும்படி |
| ஏத்தும் | ஸ்தோத்ரம் பண்ணுங்கள். (௩0) |

அவ. — முப்பதாம்பாட்டு. (சன்மம்பலசெய்து) இதில்-பகவத்ஸஹகரணனனவெனக்கொரு குறைகளுமில்லை யென்ற பாசுரத்தை

(க) தி-வி-௬டு.

[illegible]தித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; இதரரைக்கவிபாடுகைக்கு அநர்ஹகரணனுமாக்ரமன்றிக்கே, பகவத்விஷயத்தைக் கவிபாடுகைக்கர்ஹகரணனாகவும்பெற்றேன்; எனக்கினிவேண்டுவதுண்டோவென்று ஹ்ருஷ்டராகிற*சன்மம்பலபலவினர்த்தத்தை ஸங்க்ரஹித்தருளிச்செய்கிறார். "சன்மம்பலசெய்து" இத்யாதியாலேயென்கை.

வ்யா.—"சன்மம் பல பல செய்து" என்கிற பாட்டு இத்திருவாய்மொழிக்கு உயிர்ப்பாட்டாகையாலே அத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (சன்மம்பலசெய்தென்று) "சன்மம் பலபலசெய்து" என்றும் (௧) "[illegible] - பஹூநிமேவ்யதீதாநி" (௨) "[illegible] - பஹுதா விஜாயதே" என்றுஞ்சொல்லுகிறபடியே அஸங்க்க்யாதமான வவதாரங்களைப் பண்ணி. (சன்மம்பல செய்து தான்) அகர்மவஸ்யனான தான்" (௩) "[illegible] - கௌஸல்யா ஜநயத்" (௪) "[illegible] - ஜாதோஹம் யத்தவோதராத்" என்னும்படி ஆஸ்ரிதார்த்தமாக வஸங்க்க்யாதமான வவதாரங்களைப்பண்ணி. (இவ்வுலகளிக்கும்) தன்வாசியறியாதஇஸ்ஸம்ஸாரிகளை ரக்ஷிக்கும். ரக்ஷணந்தான் - விரோதிநிரஸந பூர்வகமாயிறே யிருப்பது. (௫) "[illegible] - குணவாந் கஸ்சவீர்யவாந்" இறே. விரோதிகளைப்போக்கி ஈரக்கையாலேதடவி ரக்ஷிக்கும் நன்மையுள்ளது ஸர்வேஸ்வரனுக்கிறே. (௬) "[illegible] - நஹிபாலந ஸாமர்த்த்யம்ருதே ஸர்வேஸ்வரம் ஹரிம்" "உலகில் வன்மையுடைய வரக்கரசுரரை மாளப்படைபொருத நன்மையுடையவன்சீர்" என்றத்தைச் சொல்லுகிறது (இவ்வுலகளிக்கும்நன்மையுடையமால் குணமென்று). "சீர்பரவப்பெற்றநான்" என்றத்தை (மால்குணத்தை நாடோறு மிம்மையிலேயேத்துமின்பம்பெற்றேன்) என்கிறது. ஒருதேசவிசேஷத்திலே (௭). "[illegible] - விபஸ்யவ:" "விண்ணோர்பரவும்" என்று ஸ்துதித்து, (௮) "[illegible] - ஸோஸ்நுதே ஸர்வாந்காமாந் ஸஹப்ரஹ்மணா" என்றநுபவிக்கும் குணங்களை இவ்விபூதியிலே ஸ்தோத்ரம் பண்ணுகையாலுண்டான வாநந்தத்தைப் பெற்றேன். "குறைவு முட்டுப் பரிவி

(௧) கீ-௪-௫ (௨) யஜு-தை-௩-௧௭ (௩) ரா-பா-௧௮-௧0 (௪) வி-பு-௫-௩-௧௪. (௫) ரா-பா-௧-௨ (௬) வி-பு-௧-௨௨-௨௧. (௭) புருஷஸூக்த (௮) தை ஆ-௧

மூ.—ஒருநாயகமாயுலகுக்குவானோர்
இருநாட்டிலேறியுய்க்குமின்பம்—திரமாகா
மன்னுயிர்ப்போகந்தீதுமாலடிமையே யினிதாம்
பண்ணி யிவைமாறனுரைப்பால். (௯க)

டர்துயர் துன்பமல்லல் துக்கந்தளர்வுக்கேடுகளின்றி அம்ருதாநந் தமக்நரானவர்" என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலுமருளிச்செய்தது.

(எத்துமின்பம் பெற்றேனெனுமாறனை யுலகீர் நாத்தழும்ப வேத்துமொருநாள்) இப்படி அவன் கல்யாணகுணங்களை ஸ்துதிக்கப் பெற்றேனென்றருளிச் செய்தவாழ்வாரை, லௌகிகரானுள்ளவர்களே! நாத்தழும்பேறும்படி ஸ்துதியுங்கோள்; அதுதான் பலநாள் வேண்டா, ஒருநாளமையும். (க) "வீவில்காலமிசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன் வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனன் மேவியே" (உ) "பகலிராப்பரவப்பெற்றேன்" என்கிற நிர்ப்பந்தம்வேண்டா நாத்தழும்பவேத்து (மொருநாள்) ஸக்ருத்ஸேவிக்கவமையும், ஸர்வதாஸரஸமாயிருக்கும். (௩) "நாவினால் நவிற்றின்பமெய்தினேன்" என்னும் விஷயமிறே. (௯0)

பதவுரை.

| | |
|---|---|
| உலகுக்கு | இந்தலோகத்துக்கெல்லாம் |
| ஒருநாயகமாய் | ஏகாதிபதியாய் |
| உய்க்கும் இன்பம் | அநுபவிக்கு மின்பமும் |
| வானோர் | தேவர்களுடைய |
| இருநாட்டில் | பெரிதான ஸ்வர்க்கலோகத்திலே |
| ஏறி | ஏறி |
| உய்க்கும் | அநுபவிக்குமின்பமும் |
| திரம் ஆகா | நிலைநிற்கமாட்டா; |
| (அன்றியும்) | |
| மன் உயிர்போகம் | நித்யமான ஆத்மாநுபவமும் |
| தீது | பொல்லாங்கு; |
| மால் அடிமையே | பகவத்சேஷத்வமே |

(க) தி-வாய்-௪-௫-௩. (உ) தி-வாய்-௬-௪-௫. (௩) கண்ணி-உ

| | |
|---|---|
| இனிது ஆம் | போக்யமாயிருக்கும்; |
| இவை | என்ற இவ்வர்த்தங்கள் |
| மாறன் பன்னி உரைப்பால் | ஆழ்வார் ஆராய்ந்து அருளிச்செய்கையாலே (அறியப்பட்டன வென்று சேஷபூரணம்.) (௬க) |

அவ;—முப்பத்தோராம்பாட்டு. (ஒருநாயகமாய்) இதில்-ஐஶ்வர்யாதிகளினல்பாஸ்திரத்வ தோஷத்தைப்பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; "சீர் பரவப்பெற்றநான்" என்று-கீழ், பகவதநுபவத்தாலே ஹ்ருஷ்டரான வாழ்வார், அந்தஹர்ஷத்தாலே இவ்விஷயத்தையொழிய ஐஶ்வர்யாதிகளிலே மண்டிக்கிடக்கிறவர்களைக்குறித்து, மீளவும், இவற்றினுடைய அல்பாஸ்திரத்வாதி தோஷங்களையறியாதே இவற்றிலே மண்டுகிறார்களென்று இவற்றின்தோஷங்களைப்பரக்கப்பேசாநின்று கொண்டு, பரமபுருஷார்த்தபூதனன ஶ்ரிய:பதி திருவடிகளையாஶ்ரயியுங்கோளென்று பிறர்க்கு உபதேசித்துச் செல்லுகிற*ஒருநாயகத்தினர்த்தத்தை ஸங்க்ரஹித்து, "ஒருநாயகமாய்" இத்யாதியாலேயருளிச் செய்கிறாரென்கை.

வ்யா.—(ஒருநாயகமாயென்றுதொடங்கி) "உலகுக்கு-ஒருநாயகமாய்-உய்க்குமின்பமும்,வானோரிருநாட்டிலேறியுய்க்குமின்பமும் திரமாகாது" என்கிறார். "ஒருநாயகமாயோடவுலகுடனாண்டவர்" என்றத்தை நினைக்கிறது. ஸார்வபௌ(ஹௌ)மராய் (க) "வாஜிவாரணஸ்யாதவருவ - பாண்டரஸ்யாதபத்ரஸ்ய" என்று ஏகாதபத்ரமாக நாட்டை நடத்துகிறவத்தால் வருகிறஸுகமும், "எனைத்தோருகங்களு மிவ்வுலகாண்டு கழிந்தவர்" என்றும், "வாழ்ந்தார்கள் வாழ்ந்தேநிற்பரென்பதில்லை" என்றுஞ்சொல்லுகையாலே அஸ்திரமாயிருக்கும். வானோரிருநாட்டிலேறியுய்க்குமின்பமாவது-தேவர்களுக்கு வாஸஸ்தாநமாய்ஐஹிகபோக(ஹௌம)விலக்ஷணமான ஸ்வர்க்காத்யநுபவம், அதுவும் (திரமாகா) (உ) "தேதம்புக்த்வா ஸ்வர்கலோகம்விஶாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம்விஶந்தி"-தேதம்

---

(க) ரா அ உ-எ (உ) கீ-௯-உக.

மூ:—பாலரைப்போல் சீழ்கிப்பர னளவில்வேட்கையால்
காலத்தால் தேசத்தால் கைகழிந்த—சால
வரிதானபோகத்திலாசை யுற்று நைந்தான்
குருகூரில் வந்துதித்தகோ. (௬௨)

புக்த்வாஸ்வர்க்கலோகம் விசாலம் க்ஷீணேபுண்யேமர்த்யலோகம் விஶந்தி" என்கிறபடியே அஸ்திரமாயிருக்கும். "குடிமன்னுமின் சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள்" என்றத்தைப்பின் சென்றபடி. (இருநாட்டிலித்யாதி) ஸுக்ருதவிஶேஷத்தாலே ப்ராபித்தாலும் ஸ்திரமாகாது. இது - * ஆப்ரஹ்மபவநம் புநராவ்ருத்தியென்னு மதுக்குமுபலக்ஷணம். (மன்னுயிர்ப்போகம்தீது). "இறுகலிறப்பு" என்று ஸங்கோசரூபமோக்ஷமாகையாலே அதுவும் தோஷயுக்தமாயிருக்கும். மன்னுயிர்ப்போகமென்கையாலே - நித்யமான வாத்மாநுபவம் கீழிலவைபோலே அஸ்திரபோகமன்றிக்கே நித்யபோகமாயிருந்ததேயாகிலும், பரப்ரஹ்மாநுபவத்தைக்குறித்துச் சிற்றின்பமாயிருக்குமாகையாலே - தீதென்றது.

(பன்னியிவைமாறனுரைப்பால் - மாலடிமையே யினிதாம்) இவற்றினல்பாஸ்திரத்வாதி தோஷங்களை யாராய்ந்து ஆழ்வாருளிச்செய்கையாலே, ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனுடைய தாஸ்யமே ஸாரஸமாயிருக்கும். "திருநாரணன்றாள் காலம்பெறச்சிந்தித்துய்மினோ" என்றும், "செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ" என்றும், "கடிசேர் துழாய் முடிக்கண்ணன் கழல்கள்நினைமினோ" என்றும், "பனைத்தாள் மதகளிறட்டவன்பாதம் பணிமினோ" என்றும் "மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினோ" என்றும், "ஆழ்ந்தார்கடற்பள்ளியண்ணலடியவராமினோ" என்றும், "பணங்கொளரவணையான் திருநாமம்படிமினோ" என்றும், "கொடிமன்னுபுள்ளுடையண்ணல்கழல்கள்குறுகுமினோ" என்றும் "மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில் வீடஃதே" என்றும் "அஃதேயுய்யப்புகுமாறு" என்றுமருளிச்செய்தவை யெல்லாவற்றையும் நினைத்து "மாலடிமையேயினிதாம்" என்றருளிச்செய்தது.

---

பதவுரை.

| | |
|---|---|
| குருகூரில் | திருநகரியில் |
| வந்து உதித்த | வந்து அவதரித்த |

| | |
|---|---|
| கோ | ஸ்வாமியான ஆழ்வார் |
| பாலரைப்போல் | (விரும்பினபொருள் உடனே வேணுமென்று அழுகிற) பாலர்களைப்போல |
| சீழ்கி | சிணுங்கி |
| பரன் அளவில் வேட்கையால் | எம்பெருமான் பக்கலிலுள்ள ஆசையாலே |
| காலத்தால் தேசத்தால் கைகழிந்த | காலதேசங்களாலே கைகழிந்துபோன |
| சால அரிதான | மிகவும் துர்லபமான |
| போகத்தில் | கைங்கர்யாநுபவத்தில் |
| ஆசை உற்று | ஆசை அதிகரிக்கப்பெற்று |
| நைந்தான் | வருந்திஞர். (௩௨) |

அவ.—முப்பத்திரண்டாம்பாட்டு (பாலரை)இதில்-தேஶகால விப்ரக்ருஷ்டமான வவன் படிகளைத் தந்தத் தேஶ கால விஶிஷ்டமாம்படி யநுபவிக்கவேணுமென்றுதரித்த பாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிறூர். அதெங்ஙனேயென்னில்; மூன்றுகளையும் பறித்துச்சங்காயமும் வாரினபயிர் ஸதஶாகமாகப் பணைக்குமாபோலே, "வீடு மின் முற்றவும்" "சொன்னுல் விரோதம்," "ஒருநாயகம்" என்கிற மூன்று திருவாய்மொழியிலே ஸம்ஸாரிகளைக்குறித்து உபதேசித்தவிடத்தில் அவ்வுபதேசம் அவர்கள்திருந்துகைக்குடலன்றிக்கே, தமக்குரஸாந்தரங்களாலே யபிபூ(ஹிஹு)தமாய்க்கிடந்த * முடியானேயில் விடாய்க்கு உத்தம்ப(ஹ)கமாய், பக்தி ஶதஶாகமாகப் பணைக்க, அத்தாலே தேசகால விப்ரக்ருஷ்டங்களான வவன்படிகளை இப்போதே கண்டநுபவிக்கவேணுமென்னுமபேக்ஷைபிறந்து, அபேக்ஷித்தபடி யநுபவிக்கப்பெறுமையாலே தாம்நோவுபட்டுச்செல்லுகிறபடியை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * பாலனுயேழுலகினர்த்தத்தை யருளிச்செய்கிறூர் "பாலரைப்போல்" இத்யாதியாலே யென்கை.

வ்யா.-(பாலரைப்போல் சீழ்கி) ப்ராப்தாப்ராப்த விவேகம் பண்ணவறியாதபாலர், தேசத்தாலே விப்ரக்ருஷ்டமான அம்புலியம்மானையும், காலத்தாலேகைகழிந்துபோனப (ஷ)லாதிவஸ்துக்களையும் "அப்போதேகொடுவந்தரவேணும்" என்று (க) "பாலஸ்ய ருதிதம்பலம்" என்னும்படி ரோதநத்தை முன்னிட்டபேக்ஷிக்குமாபோலே, இவரும் தேசகால விப்ரக்ருஷ்டமானபராவஸ்தாத்யநுபவங்களை அப்போதேபெறவேணுமென்று (௨) "அழுவன்தொழுவன்" என்னும்படி பாலர்செய்யுமத்தைச் செய்து, (௩) "...... அபிதாநீம்ஸகாலஸ்ஸ்யாத் வநாத்ப்ரத்யாகதம்புந:" என்றிறே ஆசையுடையார் பவிஷ்யத்காலத்தை ஸமகாலமாக வபேக்ஷித்தபடியிருப்பது; அப்படியே இவர் பூதகாலத்திற்படிகளை யபேக்ஷிக்கிறார். (பானளவில்வேட்கையால்) ஸர்வஸ்மாத்பரனிடத்தில்பரபக்தியாலே

(பரன்) "பாதங்கள்மேலணிபைம் பொற்றுழாயென்றேயோது மாலெய்தினள்" என்றத்தை நினைக்கிறது. காலத்தால் தேசத்தால் கைகழிந்தவையாவன - தேசவிப்ரக்ருஷ்டமான பரவ்யூஹங்களும், காலவிப்ரக்ருஷ்டமான விபவமும். பரவிஷயபக்தி ஏகதேசமாய், "ஆழியன்னவசம் செய்யுமண்ணலார் தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே மாலுமால்" என்றுதொடங்கி, "கண்ணன் கழல்துழாய் பொன செய் பூண் மென்முலைக்கென்று மெலியும்" என்று - விபவப்ராவண்யமிறே விஞ்சவருளிச்செய்தது. அவையாவன - "குரவைபிணைந்தவர் நல்லடி" என்றும், "தேவர்கள் மாமுனிவரிறைஞ்ச நின்றசேவடி" என்றும், "குடக்கூத்தனார் தாளிணை" என்றும், "அகலிடங்கிடந்தவர் பாதங்கள்" என்றும், "திருமாதினைத்தடங்கொள்தார் மார்பினில் வைத்தவர் தாள்" என்றும், "இலங்கைநகரம் பரியுப்புத்தவர் தாளிணை" என்றும், "கண்ணன் கழல்" என்றுமிப்படி விபவத்தை யடிவிடாமலிருக்கிறபடி இது ......

ந்யக்ரோதஶாயியையும் பீயூஷஹாரியையும் (ச) "...... - ந்யக்ரோதஶாயீ பகவாந் பீயூஷாஹாரணஸ்தத," என்றவிபவங்களையிறே ஸஹ

(க) (௨) ...... (௩) ரா-அ ௨௩-௩௭.

மூ.-கோவானவீசன் குறையெல்லாந்தீரவே
ஓவாதகாலத்துவாதிதனை-மேவிக்
க்கழித்தடையக்காட்டிக் கலந்த குணமாறன்
வழுத்துதலால் வாழ்ந்ததிந்தமண். (கூகூ)

---

படித்தது; இங்கும் - "மடந்தையை வண்கமலத்திருமாதினைத்தடங்கொள் தார்மார்பினில் வைத்தவர்" என்று - (க) *விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதை ஸ்வீகரித்தபடி சொல்லிற்று.

(சாலவரிதானப்போகத்தி லாசையுற்றுனைந்தான்) இப்படி "தேசகாலங்களால் †கைகழிந்திருக்கிறது தத்கால வர்த்திகளுக்கும் தத்ரஸ்தரானவர்களுக்குமேயிறே அநுபாவ்யமாயிருப்பது" என்றறியாமல், அபிநிவேசாதிசயம் மறுபாடுருவும்படி யவகாட(ஊ)மாய், அத்தையப்போதே பெறுமையாலேயிதிலரானூர். இதுக்கடி - *குருகூரில் வந்துதித்த கோவாகையாலே. திருவயோத்யையில் பிறப்புராமபக்தியை ஜநிப்பிக்குமா போலே, திருநகரியில்பிறப்பும்பராபி(ஹி)நிவேசத்தைப்பிறப்பிக்குமிறே.(கோ)ராஜா. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் ராஜாவென்றபடி. இவ்விடம் அராஜகமாகாமைக்காயிற்று ஆழ்வாரங்குநின்றும் போந்து ஆவிர்ப்ப(வி)வித்தது. (கூஉ)

---

பதவுரை.

| | |
|---|---|
| கோவான ஈசன் | ஸர்வசேஷியான எம்பெருமான் |
| குறைஎல்லாம்தீரவே | எல்லாக்குறைகளும் தீரும்படி |
| ஓவாதகாலத்து | விச்சேதியாமல் நடந்து செல்லுகிற காலத்தில் |
| உவாதிதனை | அதிசமான உபாதியை |
| மேவி கழித்து | இவரோடுசேர்ந்து கழித்து, |
| அடையக் காட்டி | கீழ் அபேக்ஷித்த அபதானங்களையெல்லாம் வேலைவஸாதிப்பித்து |
| கலந்த குணம் | (தம்முடன்) கலந்த குணத்தை |
| மாறன் வழுத்துதலால் | ஆழ்வார் துதிக்கையாலே |
| இந்தமண் | இவ்வுலகம் |
| வாழ்ந்தது | வத்தைபெற்றது. (கூகூ) |

---

(க) தி-மொ-கூ-க-உ. † 'திருவடிகளில் திருத்துழாய்" அதிகபாடம்.

அவ. முப்பத்துமூன்றாம்பாட்டு. (கோவானவீசன்) இதில்-காலோபாதியைக் கழித்து அநுபவிப்பித்தபடியை யருளிச்செய்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். -அதெங்ஙனே யென்னில்; இப்படி தேசகால விப்ரக்ருஷ்டங்களான தன்படிகளை யநுபவிக்கவேணுமென்றாசைப்பட்டவிவர்க்கு, * காலசக்கரத்தானுகையாலேகாலோபாதி(யி)யைக்கழித்துவர்த்தமாநகாலம்போலேயாக்கிக் கொடுத்து, இவர்ஸத்தையே தனக்கெல்லாமாம்படியிருக்கிற தன்ப்ரணயித்வகுணத்தையும் அவனநுபவிப்பிக்கவே, எல்லாம் பெற்றாராய், இந்தப்ரணயித்வ குணத்தையு மநுபவித்து அந்தப்ரீதி ப்ரகர்ஷத்தாலே அத்தையே பேசிச்செல்லுகிற *கோவைவாயாளினர்த்தத்தை ஸங்க்ரஹித்தருளிச் செய்கிறார் "கோவானவீசன்" இத்யாதியாலேயென்கை.

வ்யா,-(கோவானவீசன்) "ஆழ்வாரைத்தரிப்பிக்கவே ஜகத்துஉஜ்ஜீவிக்கும்" என்று ஸர்வநிர்வாஹகனான ஸர்வேஶ்வரன். (குறையெல்லாம் தீரவே)கீழ்த்திருவாய்மொழியிலே தேசகாலாதீதபோக்யவஸ்துவையநுபவிக்கப் பெறாத துக்கத்தாலேவந்தஸங்கோசமெல்லாம்நிவ்ருத்தமாம்படி,*காலசக்கரத்தானுகையாலே) ஒவாதகாலத்துவாதிதனை)விச்சேதியாமல் நடந்துசெல்லுகிற காலத்தில்அதீதமானவுபாதியை. (மேவிக்கழித்து) (க) "அகாலகால்ய: - அகாலபவிந:" என்னும்படி இவரோடே சேர்ந்து அந்தக்காலோபாதியைக் கழித்து.

(அடையக்காட்டி) கீழபேக்ஷித்தவபதாநங்களைக் காட்டியென்றுதல்; அன்றிக்கே, "பூசும்சாந்து" "கண்ணியெனதுயிர்" இத்யாதிகளிலே - கரணங்களும் கரணியானவிவர்ஸத்தையும் தனக்கு அங்கராகாபரணம்பராதிகதிகளானபடியையும் காட்டினபடியாகவுமாம். "உன்னுகமுற்றுமகத்தடக்கி யாவியல்லல் மாய்த்ததே" என்று-என்னுளையானது நிர்த்துக்கமாயிற்றென்றருளிச்செய்யும்படி (கலந்தகுணம்) "உன்னை தென்னதாவியுமென்னதுன்னதாவியுமென்ன வண்ணமேநின்றாயென் றுரைக்க வல்லேனே" என்றிப்படி

(க) ரா-யு கஉ௯ கஅ.

௬௪-மண்ணுலகில் முன்கலந்து மால்பிரிகையால்மாறன்
பெண்ணிலைமையாய்க் காதல்பித்தேறி—எண்ணிடில்முன்
போலிமுதலான பொருளையவனாய்நினைந்து
மேல்விழுந்தான் மையல்தனின்வீறு. (௬௪)

---

ஏசத்தத்வமென்னலாம்படி, கலந்தகுணம் - ஸம்ச்லேஷித்த ப்ரணயித்வகுணத்தை.

(மாறன்வழுத்ததலால்) ஆழ்வார், ஸத்தை பெற்று "யானுமெம்பிரானை யேத்தினேன்யானுய்வானே" என்று இப்படிக் கீழ் வ்யஸநம் தீர்ந்து ஸ்தோத்ரம்பண்ணுகையாலே. (வாழ்ந்ததிந்தமண்) இந்த ஜகத்திலுள்ளாரும் ஸத்தைபெற்று வாழ்ந்தார்கள்; "வையம் மன்னிவீற்றிருந்து" என்றிறே பலச்ருதி. அன்றிக்கே, (க) "விஶ்வம்பரா புண்யவதீ - விஶ்வம்பராபுண்யவதீ" என்ற ஆழ்வார் கால்தரித்திருக்கையாலே பூமி பாக்யவதியாய் வாழ்ந்ததாகவுமாம். (௬௫)

---

பதவுரை.

| | |
|---|---|
| மண் உலகில் | இவ்விபூதியிலே |
| மால் | எம்பெருமான் |
| முன் கலந்து | முன்னேகூடி |
| பிரிகையால் | பிரிந்ததனால் |
| மாறன் | ஆழ்வார் |
| பெண்நிலைமையாய் | பெண்தன்மையை யுடையராய் |
| காதல் பித்து ஏறி | பக்தியாலே பித்து தலைமண்டைகொண்டு |
| எண்ணிடில் | எண்ணுமிடத்தில் |
| முன்போலி முதலானபொருளை | முன்னே உபமாநவஸ்துக்கள் முதலியவற்றை |
| அவனாய் நினைந்து | அவனாகவே நினைத்து |
| மையல் தனின்வீறு | வ்யாமோஹாதிசயத்தாலே |
| மேல்விழுந்தான் | மிகவும் அபிநிவிஷ்டரானார். (௬௪) |

---

(க)

அவ. — முப்பத்து நாலாம்பாட்டு. (மண்ணுலகில்) இதில் - ஸத்ருஶ பதார்த்தங்களையும் ஸம்பந்தி பதார்த்தங்களையும் அவனாக ப்ரமித்துப்பேசின பாசுரத்தையநுவதித்தருளிச் செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; கீழ் "காதல் மையலேறினேன்" என்று-ப்ரணயித்வகுணத்தை யநுபவித்து விளைந்த ப்ரீதிப்ரகர்ஷம் ஆஶ்ரயத்தையு மழிக்கும்படி கரைபுழியப்பெருக, அத்தையரையாறுபடுத்துகைக்காக அவன்பேரநிற்க, பிரிந்தது அவனையாகையாலே அவஸந்நராய் ராமகுணங்களுக்கிட்டுப்பிறந்த பரதாழ்வான்ஒரு வேடன் வாயிட்டு ராமசரிதத்தைக் கேட்டு தரித்தாப்போலே இவ்வாழ்வாரும் அவனோடு ஸத்ருஶபதார்த்தங்களையும் ஸம்பந்திபதார்த்தங்களையுமவனென்று பிச்சேறும்படி தமக்குப்பிறந்த வவஸ்தாவிஶேஷத்தை அந்யாபதேஶத்தாலே பேசின * மண்ணையிருந்து துழாவியினர்த்தத்தை "மண்ணுலகில்" இத்யாதியாலே யருளிச் செய்கிறாரென்கை.

வ்யா.-(மண்ணுலகில் முன்கலந்துமால் பிரிகையால்) பூலோகமான விவ்விபூதியிலே முன்னம் * கோவைவாயாளிலே பெரும்பேறான ஸம்ஶ்லேஷத்தை யுண்டாக்கி ஸர்வேஶ்வரன் விஶ்லேஷிக்கையால். (மாறன்பெண்ணிலைமையாய்) ஆழ்வார் அபலையினுடைய வவஸ்தையையடைந்து. (காதல்பித்தேறி) "என்பெண்கொடியேறிபித்தே" என்னும்படி பக்தியாலே காதல்பித்தேறி. (க) "க்ஷ்விடூநஜடேத - க்வஸிதுப்ரமதே" இத்யாதிப்படியே சித்தவிப்ர(ஹ)ம் பிறக்க.

(எண்ணிடில்) அந்தப்பித்தேறினப்ரகாரத்தைநிரூபிக்கில் அன்றிக்கே, (பித்தேறியெண்ணிடில்) பித்தேறின வாகாரத்தோடே தாம் நிரூபிக்கப்புகில். (முன்போலிமுதலானபொருளையவனாய் நினைந்து) அதாவது — * மண்ணையிருந்து தொடங்கி, * அயர்க்குமளவும் ப்ரதிபாதிக்கப்படுகிறமுன் கண்டஸத்ருஶ பதார்த்தங்களையும் ஸம்பந்தி பதார்த்தங்களையும் அவனாகவே ப்ரதிபத்திபண்ணியென்கை. இதெத்தாலேயென்னில்; (மையல்தனின்வீறு - மேல்விழுந்தான்) வ்யாமோஹாதிஶயத்தாலே அவற்றிலே அதிப(ஸ)க்திவிஷ்ட

(க) ரா-ஆ-௧௦-௩௧.

மூ.—வீற்றிருக்குமால் விண்ணில் மிக்கமயல்தன்னை
யாற்றுதற்காத்தன் பெருமையானவெல்லாம்—தோற்றவந்து
நன்றுகலக்கப்போற்றிநன்குகந்து வீறுரைத்தான்
சென்றதுயர்மாறன் தீர்ந்து. (௬௫)

---

ரானார். இவருடைய வஹிஷ்வேஷாதிஶயமிருந்தபடி யென்னென்று
ஜீயருக்கும் இதுகண்டு ஸஹிக்கவொண்ணாதபடியாயிற்று.

ஸத்ருஶபதார்த்தங்களும் ஸம்பந்தி பதார்த்தங்களுமாவன;
ஸத்ருஶபதார்த்தம் விண், கடல், ஞாயிறு, செந்தீ, தண்காற்று
ஒன்றிய திங்கள், நின்றகுன்றம், நன்று பெய்யும்மழை, கூத்தர்
நீறுசெவ்வேவயிட, திருவுடைமன்னர், உருவுடை வண்ணங்கள், கரு
வுடைத்தேவில்கள், விரும்பிப்பகவர், கரும்பெருமேகங்கள்; ஸம்பந்
தி பதார்த்தங்களாவன - நாறுதுழாய், வாமனன்மண், கோமள
வான் கன்று; ஸம்பந்திபதார்த்த ஸத்ருஶங்கள் - போயிளநாகம்,
வாய்த்த குழலோசை, ஆய்ச்சியர் வெண்ணெய்" என்றுவிப ஸ்ஜி
த்தாயிற்று ஆத்தானருளிச் செய்யும்படி. (௩-௪)

---

பதவுரை.

| | |
|---|---|
| விண்ணில் | பரமபதத்தில் |
| வீற்றிருக்கும் | எழுந்தருளியிருக்கிற |
| மால் | எம்பெருமான் |
| மிக்கமயல்தன்னை | (ஆழ்வாருடைய) அத்யந்த வ்யாமோஹத்தை |
| ஆற்றுதற்கா | தணிவிக்கைக்காக |
| தன் பெருமையானவெல்லாம் தோற்றவந்து | தன் ஐஶ்வர்யாதி வைபவங்களெல்லாம் ப்ரகாஶிக்க இங்கே வந்து |
| நன்று கலக்க | (தம்முடன்) நன்றாகக்கலக்க, |
| போற்றி நன்கு உகந்து | ஸர்வேஶ்வரனைக்கண்டு வணங்கி மிகவும் களிப்படைந்தவராய் |
| மாறன் | ஆழ்வார் |
| சென்றதுயர் தீர்த்து | கிடந்த துக்கங்களை ஒழிந்து |

வீறு உரைத்தான் (உபயவிபூதியிலும் தாம் வ்யாவ்ருத்தரான) பெருமையை அருளிச் செய்தார். (௩௫)

அவ.—முப்பத்தஞ்சாம்பாட்டு. (வீற்றிருக்குமால்) இதில்—அப்ராக்ருத விபூதியிலஸாதாரணாகாரத்தைக் காட்ட வநுபவித்து ஹ்ருஷ்டராகிற படியைப் பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; * வல்வினைதீர்க்கும் கண்ணனை ஸர்வேஸ்வரன், ஸத்ருஸஸம்பந்தி வஸ்துக்களையு மவனை வநுஸந்திக்கும்படி பிறந்த விவருடைய பித்த ஸவாஸநமாகத் தீரும்படி விலக்ஷணஸ்வ ரூபகுண விக்ரஹ விபூஷணாயுதபத்நீ பரிஜநவிஸிஷ்டனாய்க்கொண்டு பரமபதத்திலே வ்யாவ்ருத்தி தோற்றவிருக்கிறமேன்மையும், லீலா விபூதியிலுள்ளாரெல்லாரையும் ஸ்ருஷ்ட்யநுப்ரவேஸாதிகளாலே ரக்ஷிக்கிறவளவன்றிக்கே மநுஷ்யாதிரூபேண வந்தவதரித்து ரக்ஷித்துக்கொண்டுபோருகிறபடியையும்இவர்க்குக்காட்டிக்கொடுத்து; ஸர்வேஸ்வரன் இவரோடேவந்துபூர்ணஸம்ஸ்லேஷம்பண்ணியருள, அத்தைக்கண்டு *சூழ்விசும்பணிமுகிலுக்கு மேல் அங்கேசென்றால் பண்ணுகிறமங்களாஸாஸநத்தை, இங்கேயிருந்து அவனுடைய வுபயவிபூத்யைஸ்வர்யத்துக்கும் மங்களாசாஸநம்பண்ணி க்ருதக்ருத்யராய், "உபயவிபூதியிலுமென்னோடொப்பாரில்லை" என்றுஹ்ருஷ்டராகிற *வீற்றிருந்தேழுலகில் தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் "வீற்றிருக்குமால் விண்ணில்" இத்யாதியாலே யென்கை.

வ்யா;-(விண்ணில்-வீற்றிருக்குமால்) (௧) 'சூலீ நஃ காஞ்சநே [illegible] - ஆஸீநஃ காஞ்சநே திவ்யே ஸ ச ஸிம்ஹாஸநே ப்ரபு:" (௨) '[illegible] - ராமம் ரத்நமயே பீடே ஸஹஸீதம் ந்யவேஸயத்" என்றும், (௩) 'வஸிஷ்டோ [illegible] ஸஹ [illegible] வார்யமஹாத்மாநம் [illegible] ஸிரே" என்றும்சொல்லுகிறபடியே * வானக்கோனாய் * விண்ணோர் பெருமானாய் * மையகண்

(௧) ரா-அ-௪-௨௫. (௨) ரா-யு-௧௩௧-௫௩, ௩.)

ணூர் மலர்மேலுறை வாளுறைமார்பனைப் * வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்லவெழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரன். (மிக்க மயல் தன்னை) ஆழ்வாருடைய அத்யந்தவ்யாமோஹத்தை. "மயற்பெருங்காதலென் பேதைக்கென்செய்கேன்வல்வினையேனே" என்று பெற்றவர்களும் பேசிக்கைவிடும்படியான மிக்கமயல்தன்னை. (ஆற்றுதற்கா) கைப்பிடித்த தான் இத்தையாற்றுகைக்காக.

(தன் பெருமையானதெல்லாம் தோற்றவந்து) கீழில் ப்ரமமெல்லாமாறும்படி "பூவின்மிசை நங்கைக்குமின்பன்," "தூவியம் புள்ளுடையானடலாழி யம்மான்றன்னை" என்று பிராட்டியோடும் நித்யஸித்தரோடும் கூடியிருக்கிற விருப்பையும் "ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை" "என்று-உபயவிபூத்யைஶ்வர்யயுக்தனாயிருக்கிற படியையும்," வீவில் 'சீரன்மலர்க்கண்ணன் விண்ணோர் பெருமான்றன்னை" என்னும்படி குணவிக்ரஹாதிவைலக்ஷண்யம் முதலான வைபவமெல்லாம் ப்ரகாஶிக்க இங்கேவந்து. (நன்றுகலக்க) "மேவிநின்றுதொழுவார் வினை போகமேவும்பிரான்" என்னலாம்படி இவருடனே ஸம்ஶ்லேஷிக்க ;

(போற்றிநன்குகந்து) ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரனைக் கண்டு * போற்றியென்றேகைகளாரத்தொழுது மங்களாஶாஸனம் பண்ணி, "வீவில்காலமிசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன் வீவின்பமிகவெல்லை நிகழ்ந்தனன் மேவியே" என்று மிகவும் ஹ்ருஷ்டராய். அந்தப்ரீத்யுத்த(ஸ)தியாலே (வீறுரைத்தான்) "வானக்கோனைக்கவிசொல்லவல்லேற்கினிமாறுண்டே" "இனியாவர் நிகரகல் வானத்தே" என்று-தாம் உபயவிபூதியிலும் வ்யாவ்ருத்தரானபடியைப்பேசினார். (சென்றதுயர் மாறன் தீர்ந்து) நிவ்ருத்ததுக்கரானவாழ்வார். விஶ்லேஷவ்யஸநமென்னுதல், "வெய்ய நோய்கள் முழுதும் வியன் ஞாலத்துவீயவே" என்றும், "காற்றின்முன்னம் கடுகிவினைநோய்கள் கரியவே" என்றும் சொல்லுமவையாதல். (சென்றதுயர் - தீர்ந்து - மாறன்-நன்குகந்து வீறுரைத்தான்) நடந்து சென்றதுக்கம்தீர்ந்துஆழ்வாரத்யந்தம் ப்ரீதராய் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே தம்முடைய பெருமையைத் தாமே பேசினாராயிற்று.

மூ.-தீர்ப்பாரிலாத மயல்தீரக்கலந்தமால்
ஓர்ப்பாதுமின்றி யுடன்பிரிய—நேர்க்க
வறிவழிந் துற்றாருமறக் கலங்கப்பேர்கே
ட்டறிவுபெற்றான் மாறன்சீலம். (௩௬)

---

பதவுரை.

| | |
|---|---|
| தீர்ப்பார் இலாத | தீர்ப்பவர்களில்லாத (ஒருவராலும் தீர்க்கமுடியாத) |
| மயல் தீர | பெரியகாதல் தீரும்படி |
| கலந்தமால் | கூடின ஸர்வேஸ்வரன் |
| ஓர்ப்பு ஆதும் இன்றி உடன் பிரிய | ஆராய்ச்சி சிறிது மில்லாமல் உடனே பிரிய, |
| உற்றாரும் அறக்கலங்க | (அதைக்கண்ட தாய் முதலிய) உறவினரும் மிகவும் கலங்கிக்கிடக்க |
| நேர்க்க | முன்னிலுங்காட்டில் விசேஷமாக |
| அறிவு அழிந்து | சைதந்யமழிய, |
| பேர்கேட்டு | (எம்பெருமானுடைய) திருநாமங்களை (கட்டுவிச்சிமுதலானார் சொல்லக்கேட்டு) |
| மாறன் | ஆழ்வார் |
| அறிவுபெற்றான் | ஸத்தை பெற்றான்; |
| சீலம் | இது ஆழ்வாருடைய குணமாயிருந்தது. (௩௬) |

அவ.—முப்பத்தாறும்பாட்டு. (தீர்ப்பாரிலாத) இதில்- ப்ரணயித்வ குண விஶிஷ்டவஸ்துவை ப்ரத்யக்ஷமாக வநுபவிக்கப் பெறாமல் ப்ரக்ருதி விக்ருதியாய்மோஹித்துக்கிடக்க; ப்ரேமபரவஶர் ப்ரதிக்ரியைபண்ணத்தேட, அத்தை ப்ரபுத்த (வை-ஷ) ஸுஹ்ருத்துக்கள் "இது அநநுரூபம்" என்றறிந்து அநுரூபமான நிதாநத்தையும் தத்பரிஹாரத்தையும் விதிக்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார்.

அதெங்ஙனே யென்னில்; கீழுண்டான வநுபவம் மாநஸாநுபவமாத்ரமாய், பாஹ்யகரண யோக்யமல்லாமையாலே தந்தசையைத்தாமறியாதபடி மோஹித்துக்கிடக்க, பரிஸரவர்த்திகளானபரிவர்

அத்தைக்கலங்கி (க) * ஸவாஸநா தேவாஸ் ஸஹ்ருதி - ஸர்வாங்தேவாங்க மஸ்பந்தியிற்படியேப்ரிவின் கனத்தாலேபரிஹரிக்கவொருப்பட, இவர் ப்ரக்ருதியறிந்த ஸ்ரீமதுரகவிப்ரப்ருதிகளானப்ரபுத்த (வைஷ்ணவ)ஸஹ்ருத்துக்கள் அத்தைவிலக்கி உசிதபரிஹாரத்தைவிதித்துச்சொல்லுகிறபடியை; கலந்துபிரிந்ததலைமகளறிவழிவுகண்டுகலங்கிப்பரிவின் கனத்தாலே, தேவதாந்தரபரையாய்ப்ரதிபந்நபாஷிணியானகட்டுவிச்சிபாசுரங்கொண்டு வெறியாட்டாலே பரிஹரிக்கத்தேடுகிறதாய்மாரைநோக்கி, இவள் ப்ரக்ருதியறியுமுயிர்த்தோழியானவள் நோயின் நிதாநத்தை நிரூபணத்தாலே யறிந்தாளாகக்கொண்டு, "க்ருஷ்ணனடியாக வந்தநோவுக்கு, அவனைக்கொண்டே பரிஹரிக்குமதொழியநீங்கள் செய்கிறவை பரிஹாரமல்ல, தேவதாந்தரஸ்பர்ஶத்துக்கும் தத்ஸம்பந்திஸ்பர்ஶத்துக்கும் * தேர்ப்பாகனாரான * வண்டுவராபதிமன்னனையாஶ்ரயித்து * மாயன்றமரடி நீறுகொண்டணியுங்கோள்" என்றுவெறிவிலக்கின பாசுரத்தாலே யருளிச்செய்கிற * தீர்ப்பாரையாமினியில் தாத்பர்யத்தை "தீர்ப்பாரிலாத மயல்தீரக்கலந்தமால்" என்று தொடங்கியருளிச்செய்கிறார்.

வ்யா.— (தீர்ப்பாரிலாதமயல் தீரக்கலந்தமால்) * மண்ணையிருந்து துழாவில் * மயற்ப்பெருங்காதலானதுதீர, * வீற்றிருந்தேழுலகிற்கலந்த ஸர்வேஶ்வரன். (ஓர்ப்பாதுமின்றி யுடன்பிரிய) பிரிகைக்கு ஹேது நிரூபண மத்யல்பமுமாராயாமல், பெருக்காறுவற்றி யடிசுடுமாபோலவும், அபிஷேகமஹோத்ஸவம் குலைந்த அரண்ய ப்ரவேஶமானாப்போலவும், உடனேபிரிய. (உ) "பேதைநின்னைப்பிரியேனினி" என்னுதல், (௩) "பொருட்கோபிரிவென" என்னுதல் செய்யாமல், கலந்தகலவி கனவென்னலாம்படி அஶங்கிதமாகவகல. (நேர்க்கவறிவழிந்து) (ச) "ஶத்ருக்நோ நஷ்டஸம்ஜ்ஞஸ் ஸந் சத்ருக்நோநந்தரஸ்திதః" என்னும்படி பரதாழ்வான் நின்றாப்போலே நில்லாமோஹித்தாப்போலே மோஹித்து. நேர்க்கவறிவழிகையாவது-*மண்ணையிருந்துழாவியிற்காட்டிலு மறிவுகலங்கி. அங்கு-காணவும் கேட்கவும் பேசவும் பின்செல்லவும் க்ஷமையாயிருந்தாள், இங்கு - * குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும்பயந்து

(க) ரா-அ-உ-ருஉ. (உ) தி-மொ-௬-௩-௩. (௩) தி-வி-கக. (ச) ரா-அ-அஎ-ச.

* மதியெல்லாமுள்கலங்கி மயங்கியிறே கிடக்கிறது. (உற்றுரு மறக்கலங்க) (௧) "யே ச ராமஸ்ய ஸுஹ்ருதஸ் ஸர்வே தே மூடசேதஸ: — யே ராமஸ்ய ஸுஹ்ருதஸ்ஸர்வே தே மூடசேதஸ:" என்னும்படி, அத்தைக்கண்ட அன்னையரும் தோழியரும் தொடக்கமானாரும் மிகவுமறிவுகலங்கிக்கிடக்க, ஸ்ரீகௌஸல்யையாரைப் போலே மங்களாஶாஸநபரையானமாதா, (௨) "ஸர்வான் தேவான் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந: — ஸர்வான்தேவாந்நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:" என்னும்படியே எத்தையாகிலும்செய்துஇவளை மீட்கத்தேட,

அவ்வளவிலே தேவதாந்தரபரையாயிருப்பாளொரு கட்டுவிச்சி அதுக்குப்பரிஹாரமாகச்சொல்லுகிற* ஆடும் கள்ளுமிறைச்சியும் கருஞ்சோறும் செஞ்சோறுமாகிற நிந்த்யத்ரவ்யங்களாலே * இளந்தெய்வத்துக்கிழைத்தாடும் நிஹீநதைகளைக்கண்டு இவள் ப்ரக்ருதியறியுமுயிர்த்தோழியானவள் அத்தைநிஷேதித்து "தேர்ப்பாகனாற்கிவள் சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே" என்று நோய்க்கு நிதா(ந)நத்தையும், அதுக்குப்பரிஹாரமாக* சங்குசக்கரமெனறிசைக்கும்படியையும், * மாயப்பிரான் கழல் வாழ்த்துதலையும், * பெருந்தேவன்பேர்சொல்லும்படியையும், "களிறட்டபிரான் திருநாமத்தால் தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின்" என்றும், "மாயன்றமரடி நீறுகொண்டணிய முயலில்" என்றும், "வணங்கீர்கள் மாயப்பிரான்றமர் வேதம்வல்லாரை" என்றும், "வேதம்வல்லார்களைக் கொண்டு" என்றும், "ஊழ்மையில் கண்ணபிரான் கழல் வாழ்த்துமின்" என்றும், "வண்டுவராபதிமன்னனையேத்துமின்" என்றும் சொன்னபடியைக்கேட்டு, * தொழுதாடித் தூமணிவண்ணனுக்காட்செய்து நோய்தீர்ந்த ப்ரகாரத்தை - பேர்கேட்டறிவுபெற்றுனென்கிறது. (மாறன்சீலம்) ஆழ்வார் ஸ்வபாவமிதுவாயிற்று. (௩) * செவிக்கினிய கீர்த்தியைக் கேட்டு ஸத்தாபாத(வ)கமாகவும், (௪) "செவிக்கின்பமாவதுவும் செங்கண்மால் நாமம்" என்கிற (௫) * கேசவன் கீர்த்தியைக்கேட்டு ஸத்தைபெறவுமாயிறே யிருப்பது. (௩௯)

(௧) ரா-அ-௪௧-௨௦. (௨) ரா-அ-௨-௫௨, (௩) தி-௪-௯௯.
(௪) ௪-திருவ-௯௯. (௫) தி-வாய்-௭-௫-௯

மூ.—சீலமிகுகண்ணன் திருநாமத்தாலுணர்ந்து
மேலவன்றன்மேனிகண்டு மேவுதற்கு—சால
வருந்தியிரவும்பகலு மாறாமற்கூப்பிட்டு
இருந்தனனே தென்குருகூரேறு. (௬௭)

பதவுரை.

| | |
|---|---|
| தென்குருகூர் ஏறு | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார், |
| சீலம் மிகுகண்ணன் | மிகுந்த கல்யாணகுணங்களையுடையனான கண்ணபிரானுடைய |
| திருநாமத்தால் | திருநாமத்தினால் |
| உணர்ந்து | மோஹம் நீங்கித்தெளிவுபெற்று |
| மேல் | தெளிந்தபிறகு |
| அவன் தன்மேனிகண்டு மேவுதற்கு | அவனுடையவிக்ரஹத்தைக்கண்டு கிட்டி அநுபவிப்பதற்கு |
| சாலவருந்தி | மிகவும் வருத்தப்பட்டு |
| இரவும் பகலும் | அஹோராத்ரமும் |
| மாறாமல் கூப்பிட்டிருந்தனன் | இடைவிடாமல் கூவிக்கொண்டிருந்தார். (௬௭) |

அவ.—முப்பத்தேழாம்பாட்டு. (சீலமிகுகண்ணன்) இதில் - திருநாமத்தாலுணர்ந்தவர் நாமியானநாராயணனை யநுபவிக்கப் பெறாமையாலே அதிப்ரலாபமாய் ப்ரலாபிக்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; கீழ் (க) "வர்ஷேணபீஜம் [illegible] - வர்ஷேணபீஜம் ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" என்னுமாபோலே, தோழிசொன்ன ம்ருதஸஞ்ஜீவிநியான திருநாமப்ரஸங்கமே ஶிஶிரோபசாரமாக வாஶ்வஸ்தராயுணர்ந்தவநந்தரம், பிறந்தவுணர்த்திபேற்றுக் குடலன்றிக்கே க்லேஶாநுஸந்தாநத்துக்குடலாய் அத்தாலே நோவுபட்டு; ஆபத்ஸகனாய், தந்திதாந பரிஹாரங்களையுள்ளபடி யறியும் ஸர்வஜ்ஞனாய், கார்யம் செய்கைக்குறுப்பான வுபலையுமுடையனாயிருக்கிறவன் ரக்ஷியா[illegible]ழிகையாலே ஆர்த்தி [illegible] கூப்பிடுமாபோலே, "அவனைக்[illegible]வேணும்" [illegible]று கேட்டாரை[illegible]

(க) ரா-ஸு-உக-க.

நீர்ப்பண்டமாம்படி கூப்பிடுகிற *சீலமில்லாச்சிறிய னிலர்த்தத்தை யருளிச்செய்கிறார் “சீலமிகுகண்ணன் திருநாமத்தாலுணர்ந்து” இத்யாதியாலேயென்கை.

வ்யா.—(சீலமிகுகண்ணன் திருநாமத்தாலுணர்ந்து) ப்ரணயிநிகளோடே கலந்த ஶீலாதிக்யத்தையுடைய க்ருஷ்ணன்றிருநாமத்தை “வண்டுவராபதிமன்னன்” என்று தோழி சொல்லக்கேட்டு மோஹந்தெளிந்து, (மேலவன்றன்மேனிகண்டு மேவுதற்கு) உணர்ந்தவநந்தரம் அவன் விக்ரஹத்தைக் கண்டுகிட்டி யநுபவிக்கைக்கு. அதாவது-“கோலமேனிகாண” என்றும், “என்கண்காண” என்றும், “பாவியேன்காணவந்து” என்றும், “உன்றாள்கள்நான் குங்கண்டிட” என்றும், “உன்னைக்காண்பான்” என்றும், “நானுன்னைக்கண்டுகொண்டே” என்றும், “கண்டுகொண்டு” என்றும், “எங்குக்காண்பன்” என்றும், “தக்கஞானக்கண்களாலேகண்டு தழுவுவனே” என்றுமிப்படி பத்தும்பத்தாக வபேக்ஷித்து.

(சாலவருந்தி) மிகவும்வருந்தி. அதாவது - “நாராயணா” என்றும், “கூவிக்கூவி” என்றும், “வையங்கொண்ட வாமனாவோ” என்றும், “தாமோதரா” என்றும், “ஆணிசெம்பொன்மேனி யெந்தாய்” என்றும், “அப்பனேயடலாழியானே” என்றும, “நீக்கமின்றியெங்கும் நின்றாய்” என்றும், “நறுந்துழாயின் கண்ணியம்மா” என்றும், “வண்டுழாயின் கண்ணிவேந்தே” என்றும், “சக்கரத்தண்ணலே” என்றுமிப்படி பஹுப்ரகாரமாக ப்ரயாஸப்பட்டு.(க)“ஹாராம ஹாஸலக்ஷ்மண-ஹாராம ஹாலக்ஷ்மண” என்றும் (உ) “நசைவதேவீவிரராம-நசைவதேவீவிரராம கூஜிதாத்” என்னுமாபோலே (இரவும் பகலும் மாறாமல்கூப்பிட்டிருந்தனனே தென்குருகூரேறு) “காலந்தோறும்” என்றும், “நள்ளிராவும் நன்பகலும் நானிருந்தோலமிட்டால்” என்றும், “கூவிக்கூவி நெஞ்சுருகி” என்றும், “சக்கரத்தண்ணலேயென்று தாழ்ந்து” என்றுமிப்படிதிவாராத்ரவிபாக(ஶூந்ய)மறஸர்வகாலத்திலுங்கூப்பிட்டேயாமலிருந்தாராழ்வார ; இதென்னாகப்புகுகிறதோவென்று இவர் நெஞ்சுருகி நோவுபட்டருளுகிறார். (தென்குரு

(க) ரா-ஸு-உஅ-அ. (உ) ரா-அ-சுO-உரு.

மூ.—ஏறுதிருவுடைய வீசனுகப்புக்கு
வேறுபடிலென்னுடைமை மிக்கவுயிர் —தேறுங்கால்
என்றனக்கும் வேண்டாவெனுமாறன் றாளை நெஞ்சே
நந்தமக்குப்பேறாகநண்ணு. (கூஅ)

கூரேறு-இருந்தனனே) "இனித்திருநகரியிலாழ்வார் ப்ராதாந்ய மெங்ஙனே நடக்கக்கடவதோ" என்று ஶங்கிக்கும்படியா யிருக்கிறது. (கஎ)

பதவுரை.

| | |
|---|---|
| ஏறு திருஉடைய | தன் திருமார்வில் ஏறப்பெற்ற பெரிய பிராட்டியாரை யுடையனான |
| ஈசன் | ஸர்வேஶ்வரனுடைய |
| உகப்புக்கு வேறுபடில் | திருவுள்ள வுகப்புக்கு (உறுப்பாகாமல்) வேறுபட்டால் |
| என் உடைமை | என் ஆபரணாதிகளும் |
| மிக்க உயிர் | இவற்றினுயர்ந்த ஆத்மாவும், |
| தேறுங்கால் | ஆராயுமிடத்தில் |
| என்றனக்கும் வேண்டா எனும் | எனக்கும்வேண்டியதில்லையென்று வெறுத்துரைத்த |
| மாறன் | ஆழ்வாருடைய |
| தாளை | திருவடிகளை |
| நெஞ்சே | மனமே! |
| நந்தமக்கு | நமக்கு |
| பேறு ஆகநண்ணு | ப்ராப்யமாக விரும்பு. (கூஅ) |

அவ.—முப்பத்தெட்டாம்பாட்டு. (ஏறுதிருவுடையவீசன்) இதில்-இவ்வாற்றாமைக்குஉதவாமையாலே அவனுக்குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களில்தாம் நசையற்றபடியைப்பேசினபாசுரத்தாலே யருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; கீழ் * சீலமில்லாச் சிறியனில் ஓலமிட்டழைத்த விடத்திலும் வந்து முகங்காட்டக் காணாமையாலே, "ப்ராப்தனாய் ஶீலவானாய் விரோதி நிரஸநஸமர்த்தனாயிருக்கிற ஸர்வேஶ்வரன் இத்தசையில் முகங்காட்டாமைக்

கடி இத்தலையை வேண்டாதொழிகையிறே, அவனுக்கு வேண்டாத வென்னுத்மாத்மீயங்களாலெனக்கொரு கார்யமில்லை" என்று அவற்றில் நசையற்றபடியை அர்யா .தேசத்தாலேயருளிச்செய்கிற * எறுளுமிறையோ னிலர்த்தத்தை "ஏறுதிருவுடைய வீசனுகப் புக்கு" என்றுதொடங்கி யருளிச்செய்கிறுரென்கை.

வ்யா.---(ஏறுதிருவுடையவீசன்) பிராட்டி ஏகாயனையாகையாலே (க) "ந ஹிமேஜீவிதே நந - நஹிமேஜீவிதேந" இத்யாதியாலே-அத்தலைக்குறுப்பல்லாத வாத்மாத்மீயங்களில் நசையற்றபடிசொன்னுள்; இவர் மிதுநநாயகராகையாலே "திருமகளும் கூறுனுந்தனியுடம்பன்" என்றும், "மலர்மாதருறைமார்பன்" என்றும், "படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோள் பரம்புருடன்" என்றும் -- இப்படி ஸ்ரியஃபதியாயிருக்கிற ஸர்வேஸ்வரனுடைய வுகப்புக்குப் புறத்தியான மாமைமுதலான வுடைமையோடு உயிரோடுவாசியற வேண்டாவென்கிறுர்.

ஏறுதிருவுடைய வீசனென்று - ஸ்ரியஃபதித்வத்தால் வந்த ஸர்வேஸ்வரத்வம் சொல்லுகிறது. (ஏறுதிரு) (உ) "யஸ்யாஸ வக்ஷஸ்ஸ்தலம் ஹரே: - யஸ்யாஸவக்ஷஸ்ஸ்தலம்ஹரே:" என்று - ஆருட ஸ்ரீசனிறே. எவம்விதனுனவனுடைய (உகப்புக்குவேறுபட்டவ) அதாவது-சந்தநகுஸும தாம்பூலாதிகளைப்போலே அவனுக்கிஷ்ட விநியோகார்ஹமா யிருக்கையன்றிக்கே ஸ்வார்த்ததைக் குறுப்பாயிருக்குமாகில். அத்தையாயிற்று (ங) "தவஸேஷவிபவ: உ ஹிரோஸ்து - தவஸேஷத்வ விபவாத்பஹிர்ப்பூதம்" என்றது.

(என்னுடைமை) அதாவது – "மணிமாமை, மடநெஞ்சால், நிறைவினல், தளிர்நிறத்தால், அறிவினல், கிளரொளியால், வரிவளையால், மேகலையால், உடம்பினுல்" என்று-ஆத்மாத்மீயங்களாயுள்ளவை, (மிக்கவுயிர்) இவற்றில் விலக்ஷணமாய் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய் பகவச்சேஷமாய், ஸ்ரீவத்ஸம் ஸ்ரீகௌஸ்துபம்போலே எம்பெருமானுக்கு போக்யமாயிருப்பதொரு ஆத்மஸ்வரூபமென்று. (தேறுங்கால்) பரப்ரீதிவிஷயமாயிருக்கிற வாகாரத்தை நன்றாகத்தெளியுங்கால். (ச) "நாரணன்றன் வாடாதமலரடிக்கீழ்

(க) ரா-ஸு-உகூ-டு. (உ) வி-பு-க-க-௪0டு (ங) ஸ்தோ-ர(ச)தி-வாய்-க-௬-ச

மூ —நண்ணாதுமாலடியை நானிலத்தே வல்வினையால்
எண்ணாரத் துன்பமுறுமிவ்வுயிர்கள்—தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமற் கண்கலங்குமாறனருள்
உண்டுநமக்குற்றதுணை யொன்று. (நக)

வைக்கவே வகுக்கின்று" என்றும், "தனக்கேயாக வெனைக் கொள்ளுமீதே" என்றும், (க) "உன்றன் திருவுள்ளமிடர் கெடுந் தோறும்" என்றுமிப்படித் தெளியவாராய்ந்தால் அத்தலைக்குறுப் பாயே யிருக்கவேணும்; இப்படி யன்றிக்கே வேறுபட்டதாகில்- ஸ்வார்த்தகைக்குறுப்பாகில், (என்றனக்கும் வேண்டா) பரதந்த்ரனை வெனக்குத்தானும் வேண்டா. (எனு மாறன்றாளை நெஞ் சேநந்தமக்குப் பேறாகநண்ணு) என்றிப்படியருளிசசெய்யு மாழ்வார் திருவடிகளை, நெஞ்சே! நமக்கு ப்ராப்யமாம்படியடை. நமக்கு இங்கிரபந்தங்களொன்றும் வேண்டா, ஆழ்வார் திருவடிகளே ப்ராப்யமென்று ப்ராபி. (நஅ)

பதவுரை.

| | |
|---|---|
| மால் அடியை | எம்பெருமான் திருவடியை |
| நண்ணாது | ஆஶ்ரயியாமல் |
| நானிலத்தே | இப்பூலோகத்தில் |
| வல்வினையால் | க்ரூரமான பாபகர்மங்களாலே |
| எண் ஆராத் துன்பம் உறும் | அளவற்ற துக்கத்தை அநுபவிக்கி, |
| இவ்வுயிர்கள் | இவ்வாத்மாக்களுடைய |
| தண்ணிமையை | தாழ்வை |
| கண்டு இருக்கமாட்டாமல் | கண்டு ஆறியிருக்கமாட்டாமல் |
| கண் கலங்கும் | திருக்கண்களும் (திருவுள்ளமும் கலங்கியருளின |
| மாறன் | ஆழ்வாருடைய |
| அருள் | க்ருபையானது |
| நமக்கு உற்ற துணை ஒன்று உண்டு | நமக்கு அடுத்ததொரு துணையாயிருக்கின்றது. (நக) |

அவ.—முப்பத்தொன்பதாம்பாட்டு. ( நண்ணாதுமாலடியை ) இதில் - ஸம்ஸாரிகளுடைய வநர்த்தத்தைக்கண்டு வெறுத்தபாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார்.

அதெங்ஙனேயென்னில்; கீழ் ஆத்மாத்மீயங்களில் நசையற்றவிடத்திலும், அவைபோக்காமையாலே விரஹவ்யஸநத்துடேயித்து "தம்மிழவுக்குக்கூட்டாவாருண்டோ" என்று ஸம்ஸாரிகளைப் பார்த்தவிடத்தில் அவர்கள் பகவத்விஷயத்தைக் காற்கடைக்கொண்டு இதரவிஷயங்களிலுடைய லாபாலாபங்களே பேறுமிழவுமாய் நோவுபடுகிறபடியைக்கண்டு அதுபொறுக்கமாட்டாமல் ஸர்வேஶ்வரனைப்பார்த்து "ரக்ஷகனை நீயுளனாயிருக்க இவைநோவுபடுகை போருமோபிரானே" என்று விஷண்ணராய், "இவர்கள் நோவைப் போக்குதல், இதுகண்டு பொறுக்கமாட்டாதவென்னை முடித்தல் செய்தருளவேணும்" என்ன "இவர்களுக்கிச்சை யில்லாமையாலே உம்மோபாதிநாமும் நொந்து காணுமிருக்கிறது" என்ன, "ஆனால் இவர்கள் நடுவில் நின்றுமென்னை வாங்கவேணும்" என்ன, இவர்க்லேஶங்தீரும்படி, பிராட்டியுந் தானுமாகத் திருநாட்டிலே யிருக்கிற விருப்பை அவன் காட்டிக்கொடுக்க, அத்தைக்கண்டநுபவித்து க்ருதார்த்தராகிற * நண்ணாதார் முறுவலிப்ப விலர்த்தத்தை "நண்ணாது மாலடியை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-(நண்ணாதுமாலடியை) ஆர்ரிதவ்யாமுக்த(ஞ)னான ஸர்வேஶ்வரன் திருவடிகளை யாஶ்ரயியாமல். ஆத்மாத்மீயங்களிலும் தாம் நசையற்றவிடத்திலும் அவனைக்கிட்டப்பெறாமல், ஸம்ஸாரிகளில் தம்மிழவுக்குக் கூட்டாவாருண்டோவென்று பார்த்து நானிலத்தே வல்வினையாலித்யாதியாலே வெறுத்தருளிச்செய்கிறாரென்கிறார். (நானிலத்தே) நாலுவகைப்பட்ட பூமியிலே. அதாவது - குறிஞ்சிநிலமான திருமலைகளிலும், முல்லைநிலமான திருக்கோட்டியூர் திருமோகூர் தொடக்கமான ஸ்தலங்களிலும், மருதநிலமானகோயில் பெருமாள்கோயில் தொடக்கமான ஸ்தலங்களிலும், நெய்தல் நிலமான திருவல்லிக்கேணிதிருப்புல்லாணி திருவல்லவாழ் திருவண்வண்டூர் தொடக்கமான ஸ்தலங்களிலும், ஸந்நிஹிதனாயிருக்கிற அவ

னிருப்பது: ஆந்தளெளலப்யமே ஹேதுவாக அவன்திருவடிகளை யாச்ரயியாதே. (நானிலத்தேவல்வினையாலெண்ணாத் துன்பமுறுமிவ்வுயிர்கள்) இப்படி விலக்ஷணமான பூமியிலே பகவதாச்ரயணம்பண்ணி உஜ்ஜீவியாமல் (க) "மாலைத்தாம் வாழ்த்தாதிருப்பர் இதுவன்றே மேலைத்தாம் செய்யும்வினை" என்னும்படி ப்ரபல கர்மங்களாலே அஸங்க்யாதமான து:கத்தை மிகவுமடைந்துபோருகிறவிவ்வாத்மாக்கள். (உ) "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவௌ। ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யா ஜீவிதக்ஷயம் - நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதேரவௌ। ஆத்மநோநாவபுத்யந்தே மநுஷ்யாஜ்ஜீவிதக்ஷயம்" என்னும்படி.

(தண்ணிமையைக் கண்டிருக்கமாட்டாமல்) இவர்களநர்த்தத்தைக் கண்டாற்றமாட்டாமல். அதாவது-"எண்ணாத்துயர் விளைக்குமிவை யென்னவுலகியற்கை" "ஏமாறிக்கிடந்தலற்றுமிவையென்னவுலகியற்கை" "கண்டாற்றேனுலகியற்கை" "தமமுடமிவை யென்னவுலகியற்கை" "ஈங்கிதன்மேல் வென்னரகமிவையென்னவுலகியற்கை" "அறப்பொருளையறிந்தோராரிவை யென்னவுலகியற்கை" "கொடுவுலகங்காட்டேலே" இத்யாதிகளாலே இதின் கொடுமையைப் பலகாலுமருளிச்செய்து. (கண்கலங்குமாறன்) திருக்கண்களுந் திருவுள்ளமும் கலங்கிப்போருமாழ்வார். அதாவது - "கூவேகொள்ளடியேனைக் கொடுவுலகங்காட்டேலே" "வாங்கெனை" "கூட்டரியதிருவடிக்களெஞ்ஞான்று கூட்டுதியே" என்றுகூப்பிட்டபின்பு, எம்பெருமானாலே "கூட்டரியதிருவடிக்கட்கூட்டினை" "அடைந்தேனுன்றிருவடியே" என்னும்படி ஸமாஹிதராய், ஸம்ஸாரிகள் நோவுக்குநொந்தருளிச்செய்தவாழ்வார். (அருளுண்டு நமக்குற்றதுணையொன்று) இப்படி ஈச்வரனுங்கூடக்கைவிட்ட ஸம்ஸாரிகளையுமகப்பட விடமாட்டாமல் ஈச்வரனோடே மன்றாடுமாழ்வாருடையவருள், அந்தரங்கமான ரக்ஷையாக நமக்கொன்றுண்டு, வேறொரு ரக்ஷகாந்தரந்தேடவேண்டா, தானேரக்ஷகமாயிருக்கும். (ங) "அருள்கொண்டாயிரமின்றமிழ்பாடினனருள் கண்டீரிவ்வுலகினில் மிக்கதே" என்னக்கடவதிறே. (௩௧)

(க) பெரி-அ-கச (உ) ரா-அ-க0டு-உச (ங) கண்ணி-அ.

மூ-ஒன்றுமிலைத்தே விவ்வுலகம் படைத்த மால்
அன்றியெனவாருமறியவே—நன்றாக
மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன்றாடொழவே
காதலிக்குமென்னுடையகை. (௯௦)

பதவுரை.

| | |
|---|---|
| இவ்வுலகம்படைத்த | இந்தலோகங்களை ஸ்ருஷ்டித்த |
| மால் அன்றி | ஸர்வேஶ்வரனல்லாமல் |
| தேவுஒன்றும் இலை என | வேறுதெய்வமொன்றுமில்லையென்று |
| ஆரும்அறிய | யாவருமுணரும்படி |
| நன்றாகமூதலித்து | நன்றாய் நிரூபித்து |
| பேசியருள் | அருளிச்செய்த |
| மொய்மகிழோன் | பெருமையுள்ள வகுளாபரணருடைய |
| தாள்தொழவே | திருவடிகளை நோக்கி அஞ்ஜலி செய்வதன்பொருட்டே |
| என்னுடையகை | என்கைகள் |
| காதலிக்கும் | ஆசைப்படும். (௯௦) |

அவ-நாற்பதாம்பாட்டு. (ஒன்றுமிலைத்தேவு) இதில் - ஸம்ஸாரிகளாஶ்ரயணத்துக்குறுப்பாக அர்ச்சாவதாரே பரத்வத்தை யருளிச்செய்த பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; * நண்ணாதாரில்-ஈஶ்வரனுங்கூட "திருத்தவொண்ணாது" என்று கைவிட்ட ஸம்ஸாரிகளைத் திருத்தவொருப்பட்டு ப்ரமாணாந்தரவிலக்ஷணமாய் நித்ய நிர்த்தோஷமான வேதாந்தவாக்யங்களாலும், ஸந்தம்ஸந்யாயங்களாலும், இதிஹாஸாதிஸித்தமான ஜகந்நிர்வாஹகத்வ திவ்யசேஷ்டிதங்களாலும், ஸம்ஸாரபீஜமான தேவதாந்தரபரத்வ ப்ரதிபத்தியை அடியறுத்து, "ஶ்ரிய:பதியான நாராயணனே ஜகத்காரணபூதன்" என்று த்ருடதரமாகவுபபாதித்து, இப்படி ஸர்வஸ்மாத்பரனானவிவன் "அரியன்" என்றுகைவாங்க வேண்டாதபடி திருநகரியிலேவந்து ஸந்நிஹிதனானபின்பு அவனை

யாச்ரயியுங்கோளென்று பரோபதேச ப்ரவ்ருத்தராகிற - *ஒன்றுந் தேவிலர்த்தத்தை "ஒன்றுந்தேவு" என்றுதொடங்கி யருளிச் செய்கிறாரென்கை.

வ்யா.-(ஒன்றுமில்லைத்தேவித்யாதி) (இவ்வுலகம்படைத்தமாலன்றி - தேவு - ஒன்றுமில்லை - என) ஸர்வஸ்ரஷ்டாவான ஸர்வேச்வரனையொழிய, கார்யபூதரில் காரணத்வத்தால் வந்தபுகரையுடையவர்களொருவருமில்லையென்று. அதாவது - "ஒன்றுந்தேவும்" என்றுதொடங்கி, "நான்முகன்றன்னொடு தேவருலகோடுயிர் படைத்தான்- ஆதிப்பிரான் நிற்க மற்றைத்தெய்வம் நாடுதிரே" என்றும், "நாடிநீர் வணங்குந்தெய்வமுமும்மையு முன்படைத்தான்வீடில்சீர்புகழாதிப் பிரான்" என்றுமருளிச்செய்த காரணத்வ ப்ரயுக்தமான சந்தைகளைக்கடாக்ஷித்தபடியென்கை. (ஆருமறியவேநன்றாக மூதலித்துப் பேசியருள்) அதாவது - எத்தனையேனும் கல்வியில்லாத ஸ்த்ரீபாலருமறியும்படி; (க) "க்ஷேத்ரஜ்ஞேயஶ்ச - த்வமப்ரமேயஶ்ச" (உ) "தஜ்ஜ ஸ்ஸ்வாமீ ஜநாதநோ ஜ்ஞேயாத்மா யோகிநாம் - தமஸ: பரமோ தாதா ஶங்க சக்ரகதாதர:" என்று தாராங்கதாதிகளறியும்படியானாப்போலே, "பரந்ததெய்வமும்" என்றுதொடங்கி "கண்டுந்தெளியகில்லீர்" என்றும், "பேசநின்ற சிவனுக்கும்" என்றுதொடங்கி "கபாலநன்மோக்கத்துக்கண்டு கொண்மின்" என்றும், "இலிங்கத்திட்ட புராணத்தீரும்" என்றுதொடங்கி "பொலிந்து நின்றபிரான்கண்டீர்" என்றும், "போற்றிமற்றோர் தெய்வம்" என்று தொடங்கி "ஆற்றவல்லவன் மாயங்கண்டீர்" என்றும், "ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து" என்றுதொடங்கி "பல்படிகால் வழியேறிக்கண்டீர்" என்றும், "புக்கடிமையினால் - நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே" என்றும், "விளம்புமாறுசமயமும்" என்றுதொடங்கி "உளங்கொள் ஞானத்துவைமின்" என்றும், "உறுவதாவது - நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே" என்றும் - பேசநின்றதேவதாந்தர ஸாபேக்ஷத்வாதிகளையும், ※ இலிங்கத்துவிளம்புப் பாஹ்யகுத்ருஷ்டிமத நிராகரணத்தையும் சொல்லி, "ஓடி - கண்டீர்" "கண்டுந்தெளியகில்லீர்" "அறிந்தோடுமின்" "ஆட்செய்

மூ.—கையாரும் சக்கரத்தோன் காதலின்றிக்கே யிருக்கப்
பொய்யாகப்பேசும் புறவுரைக்கு—மெய்யான
பேற்றையுபகரித்த போரருகின் றன்மைதனைப்
போற்றினனே மாறன் பொலிந்து. (சக)

---

வதே - உறுவதாவது" என்றுவிரக்தபூர்வகமாக வாஶ்ரயணம் ருசிக்கும்படி யருளிச்செய்தவையென்கை.

(மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன்) அதாவது-இனிபரத்வ விஷயமாகப்பரோபதேஶம்பண்ண வேண்டாதபடி நன்றாகவே சேதநர் திருந்தும்படி "திருக்குருகூரதனுள் நின்றவாதிப்பிரான்" "அதனுட்பரன்," "அதனுளீசன்" "அதனுட்பொலிந்துநின்றபிரான்" "அதனுளாடுபுட்கொடியாதிமூர்த்தி" என்று - அர்ச்சாவதாரத்திலே பரத்வத்தை யுபதேசிக்கையாலே, பரத்வ விஷயமாங் கைதீர்ந்து திருந்தக்கண்டு, சாத்தினவழகிய திருமகிழ் மாலையும் ஸம்ருத்த(ஐ)மாய், அதுவேநிரூபகமாம்படியான வாழ்வாரென்கை. "நாட்கமழ் மகிழ்மாலைமார்பினன் மாறன் சடகோபன்" என்றத்தைப்பின் சென்றபடி.

(மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன் தாள் தொழுவீர் காதலிக்குமென்னுடையகை) எம்பெருமான் திருவடிகளுக்காட் சேர்த்தருளுகையாலே பகவத்கைங்கர்யா(ர்)திஶயிதனா ஸம்ருத்தமயதடகாவகாஹந ஸம்ப்ரஸந்நாத்ம ஸ்வரூபகாந்த்ர நிரதிஶய ஸுகந்தவிகஸத்கேஸரமாலாலங்க்ருத வக்ஷஸ்தலரான வாழ்வார் திருவடிகளை (க) "ஆத்யஸ்ய ந: குலபதேர்-வகுளாபிராமம்ஸ்ரீமத்தங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா" என்று பணிக்கையிலே பக்திபண்ணுகின்றனவென்னுடைய ஹஸ்தங்களானவை. காதலிக்கை - கௌதூஹலிக்கை யாகவுமாய் * முடியானேயில் கரணங்களின்படியாயிற்று, தம் கரணங்கள் * குருகூர்நம்பிமொய்கழல்களிலே காதலிக்கும்படியு மென்கிறார். இத்தால் - பரோபதேசம்பண்ணி யுஜ்ஜீவிப்பிக்கு மாழ்வார் திருவடிகளிலே பற்ற வடுப்பதென்றதாயிற்று. (சo)

---

பதவுரை.

கைஆரும் சக்கரத்தோன் — திருக்கை நிறையும்படி திருவாழியைத் தரித்தாலே நிரூபகமான வெம்பெருமான்,

| | |
|---|---|
| காதல் இன்றிக்கே இருக்க | (தன்விஷயத்தில் ஆழ்வார்க்கு) பக்தியில்லாமலேயிருக்க |
| பொய்யாகப்பேசும் | கபடமாகப்பேசுகின்ற |
| புறனுரைக்கு | வஞ்சகவார்த்தைகளுக்கு |
| மெய்யானபேற்றை | ஸத்யமான புருஷார்த்தத்தை |
| உபகரித்த | உதவிசெய்தற்கேற்ற |
| பேர்அருளின் தன்மைதனை | மஹாகருணையின் நிலைமையை |
| மாறன் | ஆழ்வார் |
| பொலிந்து | விளங்கிநின்று |
| போற்றினன் | அருளிச்செய்தார். (சக) |

அவ,—நாற்பத்தோராம்பாட்டு. (கையாரும்) இதில் - ஸம்ஸாரிகளையும் திருத்தும்படியாக ஸர்வேஸ்வரன் பண்ணின நிர்ஹேதுக விஷயீகாரத்திலே வித்த(ஸ)ராகிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனே யென்னில்; ஸ்வப்ராப்தி ஸாதநங்களிலிறங்காமல் துர்விஷயங்களிலேமண்டி இவ்வர்த்தத்தை யுணரவுமறியாதே அத்யந்தமுபேக்ஷயனாய் ஸம்ஸாரிகளிலந்யதமனான வென்னை, இவையொன்றும் பாராமல் நிர்ஹேதுகமாக வங்கீகரித்துத் தன் திருவடிகளிலே ஶேஷத்வத்தையுமறிவித்துக்கைங்கர்யத்தாலல்லது செல்லாதபடிபண்ணிப்பிறரையும் திருத்தும்படியான சதிரையுமுண்டாக்கி, என்பக்கலிலே வ்யாமுக்த(ஶ)னென்னோடே வந்து கலந்தானென்று ப்ரீதராகிற-*கையார் சக்கரத்தினர்த்தத்தை,"கையாருஞ்சக்கரத்தோன்" என்றுதொடங்கியருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(கையாரும்) "கையார் சக்கரத்தென் கருமாணிக்கமே" என்றுதொடங்கி "விதிவாய்க்கின்றுகாப்பாரார்" என்னுமளவும் கடாக்ஷித்தருளிச்செய்தபடி, (கையாரும் சக்கரத்தோன்) திருக்கை நிறையும்படி திருவாழியை த(ய)ரித்தது வேநிரூபகமானவன். (காதலின்றிக்கே யிருக்க) ஸ்வவிஷய ப(ஹ)க்தியின்றிக்கேயிருக்க. (கையாரும் சக்கரத்தோன் காதலின்றிக்கேயிருக்கப் பொய்யாகப்பேசும் புறனுரைக்கு) "பொன்னெடும் சக்கரத்துன்னையே யவிவின்றியாதரிக்குமெனதாவியே" என்னும்படி

தத்விஷயத்திலே ப்ரேமமுண்டாகவேண்டியிருக்க, இவ்வழகைக் கண்டிருக்கவும் தததநுகுணமான வக்ருத்ரிம ப்ரேமமின்றிக்கே, க்ருத்ரிமப்ரேமத்தாலே இவற்றைப்பேசியநுபவிக்கிறபடியைக் கண்டு, போட்கனாயிருக்கிற மித்ரபா(ஹா)வத்தையேபார்த்து அந்த அஹ்ருதயமான வுக்திக்கு. பொய்யாகப்பேசும் புறனுரையாவது- "பொய்யேகைம்மைசொல்லிப் புறமே புறமேயாடி" என்றும், "என்றென்றேசிலகூத்துச்சொல்ல" என்றும், "புறமேசிலமாயம் சொல்லி" என்றும், "உன்னையும் வஞ்சிக்கும் கள்ளமனம்" என்று மிப்புடைகளிலே சொன்னவை. ஏவம்விதமான மித்ரபா(ஹா)வ மாத்ரமான மித்யா(ப்ரா)ஜல்பிதங்களுக்கு (மெய்யானபேற்றையுப கரித்த) யதாஜ்ஞாநமுடையார் பெறும் ஸத்யமானபேற்றை உபகரித்த.

அதாவது - "மெய்யேபெற்றொழிந்தேன்" "என்னாகி யொழிந்தான்" "உன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்" "முறை முறையாக்கை புகலொழியக்கண்டு கொண்டொழிந்தேன்" "எம் பிரானுமென்மேலானே", "மாலார்வந்தினநாளடியேன்மனத்தே மன்னினார்" "அடியேனைடுமானே" "ஆனானுடையான் - என் னைமுற்றவுந்தானானான்" என்றும் பேசும்படியான விப்பேற்றையெ ன்றபடி.

இத்தையுபகரிக்கைக்கடியேதென்ன (பேரருளென்கிறது). அதாவது-"விதிவாய்க்கின்று காப்பாரார்" "எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்கும்" "ஆவாவென்றருள் செய்து" "தானேயின்னருள் செய்து" என்றருளிச்செய்தவையென்கை. (பேர ருளின்றன்மை தனைப்போற்றினனேமாறன் பொலிந்து) அதாவது இரும்பைப்பொன்னாக்குமாபோலே, நித்யஸம்ஸாரிகளுக்கும் நித்ய ஸூரிகள் பேற்றையுபகரிக்கு மெம்பெருமானுடையநிர்ஹேதுக க்ருபாப்ரவாஹத்தின் ஸ்வபாவத்தை† ப்ரீதியாலே யருளிச்செய்தா ராழ்வாரென்கை. (க) "க்ருபயா[illegible] -க்ருபயாபர்ய பாலயத்" என்னுமாபோலே. (சக)

(க) [illegible]. † (பா) யநுஸந்தித்து ஆழ்வார் அபி(பி) வ்ருத்தியையுடையராய்.

மூ—பொலிகபொலிகவென்று பூமகள்கோன்தொண்டர்
மலிவுதனைக்கண்டுகந்து வாழ்த்தி—உலகில்
திருந்தாதார்தம்மைத் திருத்தியமாறன் சொல்
மருந்தாகப் போகும்மனமாசு. (சஉ)

பதவுரை.

| | |
|---|---|
| பொலிக பொலிக என்று | 'வாழ்க! வாழ்க!!' என்று, |
| பூமகள்கோன் தொண்டர் | ஸ்ரியஃபதியின் அடியார்களினுடைய |
| மலிவுதனைக்கண்டு | ஸம்ருத்தியைக்கண்டு |
| உகந்து | ஸந்தோஷித்து |
| வாழ்த்தி | மங்களாசாஸநம் பண்ணி, |
| உலகில் | இவ்வுலகத்தில் |
| திருந்தாதார்தம்மை | திருந்தாமலிருப்பவர்களை |
| திருத்திய | திருத்தியருளின |
| மாறன் | ஆழ்வாருடைய |
| சொல் | ஸ்ரீஸூக்தியாகிய |
| மருந்தாக | ஔஷதமடியாக |
| மனமாசுபோகும் | மநஃ களங்கம் ஒழியும். (சஉ) |

அவ.—நாற்பத்திரண்டாம்பாட்டு. (பொலிக பொலிக) * ஒன்றுந்தேவில் - தாம்திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மங்களாசாஸநம்பண்ணியும் திருந்தாதாரைத் திருத்தியும் செல்லுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார்தில்-அதெங்ஙனேயென்னில்; கீழ், * ஒன்றுந்தேவிலே - தாம்பண்ணின பகவத்பரத்வோபதேஸத்தைக்கேட்டு; ஸம்ஸார பரமபதவிபாக (ஊரம)மறும்படி நாடாகத்திருந்தின பாகவதஸம்ருத்தியைக்கண்டு ஹ்ருஷ்டராய், தாம் திருத்தத்திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மங்களாஸாஸநம் பண்ணியும், திருந்தகைக்கு யோக்யதையுடையாரையுபதேசித்துத்திருத்தியும், திருந்தாதாரையுபேக்ஷித்தும் செல்லுகிற * பொலிகபொலிக விலர்த்தத்தை—"பொலிகபொலிக" என்று தொடங்கி யருளிச்செய்கிறாரென்கை,

வ்யா.—(பொலிக பொலிகவென்று பூமகள்கோன்றொண்டர் மலிவுதனைக்கண்டுகந்து வாழ்த்தி) (க) "ஜயத்யதிபலோ ராமோ லக்ஷ்மணஶ்ச மஹாபல:| ராஜா ஜயதி ஸுக்ரீவோ ராகவேணாபிபாலித:-ஜயத்யதிபலோராமோ லக்ஷ்மணஶ்சமஹாபல:| ராஜாஜயதி ஸுக்ரீவோராகவேணாபிபாலித:" என்னும்படி, பூமகள்கோன் தொண்டர் மலிவுதனைக்கண்டுகந்து-பொலிகபொலிகவென்று வாழ்த்தி. பூமகள்கோன்தொண்டர் மலிவாவது-"கடல் வண்ணன் பூதங்கள்மண்மேல்மலியப்புகுந்து" என்றும், "மாதவன்பூதங்கள் மண்மேல் பண்டான் பாடிநின்றாடி" என்றும், "கடல்வண்ணன் பூதங்கள்மண் மேலிரியப்புகுந்து" என்றும், 'தடங்கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதங்களேயாய்" என்றும், "இவ்வுலகத்து வைகுந்தன் பூதங்களேயாய்" என்றும், "பகைபசிதீயனவெல்லாம் நின்றிவ்வுலகில் கடிவான் நேமிப்பிரான்றமர்போந்தார், ஞாலம்பரந்தார்" என்றும், "மேவித்தொழுமடியாரும் பகவரும் மிக்கதுலகே" என்றுமிப்படி - நித்யஸித்தர் ஶ்வேதத்வீபவாஸிகள் முதலான திருமாலடியாரெங்கும் திரண்டஸம்ருத்தி. நித்யஸித்தர்க்கும் ஶ்வேதத்வீபவாஸிகளுக்கும் ஸமாநராய்த் திருத்தத் திருந்தின ஶ்ரீவைஷ்ணவர்களென்றுமாம்.

(கண்டு)(உ)"தமர்கள்கூட்டம்-நாளும் வாய்க்கநங்கட்கு" என்னும்படியான தம்கண்களாலே கண்டு. (உகந்து) "கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம்" என்று ஹ்ருஷ்டராய். (வாழ்த்தி) அந்தஸம்ருத்திக்கு 'பொலிகபொலிக" என்று மங்களாஶாஸனம்பண்ணி. (உலகில் திருந்தாதார் தம்மைத்திருத்தியமாறன்சொல் மருந்தாகப்போகும் மனமாசு) * ஒன்றுந்தேவிலுபதேஶத்திலுந்திருந்ாதே யொதுங்கியிருந்தவர்களைக்குறித்து, "கண்ணனல்லால் தெய்வமில்லை" என்றும், "எவ்வுலகுக்குந்தன்மூர்த்திநிறுத்தினான்தெய்வங்களாகவத்தெய்வநாயகன்றானே" என்றும், 'ஒக்கத்தொழகிற்றிராகில் கலியுகமொன்று மில்லையே" என்றுமிப்படி—பரத்வோபதேஶம்பண்ணித் திருத்தியும், அதிலும் திருந்ாதவர்களைக்குறித்து. " அரக்கரசுரர்பிறந்திருள்ளிரேலும்யும் வகை

(க) ரா-ஸு.௪௨-௩௩. (உ) தி-வாய்-௮-௧௦-௮,

மூ.—மாசறுசோதிகண்ணன் வந்துகலவாமையால்
ஆசைமிகுந்து பழிக்கஞ்சாம—லேசறவே
மண்ணில் மடலூறமாற்னெருமித்தான்
உண்ணடிங்கத்தான்பிறந்தவூர். (சஉ)

யில்லை தொண்டீருழிபேர்த்திடுங்கொன்றே'' என்று-தேடித்தடவிப் பிடித்து ப்ரத்யவாயபுரஸ்ஸரமாகத் திருத்தியும் சொல்லுகிற ஆழ்வார் ஸ்ரீஸூக்த்யௌஷதமடியாக மநோமாலின்யம் நிவ்ருத்தமாம். ஸ்ரீவைஷ்ணவ ஸாஜாத்யபுத்தியும், தேவதாந்தரங்களிடத்தில் பாத்வபுத்தியுமிறே - மநோமாலிந்யமாவது; (க) "மனனகமலறக் கழுவி'' என்றிறே யருளிச்செய்தது.

(உ) "விஷவ்ருக்ஷபலங்கள் கைக்கூடினவர் அடிமை புக்காரை யுமாட்செய்வாரையுங்காண, லோகத்விபாந்தரங் களினின்றும் போந்ததேவர்குழாங்களைக்கண்டு காப்பிட்டு ப்ரஹ்லாதவிபீஷணர் சொற்கேளாதவரக்கரசுரர் போல்வாரைத் தடவிப்பிடித்து, தேச காலதோஷம்போக எங்குமிடங்கொண்டவர்களை மேவித்தொழுது உஜ்ஜீவியுங்கோள். நீங்கள் நிறுத்துகிறவர்களை தேவதைகளாக நிறுத்ினவனைமேவிப்பரவு மவரோடொக்கத்தொழில் யுகதோஷ மில்லையாமென்று விஷ்ணுபக்திபராக்கி'' என்றிறே யருளிச் செய்தது. (சஉ)

பதவுரை.

| | |
|---|---|
| மாசு அறு சோதி | களங்கமற்றஜ்யோதிஸ்ஸையுடையனை |
| கண்ணன் | எம்பெருமான் |
| வந்து கலவாமையால் | வந்து கூடாமையாலே |
| ஆசை மிகுந்து | ஆசை அதிகரித்து |
| பழிக்கு அஞ்சாமல் | (நாட்டாருடைய) பழிப்புக்குபயப்படாமல் |
| ஏசு அற | ஏசும்படியான எல்லையை மீறி |

(க) தி-வாய்-௪-௩-அ (உ) ஆசார்யஹ்ரு-௨.

| | |
|---|---|
| தான்பிறந்த ஊர் | தான் அவதரித்த வூரிலுள்ளோர் |
| உள்நடுங்க | மனம்நடுங்கும்படி |
| மண்ணில் மடல்ஊர | பூமியில் மடலூர்வதற்காக |
| மாறன் ஒருமித்தான் | ஆழ்வார் யத்நித்தார். (சுஉ) |

அவ;—நாற்பத்துமூன்றும்பாட்டு. (மாசறுசோதிகண்ணன்) இதில் - கீழ்ப்ரஸ்துதமான வடிவழகை யநுபவிக்கப்பெறாமல் மடலெடுக்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்.

அது எங்ஙனேயென்னில்; இப்படிப் பிறரைத்திருத்தி அவர்களுக்கு மங்களாஸாஸநம் பண்ணிக்கை யொழிந்த பின்பு, (க) "மணியும் சுடரொளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன்" என்று - அவன் ஸௌந்தர்யாதிகளை யநுஸந்தித்து, பழைய தம்மிழவுதலையெடுத்து, "வழியல்லாவழியிலே யிழிந்து இரண்டுதலையையுமழித்தாகிலும் அவனோடே கலக்கக்கடவோம்" என்றுப்ராப்யருசி பாரவஸ்யத்தாலே முன்னடிதோன்றாமல் கண்கலங்கிச் செல்லுகிற தம்தசாவிசேஷத்தை, அவனோடே கலந்து பிரிந்து ஆற்றாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு, நாடாகப்பழிசொல்லும்படி "அவனுக்கவய(ஶ)த்தை விளைத்து இரண்டு தலையையுமழிக்கக்கடவேன்" என் மடலூருகையிலே பொருப்பட்டுச் சொல்லுகிறாளொருபிராட்டி பேச்சாலே யருளிச்செய்கிற-*மாசறுசோதியிலர்த்தத்தை "மாசறுசோதிகண்ணன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா;-(மாசறுசோதிகண்ணன்வந்துகலவாமையாலாசைமிகுந்து "மணியுஞ்சுடரொளிமூர்த்தி-மாயப்பிரான் கண்ணன்" என்றும் "என்செய்வாய் - மாசறுசோதி - மணிக்குன்றம்" என்றும், "கண்ணன்" என்றும் சொல்லும்படி அத்யாகர்ஷகமான வடிவையுடைய க்ருஷ்ணன், தன் ஸ்வரூபத்துக்குச்சேரத் தானேமேல்விழுந்தவந்தநுபவிப்பியாமையாலே அபிநிவேஶமதிஶயித்து, அதாவது "பாசறவெய்தி" என்றும், "என்செய்யவாயும் கருங்கண்ணும் பயப்பூர்க்க" என்றும், "பேர்ந்தும்பெயர்ந்து மவனோடன்றிபோர் சொல்லிலேன்" என்றும், "காதல் கடல் புரையவிளைவித்த" என்றும், "கொடியவென்னெஞ்சமவனென்றே கிடக்கும்" என்றும், "மணிவண்ணன் வாசுதேவன் வலைபுள்-அகப்பட்டேன்" என்றும், "தலையில்வணங்கவுமாங்கொலோ"என்றும், "எந்நாள்கொலோயாமுறுகின்றது" என்று மருளிச்செய்தவை யென்கை.

---

(க) தி-வாய்-டு-உ-கக.

இப்படி ஆசையதிசயிக்கையாலே, (பழிக்கஞ்சாமல்) ஊரார், தாயார் தொடக்கமானார் இவள் மடலூரவொருப்படுகிற படியைக்கண்டு "இது குடிப்பழியாய்த்தலைக்கட்டும்" என்று நிஷேதிக்க, ஏவம் விதமான பழிக்குப்பணைக்கு மவளாகையாலே அஞ்சாதே, அப்பழிச் சொல்லேதா(யா)ரகமாக. அதாவது - (க) "ஸீதேதஸ்மாத் துஃகமதோவநம்" என்று வநத்தை நிஷேதிந்து அருளிச்செய்ய, (உ) "அக்ரதஸ்தே கமிஷ்யாமி" என்றும் (ங) "யா ந... ராஜமார்க்ககதா ஜநா:" என்றும் சொல்லுகிற படியே "ஊரவர்கவ்வை தோழியென்செய்யும்?" என்றும் "என்செய்யுமூரவர்கவ்வைதோழியினி நம்மை" என்றும், "தீர்ந்தவென்றோழி யென்செய்யுமூரவர்கவ்வையே" என்றும், "ஊரவர்கவ்வையெருவிட்டன்னை சொல்நீர் மடுத்து" என்றும், "அன்னையென்செய்யுமே" என்றும் "அன்னையென்செய்யிலென் ஊரென்சொல்லிலென் தோழிமீர்!" என்றும், அவர்கள்நிஷேதவசநங்களையொருசரக்கறச்சொன்னவையென்கை.

(பழிக்கஞ்சாமலேசறவே) அபவாதபி(ஸீ)தியின்றிக்கே யேசுமெல்லைகடந்து. அன்றிக்கே எல்லாரும் துஃகிக்கவென்றுமாம். அன்றிக்கே, "ஏசவே" என்று பாடமாய் - பழிசொல்லவுஞ்சொல்லி ஏசவென்றாகவுமாம். (மண்ணில் மடலூரமாறனொருமுத்தாளுள்நடுங்கத்தான் பிறந்தவூர்) அதாவது - "குதிரியாய் மடலூர்துமே" "நாடுமிரைக்கவே-யாமடலூர்ந்தும்' என்றும்-ஜகத்க்ஷோப(ஹ)ம் பிறக்கும்படி இஜ்ஜகத்திலே மடலூர ஆழ்வாரொருப்பட்டார்; தாமவதரித்தவூரிலுள்ளார் இஸ்ஸாஹஸ ப்ரவ்ருத்தியைக் கண்டுஹ்ருதயம் கம்பிக்கும்படியாக, "இப்படிஉத்யோகித்த விது ஏதாய்விளைகிறதோ" என்று தாமும் அவ்வூரிலவதரித்தவராகையாலே இவரும் தளும்புகிறார். (சுஉ)

(க) ரா-அ-உஅ அ. (உ) ரா-அ-உஎ-சுO. (ங) ரா-அ-ஙங-அ.

மூ.—ஊரநினைந்தமடலூரவு மொண்ணுதபடி
கூரிருள் சேர்கங்குலுடன் கூடிநின்று—பேராமல்
தீதுசெய்ய மாறன்றிருவுள்ளத்துச் சென்றதுயர்
ஓதுவதிங் கெங்ஙனேயோ. (சச)

பதவுரை.

| | |
|---|---|
| ஊரநினைந்த | தாம் ஊர்வதாக நினைத்துத் தொடங்கின |
| மடல் | மடலை |
| ஊரவும் ஒண்ணுதபடி | ஊரவுங்கூடாதபடியாக, |
| கூர் இருள்சேர்கங்குல் | மிகுந்த இருள்செறிந்த இரவானது |
| உடன்கூடிநின்று | தன் பரிவாரத்தோடே சேர்ந்து நின்று |
| பேராமல் | இட்ட அடிபெயராமல் |
| தீதுசெய்ய | உபத்ரவிக்க, |
| மாறன் | ஆழ்வாருடைய |
| திருவுள்ளத்துச் சென்றதுயர் | திருவுள்ளத்தில் நேர்ந்த வ்யஸநத்தை |
| இங்கு ஓதுவது | இங்கெடுத்துச் சொல்வது |
| எங்ஙனே | எப்படி முடியும்; |
| ஓ | அந்தோ!; (சச) |

அவ.—நாற்பத்துநாலாம்பாட்டு. (ஊரநினைந்தமடலித்யாதி) இதில் - இரவுநெடுமையாலே நோவுபடுகிற நாயகி பாசுரத்தாலே பேசுகிறபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இப்படி "ஸ்வபர ஸ்வரூபங்களை அந்யதாகரித்து வழியல்லாவழியிலே யிழிந்தும் அவனைப்பெறவேணும்" என்னும்படிமுடுகவடியிடுகிற ப்ராப்யத்வரையும் கலங்கி, ஸ்வயத்நரூபமான உபாயாந்தரங்களிலே மூளுகைக்குறுப்பான தெளிவையழுக்கிக் கிளருகிறவஜ்ஞாநமாகிற வல்லிருளாலேபோக்கிட மற்றுத்தெகுடாடுகிற தம்தசையை, பிரிவாற்றுளாய் மடலெடுக்கையிலே யுத்யோகித்தவளவிலே தைவயோகத்தாலே ஸூர்யனஸ்தமித்து மத்யராத்ரமாய்ப் காதிகளில் நெஞ்சுபாவிபாயாமையாலே விஶ்லேஷவ்யஸநமொரு

மடைசெய்ய, காலமும் விடியாதொழிய, மடலெடுக்கைபோய்முடி கைகேட்டமான வளவில், அதுவுங்கிடையாமல், இப்படியிரவுநெடுமையாலே ஈடுபட்டுப்பேசுகிற பிராட்டி பாசுரத்தாலே யருளிச்செய்கிற - * ஊரெல்லாந்துஞ்சியிலர்த்தத்தை, "ஊரநினைந்தமடல்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(ஊர்நினைந்தமடல்) (க) "குதிரியாய்மடலூர்தும்" என்று - ஊரநினைந்தமடல். (ஊரவுமொண்ணாதபடி). ஆதித்யனுமஸ்தமித்து, ப்ரியஞ்சொல்லுவார் ஹிதம் சொல்லுவார் பழிசொல்லுவாரெல்லாரு முறங்குகையாலும், இருள்வந்து மூடுகையாலும் மடலூரவுங்கூடாதபடியாக. (கூரிருள்சேர்கங்குலுடன் கூடிநின்று பேராமல் தீதுசெய்ய) அதுக்குமேலே, அத்யந்தாந்த(ஸ)காரத்தோடே ராத்ரியானது கூட்டுப்படையோடேகூடி நின்று இட்டவடி பேராமல், தீதுசெய்ய - பொல்லாங்கையுண்டாக்க.

அதாவது-ராவணமாயைக்கஞ்சி (உ) "ஸீதாயஶ்வெண்யுத்க்ரதநம் க்ருஹீத்வா-ஸீதாதவேண்யுத்க்ரதநம் க்ருஹீத்வா" என்றும், (ங) "விஷஸ்யதாதா நஹிமேஸ்திகஶ்சித் ஶஸ்த்ரஸ்ய வா வேஶ்மநி ராக்ஷஸஸ்ய - விஷஸ்யதாதா நஹிமேஸ்திகஶ்சிச் சஸ்த்ரஸ்ய வாவேஶ்மநி ராக்ஷஸஸ்ய" என்றும் சொல்லுகிறபடியே, "ஊரெல்லாந்துஞ்சி யுலகெல்லாம் நள்ளிருளாய் நீரெல்லாந்தேறியோர் நீளிரவாய் நீண்டதால்" என்றும், "மாவிகாரமாயோர் வல்லிரவாய் நீண்டதால்" என்றும், "ஓயும் பொழுதின்றி யூழியாய்நீண்டதால்" என்றும், "ஒண்சுடரோன் வாராதொளித்தான்" என்றும், "முன்னின்றிராவூழிகண்புதைய மூடிற்றால்" என்றும் "கங்கிருளின் நுண்துளியாய்ச் சேட்பாலதூழியாய்ச் செல்கின்ற கங்குல்வாய்" என்றும், "ஓரிரவேழூழியாய்" என்றும் "கங்கிருளினுண்டுளியாய்" என்றும், "செல்கின்றகங்குல்வாய்," என்று மிப்படி தமஸ்ஸோடேகூடின ராத்ரிபேராமல்நின்று துக்கத்தை யுண்டாக்குமென்றபடி.

இப்படியாகையாலே (மாறன்றிருவுள்ளத்துச்சென்ற துயரோது வதிங் கென்கொலோ) என்கிறார். மாறன் திருவுள்ளத்துச் சென்றதுயராவது - "பாரெல்லா முண்டநம் பாம்பணையான்

(க) தி-வாய்-இ-ஙு-ரு. (உ) ரா-ஸு-உஅ கஅ. (ங) ரா-ஸு-உஅ-கக.

மூ.—எங்ஙனேநீர் முனிவதென்னை யினிநம்பியழகு
இங்ஙனேதோன்றுகின்றதென் முன்னே—அங்ங
னுருவெளிப்பாடாவுரைத்த தமிழ்மாறன்
கருதுமவர்க்கின்பக்கடல். (சரு)

வாரானால் ஆரெல்லே வல்வினையே னாவிகாப்பாரினியே" என்றும், "ஆவிகாப்பாரினியார்" என்றும், "நீயும்பாங்கல்லை காண் நெஞ்சமே - மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண் பிறந்தே' என்றும், "எண்பெரிய சிந்தைநோய் தீர்ப்பாராரென்னையே" என்றும், "பேரென்னைமாயாதால் வல்வினையேன் பின்னின்றே" என்றும், "இங்கின்ற நீளாவிகாப்பாரார்இவ்விடத்தே" என்றும், "தீப்பாலவல்வினையேன் தெய்வங்காளென் செய்கேனோ" என்றும், "எனதாவி மெலிவிக்கும்" என்றும், "நெஞ்சிடர் தீர்ப்பாரினியார் நின்றுருகுகின்றேனே" என்று மருளிச்செய்தவை யாயிற்று, ஆழ்வார் திருவுள்ளத்திலே யநுவர்த்தித்த துக்கம். அது தான் அவரே பேசிலல்லது அந்யர்க்குப்பேசிமுடியாதிறே. அதுதான் வாசாமகோசரமா யாயிற்றிருப்பது ஆகையாலே பேசி முடியாதத்தை இங்கெங்ஙனேபேசுவதென் றீடுபடுகிறார். எங்ஙனேயோவென்று - வார்த்தைப்பாட்டதல். (சச)

பதவுரை.

| | |
|---|---|
| நீர் | (பந்துக்களே) நீங்கள் |
| இனி என்னை எங்ஙனே முனிவது | இனிமேல் என்னைக் கோபிக்கக்கூடுமோ? |
| நம்பி அழகு | திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகானது |
| என் முன்னே | என் கண்ணெதிரில் |
| இங்ஙனே தோன்றுகின்றது | இதோ ப்ரத்யக்ஷமாய்த் தோற்றுகின்றது; |
| அங்ஙன் | அவ்வாறாகிய |
| உருவெளிப்பாடா உரைத்த | உருவெளிப்பாடென்னுந்துறையாகச் சொன்ன |

தமிழ்மாறன் — தமிழ்வேதத்தைவெளியிட்டருளின ஆழ்வார்
கருதுமவர்க்கு — தம்மை த்யாநிப்பவர்களுக்கு
இன்பக்கடல் — ஆநந்த ஸாகரமாயிருப்பர்.

அவ--நாற்பத்தைந்தாம்பாட்டு(எங்ஙனே) இதில்-உருவெளிப்பாட்டாலேபேசுகிறபாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்;(க "உறங்குவான்போல்யோகுசெய்தபெருமான்" என்று ரக்ஷகனுடைய குணஜ்ஞாநத்தாலேமீளவும்தெளிவுகுடிபுகுந்து, (உ) "நம்பியைத்தென்குறுங்குடிநின்ற" என்றுமுன்பு அநுபூதமானநம்பியுடையவழகுநெஞ்சிலேஒருபடிப்பட ப்ரகாஶிக்கையாலும், யதாமநோரதம் அவ்வழகைக் கண்ணால்கண்டநுபவிக்கப்பெறாமையாலும் ப்ரீத்ய ப்ரீதிஸமமாய்ச் செல்லுகிறதம்தசையை, நாயகனோடேகலந்து பிரிந்து உருவெளிப்பாட்டாலே உருவநோவுபட்டுச்செல்லுகிற பிராட்டிபேச்சாலே யருளிச்செய்கிற - * எங்ஙனேயோவிலர்த்தத்தை "எங்ஙனேநீர் முனிவது" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-(எங்ஙனே நீர்முனிவதென்னை) இவ்வாற்றாமைக்குஊற்றுவாயான நீங்கள்இவ்வபிநிவேசமுடையவென்னைப் பொடிவதெங்ஙனே."எங்ஙனேயோவன்னைமீர்காளென்னைமுனிவதுநீர்" என்றத்தைப்பின் சென்றபடி. (இனி-எங்ஙனேநீர்முனிவது) திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் - இனிமுனியக்கூடுமோ? அதுக்குமுன்னேயன்றோ முனியவேண்டுவது; அதுக்குமேலே (ஙு) "சந்த்ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியதர்ஶநம்" என்னும்படி ருசிஜநகலாவண்ய விபவமானது(ச)"ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" - அஸௌ புருஷர்ஷப:-ராம:" என்னும்படி உருவெளிப்பாடாய், (நம்பியழகிங்ஙனே தோன்றுகின்றதென்முன்னே)குணவிக்ரஹஸௌந்தர்யாதிகளால்பூர்ணரானநம்பியுடைய ஆயுதாபரணவயவ ஶோபைகளானது,அதுகண்டுஉகக்கிறவென்முன்னே ப்ரத்யக்ஷமாகத்தோன்றுகின்றது.

(க) தி-வாய்-ரு-ச-கக. (உ) தி-வாய்-க-க0-க. (ஙு) ரா-ஆ-ங-உஅ.
(ச) ரா-ஸு-உஅ-உ0.

மூ.—கடல்ஞாலத்தீசனை முன்காணமல் நொந்தே
உடனவனுகரிக்கலுற்று—திடமாக
வாய்ந்தவனாய்த்தான்பேசும் மாறனுரையதனை
ஆய்ந்துரைப்பாராட்செய்ய நோற்றார். (சகூ)

அதாவது-'சங்கினோடும் நேமியோடும் "மின்னுநூலுங்குண்டலமும்" "வென்றிவில்லுந்தண்டும்வாளும்" "பூந்தண்மாலைத் தண்டுழாயும் பொன்முடியும் வடிவும்" "தொக்கசோதித்தொண்டைவாயும்" "கோலநீள்கொடிமூக்கும்" "நிறைந்தசோதிவெள்ளஞ்சூழ்ந்த நீண்ட பொன்மேனியோடும்" "செய்ய தாமரைக்கண்ணும்" "சென்னிநீண்முடியாதியாயவுலப்பிலணிகலத்தன்" "எழுவதோருருவென்னெஞ்சுளெழும்" என்றும் இப்படியடிதொடங்கி முடியளவுமநுபவித்த ப்ரகாரத்தை.

(அங்ஙனுருவெளிப்பாடாவுரைத்த) அப்படியே "உருவெளிப்பாடு" என்கிறதுறையிலே வைத்தருளிச்செய்த. (தமிழ்மாறன்) (க) *த்ராவிடப்ரஹ்மதர்ஶியானவாழ்வார். நம்பிவிஷயமாக *எங்ஙனேயோவையருளிச்செய்த வாழ்வாரென்றபடி. (கருதுமவர்க்கின்பக்கடல்) அபிநிவேஶத்துடனநுபவிப்பார்க்கு ஆநந்தஸிந்துவாயிருப்பர். "சென்னிநீண்முடியாதியாய வுலப்பிலணிகலத்தன் கன்னல் பாலமுதாகிவந்தென்னெஞ்சங்கழியான்" என்று-ஆழ்வார் தமக்கு அவ்வாகாரம் இனிதாயிருக்குமாபோலே, அவர் ஸம்பந்திகளானவர்களுக்கும் ஆழ்வார் அப்படி யிருப்பரென்றபடி. (சரு)

பதவுரை.

| | |
|---|---|
| கடல் ஞாலத்து | கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் |
| ஈசனை | எம்பெருமானை |
| முன்காணமல் | கண்முன்னே காணப்பெறாமல் |
| நொந்து | க்லேஶப்பட்டு |
| உடன் அநுகரிக்கல் உற்று | அவனைத்தாம்அநுகரித்து த(ரி)ரிக்கப்பார்த்து |
| திடமாக வாய்ந்து | த்ருடாத்யவஸாயயுக்தராய், |
| அவனாய் தான் பேசும் | அவனாகவேதான் அநுகரித்துப் பேசுகிற |

| | |
|---|---|
| மாறன் | ஆழ்வாருடைய |
| உரையதனை | ஸ்ரீ ஸூக்திகளை |
| ஆய்ந்து உரைப்பார் | வைபவமறிந்து அநுஸந்திப்பவர்கள் |
| ஆட்செய்ய | அவ்வாழ்வார்க்கு அடிமைசெய்ய |
| நோற்றார் | நோன்பு நோற்றவராவர்கள். (ச௬) |

அவ.—நாற்பத்தாறும்பாட்டு. இதில் - அநுகாரத்தாலே த(ய)ரிக்கப்பார்க்கிறபாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; (க) * எங்ஙனேயோவில் - ப்ரீத்ய ப்ரீதிஸமமாய்ச்சென்றவிடத்தில், ப்ரீத்யம்ஶம்தலையெடுத்து த(ய)ரிக்கைக்கு யோக்யதை யுண்டாயிருக்க, பாக்யஹாநியாலே அப்ரீத்யம்ஶமே தலையெடுத்து, பெற்றல்லது தரிக்கவொண்ணாதபடி ஆற்றாமை கரைபுரண்டு, கோபிமார் க்ருஷ்ணனை யநுகரித்து தரித்தாப்போலே இவரும்உபயவிபூதிநாதனையநுகரித்து த(ய)ரிக்கப்பார்க்கிறபடியைக்கண்டு கண்கலங்கின பரிவர்ஸந்நிஹிதர்க்குவிஷண்ணராய்ச்சொல்லிச்செல்லுகிறக்ரமத்தை; நாயகனைப்பிரிந்தாற்றாமையாலே தத்ப்ரகாரங்களை யநுகரித்து தரிக்கப்பார்க்கிற தலைவிநிலையை வினவவந்தவர்களுக்குத்திருத்தாயார் "ஸர்வேஶ்வரனாவிஷ்டனானே" என்று க்லேஶத்தாலே சொல்லிச்செல்லுகிற துறையிலே வைத்தருளிச்செய்கிற *கடல்ஞாலத்திலர்த்தத்தை "கடல் ஞாலத்தீசனை" என்று தொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா. — (கடல் ஞாலத்தீசனை) கடல்சூழ்ந்தபூமியிலுள்ளோர்க்கு நியந்தாவாய், அத்தாலே ஸர்வநிர்வாஹகனான ஸர்வேஶ்வரனை; (முன் காணாமல்நொந்தே) ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரம்பண்ணாமல் நொந்து. அதாவது (உ) "சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருருவென்னெஞ்சுளெழும்' என்றும், (ங) "அறிவரியபிரானை" என்று மருளிச்செய்த மாநஸ ஸாக்ஷாத்காரமாத்ரமொழிய, ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரமில்லை யென்றபடி. அத்தாலே அவஸந்நராய். (உடனவனுகரிக்கலுற்று) அநந்தரமாக கோபிமார் க்ருஷ்ணனை அநுகரித்து த(ய)ரித்தபடியை யாராய்ந்துதாமுமநுகரித்து தரிப்ப

(க) தி-வாய்-ரு-ரு. (உ) தி-வாய்-ரு-ரு-க௦. (ங) தி-வாய்-ரு-ரு-கக.

மூ.—நோற்றநோன்பாதியிலே னுன்றனைவிட்டாற்றகில்லேன்
பேற்றுக்குபாயமுன்றன் பேரருளே—சாற்றுகின்றேன்
இங்கென்னிலையென்னுமெழில் மாறன்சொல்வல்லார்
அங்கமரர்க்காராவமுது. (சஎ)

---

தாகத் திருவுள்ளத்திலேயுற்று. (திடமாகவாய்ந்து) த்ருடாத்யவஸாயயுக்தராய். "வாழ்ந்தவழுதிவளநாடன்" என்னும்படியா(ஸா)வ பந்தத்தோடேகிட்டி. (அவனாய்த்தான் பேசும்) அதாவது—"கடல்ஞாலம்" "கற்குங்கல்வி" "காண்கின்ற" "செய்கின்ற" "திறம்பாமல்" "இனவேய்" "உற்றார்கள்" "உறைக்கின்ற" "கொடியவினை" "கோலங்கொள்" "கூந்தல்" என்கிற விவையாதியாகப்பத்தும்பத்தாக-ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்கள், ஸகலவித்யாவேதநமும் வித்யாப்ரவர்த்தகத்வாதிகளும், காரணமான பூதபஞ்சகங்களும், காலத்ரயத்திலுண்டான க்ரியாஜாதங்களும், ஜகத்ரக்ஷணப்ரமுகமான சேஷ்டிதங்களும் கோவர்த்தநோத்தரணம்முதலான க்ருஷ்ணசேஷ்டிதங்களும், எம்பெருமான் ஆஶ்ரிதாநாஶ்ரித விஷயங்களிலிருக்கு மிருப்பையும், ஜகத்ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதி ப்ரகாரித்வமும், அகர்மவஶ்யத்வ ப்ரமுகயானவை, ஸ்வர்க்க ப்ரமுகமானவையாய், இப்படி உக்தங்களானவையெல்லாம் நானிட்டவழக்கென்று, (க) "யானேயென்னை வாய்ந்தேறப்பேசி" என்னும்படி அவனாகவநுகரித்த ப்ரகாரத்தையருளிச்செய்யும்.

(மாறனுரையதனை) ஆழ்வாரருளிச்செய்த திவ்யஸூக்தியானத்தை. (ஆய்ந்துரைப்பார்) "ஆய்ந்த தமிழ்மாலை யாயிரத்துளிவையு மொருபத்து" என்று இதின் வைபவத்தையாராய்ந்தநுஸந்திப்பார். (ஆட்செய்யநோற்றார்) "திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்கள்" என்னும்படி ஆழ்வார்க்கடிமைசெய்ய நோற்றாராவர் (உ) "வண்டமிழ் நூற்கநோற்றேனடியார்க்கின்பமாரியே" என்றிறே அவரிருப்பது. (ங) "ஸுஹ்ருஜ்ஜநாவணம் ஸஹோதரம் ஸஹஸோபவஷ்டு - அஹத்வா ராவணம் ஸங்க்யே ஸபுத்ரம் ஸஹபாந்தவம்" "கொடியர்னிலங்கை செற்றேனேயென்னும்" என்னக்கடவதிறே. (சஎ)

---

பதவுரை.

நோற்ற — மோக்ஷஸாதநமாக அநுஷ்டிக்கப்பட்ட

---

(க) ஆசார்யஹ்ரு. (உ) தி-வாய்-ச-ரு-கo. (ங) ரா-யு-௩௬-உக.

| | |
|---|---|
| நோன்புஆதி | கர்மாத்யுபாயங்களில் |
| இலேன் | அந்வயமில்லாதவனாயிராநின்றேன்; |
| உன்றனை விட்டு | உன்னைவிட்டு |
| ஆற்றகில்லேன் | தரிக்கமாட்டுகிறிலேன்; |
| பேற்றுக்கு | புருஷார்த்தத்திற்கு |
| உபாயம் | உபாயமாக |
| உன்றன் | உன்னுடைய |
| பேர் அருளே | மஹாக்ருபையையே |
| சாற்றுகின்றேன் | ப்ரசுரப்படுத்தா நின்றேன்; |
| இங்கு | இவ்வர்த்த விஷயத்தில் |
| என்நிலை | என்னுடைய நிஷ்டை (இதுவாயிருந்தது) |
| என்னும் | என்றருளிச்செய்த |
| எழில்மாறன் | (சேஷத்வகாஷ்டையாலே) அழகு பெற்ற ஆழ்வாருடைய |
| சொல் | அருளிச்செயலை |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| அங்கு | ஸ்ரீவைகுண்டத்தில் |
| அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| ஆரா அமுது | நித்யாபூர்வமான அம்ருதமாகப்பெறுவர். (சஎ) |

அவ.—நாற்பத்தேழாம்பாட்டு. (நோற்றநோன்பாதி) இதில்-வானமாமலை திருவடிகளிலேவணங்கி ப்ரவணராய்ஶரணம்புக்கபடியைப்பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; அப்ரீதியாலே யநுகரித்து தரிக்கவேண்டும்படி அபிநிவேஶமதிஶயித்துச் செல்லாநிற்கச்செய்தேயும் ஸ்வாமிமதம்பெறுமையாலே அவஸந்நராய்; இப்படி யநுபவருசி ரூபமான தம்மபிநிவேஶத்தை ஸாதநமாகக்கருதி, "அது முற்றினவாறே கார்யம் செய்கிறோம்" என்றீஶ்வரன் நினைத்திருந்தானாகக்கொண்டு, பேற்றுக்குறுப்பாக ஶாஸ்த்ரஸித்தமான கர்மாத்யுபாயங்களில் தமக்கு மந்நாதும் அந்வயமில்லாமையைச் சொல்லிக்கொண்டு, "அவனடியிலேகாட்டின உபாயமொழிய வேறோருபாயமில்லை" என்று; ஸம

ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகப் பிராட்டியாரோடும் நித்ய பரிகரத்தோடுங்கூடச் சிரீவரமங்கையிலே வந்தெழுந்தருளி யிருக்கிறவானமாமலை திருவடிகளிலே, வேரற்றமரம்போலே புகலற்றுவிழுந்து சரணம்புகுகிற * நோற்றநோன்பி லர்த்தத்தையருளிச்செய்கிறார் - "நோற்றநோன்பாதியிலேன்" என்று தொடங்கியென்கை.

வ்யா.—(நோற்றநோன்பாதியிலேன்) இத்தால் - மோக்ஷஸாதநமாக ஶாஸ்த்ரஸித்தமான கர்மாத்யுபாயங்களில் எனக்கந்வயமில்லை. (க)"ராவணோ நாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர:। தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதி ஶ்ருத:-ராவணோநாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர: । தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதிஶ்ருத:" இத்யாதிகளை முன்னிட்டுச் சரணமடைந்தாப்போலே, "நோற்றநோன்பிலேன்" என்கிறபாட்டைக்கடாக்ஷித் தருளிச்செய்தபடி. (உன்றன்னைவிட்டாற்றகில்லேன்) தா(ர)கனுமாய் போக்யனுமாயிருக்கிற வுன்னைவிட்டு தரிக்கமாட்டுகிறிலேன். இவ்வாற்றாமையெனக்கு ஸ்வரூபஸித்தம்.

ஆனால்பேற்றுக்கு ஸாதநமென்னென்னில் (பேற்றுக்குபாயமுன்றன் பேருளே) மோக்ஷோபாயம் * அரவின்னணைமேல் வீற்றிருந்து * சிரீவரமங்கை வாணனாய் * கருளப்புட்கொடி சக்கரப்படைவானநாடனாய், இப்படி * அபர்வறு மமரர்களதிபதியாயிருக்கிற தேவர் அடியிலே யருளின நிர்ஹேதுகக்ருபையே. அதாவது - பொருளல்லாதவென்னைப் பொருளாக்கி "என்றும்" "தமியேனுக்கருளாய்" என்றும், "வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட" என்றும், "அருளாயுய்யுமாறெனக்கு" என்றும், "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்று மருளிச்செய்தவையென்கை. மற்றுமுண்டானபாட்டுக்கள்- அருளுகைக்கடியான வவன்படிகளையும் அதுக்குடலாகத் தம்படிகளையுமருளிச்செய்தவையாயிருக்கும்.

(பேற்றுக்குபாயமுன்றன் பேருளேசாற்றுகின்றேன்) "ஆகையாலேஅவன் நிர்ஹேதுகக்ருபையேஸாதநம்" என்னுமதுஎல்லாருமறியும்படி பறையறைந்து சாற்றுகின்றேனென்கிறார். (இங்கென்னிலையென்னும்) இவ்விடத்தில் - இவ்வர்த்தவிஷயத்தில், என்னுடைய நிஷ்டையிதுவென்னும், அத்தலையில் பூர்த்தியாலே இத்தலையிலா

(க) ரா-யு-கஎ-கo.

மூ.—ஆராவமுதாழ்வாராதரித்தபேறுகளைத்
தாராமையாலே தளர்ந்துமிகத்—தீராத
வாசையுடனாற்றாமை பேசியலமர்ந்தான்
மாசறுசீர் மாறனெம்மான். (சஅ)

கிஞ்சந்யத்தை முன்னிடுகையே பாதந்த்ரனான வாத்மாவுக்கு ஸ்வரூபமென்னும். (எழில்மாறன்) ஶேஷத்வ பாரதந்த்ர்யங்களாகிற ஆத்மபூஷணத்தாலே அபி(பி)ராமராயிருக்கிற வாழ்வாருடைய வுபாய நிஷ்கர்ஷகமான வித்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார். (ஆங்கமரர்க்காராவமுது) அவ்விடத்தில் * அளப்பரியவாரமுதை யநுபவிக்கிற நித்யஸூரிகளுக்கு நித்யாபூர்வமானவம்ருதமாகப்பெறுவர். “ சிரீவரமங்கைமேயபத்துடன் வைகல்பாடவல்லார் வானோர்க்காராவமுதே”என்றத்தையருளிச்செய்தபடி.(சஎ)

பதவுரை.

| | |
|---|---|
| † ஆராவமுதாழ்வார் | (திருக்குடந்தை) ஆராவமுதன் |
| ஆதரித்தபேறுகளை | (ஆழ்வார்) ஆசைப்பட்ட புருஷார்த்தங்களை |
| தாராமையாலே | தலைக்கட்டியருளாமையாலே |
| மிகதளர்ந்து | மிகவும் வருந்தி |
| தீராத ஆசையுடன் | பெற்றல்லது முடியாத அபிநிவேசத்தோடே |
| ஆற்றாமைபேசி | தம்முடைய க்லேசத்தைக்கூறி |
| அலமர்ந்தான் | நிலைதளும்பினார்; (அவர்யாரெனில்;) |
| மாசு அறு சீர் | குற்றமற்றகுணங்களையுடையவரும் |
| எம்மான் | நமக்கு ஸ்வாமியுமான |
| மாறன் | ஆழ்வார். (சஅ) |

அவ—நாற்பத்தெட்டாம்பாட்டு. (ஆராவமுதாழ்வார்) அகிஞ்சநராய் ஆர்த்தியோடே ப்ரபத்திபண்ணியிருக்கச்செய்தேயும் ஆரா

† ஆராவமுது - ஆராவமுதன், ஆழ்வார் ஆதரித்த - ஆழ்வார் விரும்பின, என்று பிரித்துப் பொருளுரைப்பதுமுண்டு.

வமுதாழ்வார் "இவர் நம்மாழ்வார்" என்றபிமாநித்து அபேக்ஷிதம் செய்யாமையாலே யலமர்ந்து ஆர்த்தராயருளிச்செய்த பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; சிரீவர மங்கை வாணன் திருவடிகளிலே சரணம்புக்கவிடத்திலும் அங்குத்தம்மபேக்ஷிதங்கிடையாமையாலே, "ஆஸ்ரிதரக்ஷண தீக்ஷிதனான ஸர்வேஶ்வரன் நங்கார்யம் செய்யாமையில்லை, எங்கேகார்யம் செய்யநினைத்திருக்கிறனென்று தெரியாது" என்று "திருக்குடந்தையிலே ஆராவமுதாழ்வார் திருவடிகளிலேசெல்லவே நம்மபிமதம் ஸித்திக்கும்" என்று மநோரதித்துச்சென்றவிடத்தில், அவரெழுந்திருத்தல் இருத்தல் உலாவியருளுதல் இன்சொல்லுச்சொல்லுதல் குளிரநோக்குதல் ஆரவணைத்தல் செய்தருளக்காணாமையாலே, பிராட்டியும் அவனுமான சேர்த்தியுமுண்டாய், நமக்கபேக்ஷையுமுண்டாயிருக்க, அபிமதம்பெறுதொழிவோமே?" என்று துடித்து "இவ்வளவிலும் திருவடிகளே யுபாயமென்னும் துணிவுகுலையாதொழியப் பெற்றோமிறே" என்று வருந்தி த(ய)ரித்தாராய்த் தலைக்கட்டுகிற * ஆராவமுதி லர்த்தத்தை யருளிச்செய்கிறார் "ஆராவமுதாழ்வார்" என்றுதொடங்கி யென்கை.

வ்யா.—(ஆராவமுதாழ்வார்) (க) "ஸஹபத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத் - ஸஹபத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" என்று கூட்டுத்தேடி யநுபவிக்கவேண்டும்படி நிரதிஶயபோக்யராய் (உ) "ஸ்ரீமாந் ஸுகஸுப்த:- ஶ்ரீமாந் ஸுகஸுப்த:" என்னும்படி * ஏரார் கோலந்திகழக்கிடந்த வாராவமுதாழ்வார். (ஆதரித்தபேறுகளை) இவரபேக்ஷித்த புருஷார்த்தங்களை. அதாவது - "கிடந்தாய் கண்டேன்" "அம்மாமலர்க் கண்வளர்கின்றானே" "காணவாராயே" என்கிறவிடங்களிலபேக்ஷிதமானத்தை. * (உ) "குடந்தையுட்கிடந்த வாறெழுந்திருந்து" என்கிறபடியே எழுந்திருக்கவேணும்; * குடந்தைத்திருமாலான தேவர் (ங) "தாமரைமங்கையும் நீயும்" என்னும்படி இருவருங்கூட விருந்தருளவேணும்; * தாமரைக்கண்களாலே நோக்கியருளவேணும்; (ச) * பவளம்போல் கனிவாய் சிவப்பநீகாணவாவேணு

(க) ரா-அ கூ-க. (உ) ரா-ஸு- (ங) தி-ச-௬க.
(ச) தி-வாய்-க உ-ங. (ரு) தி வாய் க-உ-ரு.

மூ.-மாநலத்தால் மாறன் திருவல்லவாழ்புகப்போய்த்
தானிளைத்து வீழ்ந்தவ்வூர் தன்னருகில்—மேனலங்கித்
துன்பமுற்றுச்சொன்ன சொலவுகற்பார் தங்களுக்குப்
பின்பிறக்கவேண்டாபிற. (சகூ)

---

மென்றுப்போலேசிலபரிமாற்றங்களை யபேக்ஷிக்க; அது அப்போதே பெறுமைபாலே.

(தளர்ந்துமிக) 'ஆகாசத்தைநோக்கி யழுவன்தொழுவன்', என்னும்படி அத்யவஸந்நராய். (தீராதவாசையுடன்) அபிநிவேசமபோவது அநுபவத்தாலே யாகையாலே, அநுபவம் பெறுமல்முடியாத வபிநிவேசத்தோடே, (ஆற்றாமை பேசியலமந்தான) அதாவது - "அடியேனுடலம் - நோயலைந்து கரைய வுருக்குகின்ற" என்றும் "என்னான்செய்கேன்" என்றும் "உன்னைக் காண்பான் நானலப்பாய்'" என்றும் 'தூராக்குழி தூர்த்தெனை நாளகன்றிருப்பன்" என்றும் "தரியேனினி" என்றும் "உனக்காட்பட்டு மடியேனின்னமுதல்வேனோ" என்றும் பேசினவையென்கை. இத்தசையிலும் "உனதாள்பிடித்தே செலக்காணே" என்றும் "களைகண்மற்றிலேன்" என்றும் இவர்க்கடியிலத்யவஸாய மிருக்கும்படி இதுவாயிற்று. (மாசறுசீர்மாறனெம்மான்) இவ்வளவான தசையிலும் உபாயாந்தரங்களில்கண்வைக்கையாகிற மாசின்றிக்கே யிருக்கிற அத்யவஸாயஜ்ஞாநாதிகுணங்களையுடையரான வாழ்வார் தம்மையடைந்த ப்ரபந்நஜநமான நமக்குஸ்வாமி. அன்றிக்கே, ஆற்றாமை பேசியலமர்ந்தாரென்று - க்ரியையாதல். (சஅ)

---

பதவுரை.

| | |
|---|---|
| மாறன் | ஆழ்வார் |
| மாநலத்தால் | பெரியப்ரேமத்தோடே |
| திருவல்லவாழ்புகப் போய் | திருவல்லவாழென்னும் திருப்பதியில் ப்ரவேசிக்க எழுந்தருளி (அநுபவிக்கப்பெறுமல்) |
| அவ்வூர்தன் அருகில் | அவ்வூர் புறச்சோலையிலே |
| தான்இளைத்து வீழ்ந்து | தாம் இளைத்து விழுந்து |
| மேல்நலங்கி | அதுக்குமேலே (தோழிமார்களுடையபிஷேதோக்திகளாலும்) கலங்கி |

| | |
|---|---|
| துன்பமுற்று | வருத்தமடைந்து |
| சொன்ன | அருளிச்செய்த |
| சொலவு | ஸ்ரீஸூக்திகளை |
| கற்பார்தங்களுக்கு | அப்யஸிக்கவல்லவர்களுக்கு |
| பின் | அப்யாஸத்திற்குப்பிறகு |
| பிற | திருவடிகளுக்கு அயலான ஜந்மத்தில் |
| பிறக்கவேண்டா | பிறவிநேரிடாது. (சகு) |

அவ; நாற்பத்தொன்பதாம்பாட்டு. (மாநலத்தால்) இதில்-திருவல்லவாழேறச்செல்ல, புறச்சோலையில் போக்யதையாலே நலிவுபட்டுப்பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனே யென்னில், பெரியவாற்றாமையோடே திருக்குடந்தையிலே புக்கவிடத்திலும்தம்மபேக்ஷிதங்கிடையாமையாலே அங்குநின்றும் புறப்பட்டு, "திருவடிகளேயுபாயம்' என்று துணிந்த துணிவுகைகொடுத்தநடத்தத்திருவல்லவாழேறப்போய், முட்டப்போக மாட்டாமல் தளர்ந்து ஊரில் புறச்சோலையிலே கிடந்து, அங்குண்டான வேதகோஷவைதிகக்ரியாகோலாஹலம் செவிப்பட, மதுமல்லிகை தொடக்கமான போக்யதையை யநுஸந்திக்கையாலும், உள்ளுப்புக்கநுபவிக்கப் பெறாமையாலும் தமக்குண்டான ஈடுபாட்டை, நாயகனிருப்பிடத்தே செல்லுவதாகப் புறப்பட்டுப்போய்க்கிட்டியநுபவிக்கப்பெறாமையாலே நடுவேகிடந்து நோவுபட்டு, "அங்கே புக்கு அவனைக்கண்டுஸ்தோத்ரம் பண்ணப்பெறுவதென்றோநாம்" என்றுதன் தளர்த்தியைப் பாங்கிமாருக்கு உரைக்கிறநாயகிபாசுரத்தாலேயருளிச்செய்கிற - *மானேய் நோக்கிலர்த்தத்தை- "மாநலத்தால்" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.- (மாநலத்தால் மாறன்) பெரியப்ரேமத்தாலே ஆழ்வார், (திருவல்லவாழ்புகப்போய்)ப்ரேமப்ரேரிதராய்ப்ரவேசிக்கைக்காகப் போய். (தானிளைத்து வீழ்ந்தவ்வூர் தன்னருகில்) அவ்வூர் தன்னருகில் - தானிளைத்துவீழ்ந்து. உள்ளேபுக்கநுபவிக்கப்பெறாமல்ஊரின்புறச்சோலையிலே, ப(வ)லஹாநியாலும் அங்குத்தை போக்யதையாலும் நகரஸம்ப்ரமங்களாலும் கால்நடைதாராமல் தளர்ந்து வீழ்ந்து. (மேல்கலங்கி) அதுக்குமேலே தோழி

மார் நிஷேத வசநங்களாலும் கலங்கி. (துன்பமுற்று) பகவத்லாப த்தாலே மறுபாடுருவின து:க்கத்தையுடையராய், (சொன்னசொல வு) அருளிச்செய்த திவ்யஸூக்திகள்.

அதாவது (க) ‘பத்³மஸௌக³ந்தி⁴கவஹம் - பத்மஸௌகந்திக வஹம்’, (உ) “பத்³மகேஸரஸம்ஸ்ருஷ்ட: - பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:” இத்யாதிப்படியே “வைகலும் வினையேன்மெலியவாளுர் வண்கமுகும் மதுமல்லிகைகமழும் தேனூர்சோலைகள்சூழ்” என்றும், “பொன்றிகழ் புன்னைமகிழ் புதுமாதவிமீதணவித் தென்றல் மணங்கமழும்” என்றும், “பச்சிலைநீள்கமுகும் பலவும் தெங்கும் வாழைகளும்” என்றும், ‘பாண்குரல் வண்டினொடு பசுந்தென்றலுமாகி யெங்கும் சேண்சினையோங்குமரச் செழுங்கானல்” என்றும், “ஓதநெடுந்தடத்துளுயர் தாமரைசெங்கழுநீர்” என்றும், “மாடுறுபூந்தடம்” என்றும், ‘‘மழலைவரிவண்டுகளிசைபாடும்” என்றும் - விஶ்லேஷதசையில் அங்குத்தையில் பரிமளம் அஸஹ்யமாய்க்கால் கட்டுகிறபடியையும், மற்றுமுண்டான போக்யதைகளுமப்படி யானையையும்; ‘‘வினையேன்மெலியப்பாடுநல்வேத வொலிபரவைத்திரைபோல் முழங்க” என்றும், ‘‘மாடுயர்ந்தோமப்புகைகமழும்” என்றும், ‘‘நல்லவந்தணர் வேள்விப்புகை மைந்நலங்கொண்டுயர் விண்மறைக்கும்” என்றும் - வேதவைதிகக்ரியாகோலாஹலங்களும்; “தொல்லருள் மண்ணும் விண்ணும் தொழநின்றதிருநகரம்” என்றும் நகரஸம்ப்ரமங்களும்; நாயகன் வேதப்ரதிபாத்யனுகையாலும் வைதிக கர்மஸமாராத்யனுகையாலும் ஸ்மாரகத்வேந பாத(பாத)கமாயிற்று; நகரஸம்ப்ரமம், தானும் ஸம்ப்ரமத்துடனே புகப்பெறுமையாலே பாத(பாத)கமாயிற்று;

அதுக்குமேலே “என்றுகொல் தோழிமீர்காளெம்மைநீர் நலிந்தென் செய்தீரோ” என்றும், ‘‘இச்சலும் தோழிமீர்காளெம்மைநீர் நலிந்தென்செய்தீரோ” என்றும் - ப்ரியபரைகள் ஹிதபரைகளாய் நிஷேதிக்கையாலும், தனக்கோடுகிற த்வரையாலே அதுவும் ஸஹித்யஜநகமாயிற்று; “கோளுரையடியேனடிக்கூடுவதென்றுகொலோ” ‘‘இன்றபிரானடி நீறடியோங்கொண்டு சூடுவது -

---

(க) ரா-கி-க-௧0௪. (உ) ரா-கி-க-௭௧.

மூ.—பிறந்துலகங்காத்தளிக்கும் பேரருட்கண்ணாவுன்
சிறந்த குணத்தாலுருகுஞ்சீலத்—திறந்தவிர்ந்து
சேர்ந்தநுபவிக்கு நிலைசெய்யென்றசீர்மாறன்
வாய்ந்தபதத்தே மனமேவைகு. (௯0)

---

என்றுகொல்'' "நீடுறைகின்றபிரான் கழல்காண்டுங்கொல் நிச்சலுமே" "நம்பிரானதுநன்னலமே" "என்னலங்கொள் சுடரையென்றுகொல் கண்கள் காண்பதுவே' "மாண்குறட்கோலப்பிரான் மலர்த்தாமரைபாதங்கள் - காண்பதெஞ்ஞான்றுகொலோ'' "நிலந்தாவிய நீள் கழலை - நாடொறும் வீடின்றியே தொழக்கூடுங்கொல்" "யாங்கண்டுகைதொழக்கூடுங்கொலோ'' "நல்லருள்நம்பெருமான் நாராயணன் நாமங்கள் -தொல்லருள் நல்வினையால் சொலக்கூடுங்கொல்'' என்று இப்படித்திருவடிகளைத் தொழுகையும்திருநாமத்தாலே ஸ்துதிக்கையும் ப்ரார்த்யமாகையாலும் சைதில்யம் மிக்கிருக்குமிறே; இப்படியாகையால் மேல்நலங்கித் துன்பமுற்றுச்சொன்ன சொலவிலையாயிற்று. இத்தசையிலும், 'அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்'' என்றிறே இவரத்யவஸாயம் குலையாமலிருக்கும்படி.

(துன்பமுற்றுச்சொன்ன சொலவுகற்பார்தங்களுக்கு) இப்படி விஶ்லேஷவ்யஸந யுக்தராயருளிச்செய்த ஸூக்தியான இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார்க்கு. (பின்பிறக்கவேண்டா) இதின் அப்யாஸாநந்தரம் ஜந்மபரிக்ரஹம்பண்ணவேண்டா. ஜந்மத்தைமுடித்தேவிடும். பிற என்று - அவ்யயம்; அன்றியே திருவடிகளுக்கசலான ஜந்மமெடுக்கவேண்டாவென்றாகவுமாம். "பின் புகற்க்கவேண்டாபிற'' என்றபோது - இத்தையொழியவேறொன்றை யப்யஸிக்கவேண்டாவென்றபடி. (௪௬)

---

பதவுரை.

| | |
|---|---|
| பிறந்து | (பலயோநிகளில்) அவதரித்து |
| உலகம் | லோகங்களை |
| காத்தளிக்கும் | ரக்ஷித்தருளுகின்ற |
| பேர் அருள் | மஹத்தான க்ருபையையுடைய |
| கண்ணா | கண்ணபிரானே ! |

| | |
|---|---|
| உன் | "உன்னுடைய |
| சிறந்தகுணத்தால் | கல்யாணகுணாநுஸந்தாநத்தினால் |
| உருகும் நிலத்திறம் தவிர்ந்து– | மனமுருகும் இயல்வைவிட்டு |
| சேர்ந்து அநுபவிக்கும் நிலை | உன்னைக்கிட்டி யநுபவிக்கும் நிலைமையை |
| செய்என்ற | அருள்" என்று வேண்டின |
| சீர்மாறன் | ஸ்ரீ சடகோபருடைய |
| வாய்ந்தபதத்தே | ஒன்றுக்கொன்று ஒத்திராநின்ற திருவடிகளில் |
| மனமே | நெஞ்சே! |
| வைகு | நீ தங்கியிரு. (௫௦) |

அவ.—ஐம்பதாம்பாட்டு. (பிறந்துலகம்) இதில் - "அவதார சேஷ்டிதங்களை தரித்துநின்றநுபவிக்கும்படி பண்ணவேணும்" என்று பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில் ; கீழ் - ஸ்தாநத்ரயத்திலும் தம்மபேக்ஷிதங் கிடையாமையாலே, "அர்ச்சாஸ்தலங்களில் ஆஶ்ரிதர் நினைவுக்கேடாக ஆலோகாலாபாலிங்கநாதிகளான வநுபவவிஶேஷங்களை யுபகரித்தருளக்கடவோமல்லோம்" என்று அவன் ஸங்கல்பித்தருளுகையாலே யாயிருக்கும் நம்மபிமதம் ஸித்தியாதொழிந்தது; அவன் ஸங்கல்பம் குலையும்படி அங்கு நிர்ப்பந்திக்கக்கடவோமல்லோம், ஆஶ்ரிதர் நினைவறிந்து முகங்கொடுத்தநுபவிப்பித்தவவதாரத்திலே செல்லுவோம்" என்று க்ருஷ்ணாவதாரத்திலே யநுபவிப்பதாகச் செல்ல, அதுவும் கைகழிந்து தாம் பிற்பாடராய் அத்தாலேநொந்து, "அவ்வவதார குணசேஷ்டிதங்களையாகிலும் அநுஸந்தித்து தரிப்போம்" என்று பார்த்தவிடத்தில், அவையும் விஶ்லேஷதஶையிலே யநுஸந்திக்கையாலே ஶைதில்யத்தைவிளைக்க, நான் தரித்துநின்று உன்குணசேஷ்டிதங்களை யநுஸந்திக்கவல்லேனாம்படிபண்ணியருளவேணுமென்று ஶரணம்புகுகிற *பிறந்தவாற்றிலர்த்தத்தை "பிறந்துலகங்காத்தளிக்கும்" என்றருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(பிறந்துலகங்காத்தளிக்கும் 'பேரருட்கண்ணு) (க) "மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தபிறவியை "பிறந்தவாறும்" என்றிடும்படி யவதரித்தும், "மற்றும் * கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும்,(உ) * சீராற்பிறந்து சிறப்பால்வளராதே அன்றே பிறந்துஅன்றே வளர்ந்து * அடியை மூன்றையிரந்தவாறும், அம்ருதமதநார்த்தமாக வாவிர்ப்பவித்து * கூடிநீரைக்கடைந்தவாறும்" என்றிப்படி பூபாரநிர்ஹரணார்த்தமாகவும் த்ரிபுரதஹநார்த்தமாகவும் த்ரைலோக்யாஹரணார்த்தமாகவும்அம்ருதமதநார்த்தமாகவு மவதரித்து ஜகத்தைரக்ஷித்து நோக்கிப்போரும் நிரவதிகக்ரு(ஷ)ணவானனக்ருஷ்ணனே !. கீழே "நல்லருள்நம்பெருமான்" என்றாரிறே, அப்படி நிரவதிகத(ய)யாவானென.

(உன் சிறந்தகுணத்தாலுருகும் சீலத்திறந்தவிர்ந்து)உனக்கநுரூபமான கல்யாணகுணாநுஸந்தாநத்தாலே த்ரவீபூதனும் ஸ்வபாவப்ரகாரம் விருத்தமாய்; (சேர்ந்தனுபவிக்கும் நிலைசெய்) உன்னைக் கிட்டி யனுபவிக்கும்படி-யாக ஸ்தை(ர்ய)ர்யத்தைச் செய்தருளவேணும். அதாவது - "பிறந்தவாறு" என்றுதொடங்கி "கிறந்தனூடுபுக்கென தாவியைநின்றுநின்றுருக்கியுண்கின்ற,"·"என்னையுன் செய்கைநைவிக்கும்" "பையவேநிலையும் வந்தென்னெஞ்சையுருக்குங்களே" "வெள்ளநீர்ச்சடையானும்"என்றுதொடங்கி,"என்னுயிரை யுருக்கியுண்ணுமே" "உண்ணவானவர்கோனுக்கு" என்றுதொடங்கி, "என்னெஞ்செரிவாய் மெழுகொக்குநின்றே"(௩) "திஷ்ஞழ - திஷ்டந்தம்" (௪) "ஆஸ நழ- ஆஸீநம்" (௫) "வ்யதிஸிமெஹ) - ப்ரதிஸிஸ்யே" என்னும்படி, "நின்றவாறும்" இத்யாதி - "நின்று நின்று நினைகின்றேனுன்னை யெங்ஙனம் நினைகிற்பன்," "ஒண்சுடரோடு" என்றுதொடங்கி, "எண்கொள் சிந்தையுள்நைக்கின்றேன்," "திருவுருவுகிடந்தவாறும்" என்றுதொடங்கி,"என்னெஞ்சமின்றுநெக்கருவிசோருங்கண்ணீர்." "அடியை மூன்றையிரந்தவாறும்" என்றுதொடங்கி, "என்னெஞ்சம் நின்றனக்கே கரைந்துகும்"

(க) தி-வாய்-கூ-க-௫௦. (உ) பெ-திருவ-௧௧. (௩) ரா-கி-௧௩-௨௫.
(௪) ரா-அ-௧௩ ௨௫. (௫) ரா-யு-௧௧-க.

—வைகல் திருவண்வண்டூர்வைகுமிராமனுக்கென்
செய்கைதனைப்புள்ளினங்காள்செப்புமெனக்—கைகழிந்த
காதலுடன் தூதுவிடுங்காரிமாறன்கழலே
மேதினியீர் நீர்வணங்குமின். (ருச)

"கூடி நீரைக்கடைந்தவாறும்" என்றுதொடங்கி, "ஊடுபுக்கெனதாவியை யுருக்கியுண்டிடுகின்ற"என்றும் சொல்லப்படுகிறவை நிவ்ருத்தமாய்; "உன்னையென்றுகொல்சேர்வதுவே," "உன்னையென்று தலைப்பெய்வனே" "பாவியேற்கொன்றுநன்குரையாய்" "என்செய்கேனடியேனே" "கொடிய வல்வினையேனுன்னையென்று கொல் கூடுவதே," "நின்றன்னைநாடும் வண்ணம் சொல்லாய் நச்சுநாகணையானே" என்று தரித்துநின்று உன்னை யநுபவிக்கப்பெறுவேனென்றவையென்கை.

(சேர்ந்தனுபவிக்கும் நிலைசெய்யென்ந சீர்மாறன்) "நாகணைமிசைநம்பிரான் சரணேசரண்நமக்கு" என்று-தாம் தரித்துநின்றநுபவிக்கும் ப்ரகாரம்பண்ணி யருளவேணுமென்று அர்த்தித்த, ஜ்ஞாநாதிகுணங்களையுடையரான வாழ்வாருடைய (வாய்ந்தபதத்தே) பரஸ்பர ஸத்ருமமாய்ப் பொருந்தியிருக்கிறதிருவடிகளிலே. (மனமேஎவகு) மநஸ்ஸேதங்கிப்போரு. அவர்க்கு * நாகணைமிசைநம்பிரான் சரணேசரணானாப்போலே, உனக்கும் ஆழ்வார் திருவடிகளே ப்ராப்தமென்று சென்றங்கே தங்கிப்போரு. (ருரு)

பதவுரை.

| | |
|---|---|
| மேதினியீர் | இப்பூமியிலுள்ளவர்களே! |
| திருவண் வண்டூர் | "திருவண்வண்டூரில் |
| வைகல் | எப்பொழுதும் |
| வைகும் | எழுந்தருளியிருக்கிற |
| இராமனுக்கு | சக்ரவர்த்தித் திருமகனுக்கு |
| புள் இனங்காள் | பறவைக்கூட்டங்களே! |
| என்செய்கைதனை | என்னுடைய தசையை |
| செப்புமென் | அறிவியுங்கள்" என்று |
| கைகழிந்த காதலுடன் | மிகுந்த ஆசையோடே |
| தூதுவிடும் | (பறவைகளைத்) தூதுவிட்ட |

க்காரி மாறன் — ஆழ்வாருடைய
கழலே — திருவடிகளையே
நீர்வணங்குமின் — நீங்கள் வணங்குங்கள். (ருக)

அவ.—ஐம்பத்தோராம்பாட்டு. (வைகல்) இதில்-ஆற்றாமையாலே தூதுவிடுகிற ஆழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார் - அதெங்ஙனேயென்னில், அடிவிடாமல் * நோற்றநாலிலும் - அமோ(வ)கமாயிருக்கிற ஶரணவரணமாகிற ப்ரஹ்மாஸ்த்ர ப்ரயோகம்பண்ணியிருக்கச்செய்தேயும், அவன் ஜகத்ரக்ஷண ஹேதுவாகக்கார்யம்செய்யாதொழிய, அத்தாலே தம்மபேக்ஷிதங்கிடையாமல் மிகவும்தளர்ந்து, "ஆர்த்தரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவனாகையாலே, நம்மார்த்தியை யறிவிக்கவே தப்பாமல் நங்காரியம் செய்யும்; திருவண்வண்டூரிலைஶ்வர்யத்திலேகால்தாழ்ந்து நம்மை மறந்தானித்தனை" என்றநுஸந்தித்து, க(வ)டகரையிட்டு, (க) "நந்த்ஜெயழ் - நந்த்யஜேயம்" என்றதஶரதாத்மஜனுக்குத் தந்தசையை யறிவித்துச் செல்லுகிறபடியை, நாயகன் வருமளவும் கண்டாறியிருக்க மாட்டாமலாற்றாமையாலே நாயகனைக்குறித்துத் தூதுவிடுகிற நாயகிபாசுரத்தாலே யருளிச்செய்கிற * வைகல் பூங்கழிவாயிலர்த்தத்தை "வைகல் திருவண்வண்டூர்" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.--(வைகல் திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கு) "தேறுநீர்ப்பம்பைவடபாலைத் திருவண்வண்டூர், மாறில் போரரக்கன்மதிள் நீறெழச்செற்றுகந்தஏறுசேவகனார்" என்றதை நினைக்கிறது. இரண்டாம் தூதுக்குவிஷயம்விபவமிறே. (உ) "வ்யவஸாயஜ்ஞோ ரக்ஷணஸ்தைர்யம் பம்போத்தரதேஶஸ்தா" என்றாரிறே. திருவண்வண்டூரிலே பிறபட்டாரை ரக்ஷிக்கைக்குஸர்வகாலமும் நித்யவாஸம்பண்ணுகிற சக்ரவர்த்தித்திருமகனுக்கு ஜநககுலஸுந்தரி (ந) 'ஜீவந்தீ - ஜீவந்தீம்" என்று ஆள் விட்டதும் பம்பாபரிஸர பர்வதத்திலே வர்த்திக்கிறவரைக் குறித்தாயிற்று.

(என் செய்கைதனைப்புள்ளினங்காள் வைகல்செப்புமென) என் தலையைப் பக்ஷபாதமுடையவர்களே! தாழாமல்சொல்லுமென்ன; அதாவது - "குருகினங்காள் - வினையாட்டியேன் காதன்மையைக்

(க) ரா-யு-கஅ-ந. (உ) ஆசார்யஹ்ருந. (ந) ரா-ஸு-நக ௪0.

மூ.—மின்னிடையார் சேர்கண்ணன் மெத்தெனவந்தானென்று
தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்த்தான்றள்ளி-உன்னுடனே
கூடேனென்றூடுங்குருகையர்கோன்றாடொழவே
நாடோறும் நெஞ்சமே நல்கு. (ருஉ)

---

கைகள் கூப்பிச்சொல்லீர்" என்றும், "பாதம் கைதொழுதுபணி யீரடியேன் றிறமே" என்றும், "திறங்களாகியெங்கும் செய்களூடு ழல் புள்ளினங்காள் - அடியேனிடரை - இறங்கிநீர் தொழுதுபணி யீர்" என்றும், "மடவன்னங்காள்-உடலம்நைந்தொருத்தி யுருகு மென்றுணர்த்துமினே" என்றும், "உடன்மேயுமடவன்னங்காள் - அடியேனுக்கும் போற்றுமினே"என்றும்;"புன்னைமேலுறைபூங்குயி ல்காள்-மாற்றங்கொண்டருளியுரையீர் மையல்தீர்வதொருவண்ண மே" என்றும், "அடையாளந்திருந்தக்கண்டு - எனக்கொன்றுரை யொண்கிளியே" என்றும், "கருந்திண்மாமுகில்போல்திருமேனிய டிகளை - திருந்தக்கண்டெனக்கொன்றுரையாயொண் சிறுபூவாய்" என்றும், "அடிகள் கைதொழுதலர்மேலசையுமன்னங்காள்- கொடி யவல்வினையேன் றிறங்கூறுமின்வேறுகொண்டே" என்றுமிப்புடை களிலே அத்யார்த்தியை யவர்க்கு மறிவித்தவையென்கை.

(கைகழிந்தகாதலுடன் தூதுவிடும்)"என்னையுமுளளென்மின்களே" என்று- தாம்வந்துநோக்காவிடில் ஸத்தையில்லை; இப்போதுவந்து நோக்குகைக்கீடான ஸத்தாமாத்ரங்கிடக்கிறதென்னுங்கோளென் கையாலே கைகழிந்த காதலுடன் தூதுவிட்டபடியிதுவாயிற்று. (காதலுடன் தூதுவிடும்காரிமாறன்சழலே மேதினியீர் நீர்வணங்கு மின்) ஆற்றாமையோடே தம்பேற்றுக்கு க(வ)டகரையர்த்திக்கிற வாழ்வார் திருவடிகளை, உங்கள்பேற்றுக்கு, பூமியிலுண்டானவர்க ளே! நீங்கள் வணங்கிவழிபடுங்கோள். அவர் (க) "மாநிலத்தெ வ்வுயிர்க்கும்" என்னுமாபோலே, இவரும் இருந்ததே குடியாக உபதேசிக்கிறார். (ருக)

---

பதவுரை.

| | |
|---|---|
| மின் இடையார் | மின்னற்கொடிபோன்ற இடையை யுடைய மாதரை |

---

(க) தி-வாய் கூ ௩-எ.

| | |
|---|---|
| சேர் | சேர்ந்த |
| கண்ணன் | கண்ணபிரான் |
| மெத்தெனவந்தான் என்று | விளம்பித்து; வந்தானென்று |
| தன்னிலைபோய் | தம்முடைய ஆகாரம் குலைந்து |
| பெண்ணிலையாய் | கோபிமாருடைய ஆகாரத்தையுடையராய் |
| தான் தள்ளி | (தங்களுடைய ஸங்கேதஸ்தலத்திற்கு வந்த கண்ணனைப்) பிடித்துத் தள்ளி |
| உன்னுடனே கூடேன் என்று | உன்னோடுசேரமாட்டேனென்று |
| ஊடும் | (ப்ரணயரோஷத்தாலே) பிணங்கின |
| குருகையர்கோன் | ஆழ்வாருடைய |
| தாள்தொழ | திருவடிகளை வணங்குவதற்கு |
| நெஞ்சமே | மனமே! |
| நாள்தோறும் நல்கு | நித்யம் உபகரிக்கவேணும். (௫௨) |

அவ. —ஐம்பத்திரண்டாம்பாட்டு. (மின்னிடையார்) இதில்-ப்ரணயரோஷத்தாலே † யூடின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; தம்மாற்றாமையாலே * நோற்றநாலிலும் சரணம்புக்குத் தூதுவிட்டு,இத்தனையும் செய்தவிடத்தும் அவன் வரக்காணாமையாலே ப்ரணயரோஷம் தலையெடுத்து "அவன் வந்தாலும் இனி அவனோடுகலப்போமல்லோம்" என்று பரிஸரவர்த்திகளான ஸஹ்ருத்துக்களோடேதாம் துணிந்திருக்க, அவனும் "ஸ்ரீகஜேந்த்ராழ்வான்முதலானவாஸ்ரிதராபத்திலேமுற்பாடனாய்ச் சென்று ஆபத்தைப் போக்கி ரக்ஷித்தநாம் ஆழ்வாருக்குப் பிற்பாடரானோமே" என்றுபிற்பாட்டுக்குப்போரநொந்து, தம்முடனே கலப்பதாகப் பதறி நடந்துவந்து,வடிவழகாலும் சேஷ்டிதங்களாலும் ; தன் செல்லாமையாலும் தம்மூடலைத்தீர்த்துத் தம்முடனே கலந்தபடியை,க்ருஷ்ணன் வரவுதாழ்க்கையாலே அவனோடேயூடி, "இனிக்கூடோம்" என்றிருந்த இடைப்பெண்களை, ஸௌந்தர்யாதிகளாலும் தன் செல்லாமையாலு மூடலைத்தீர்த்து க்ருஷ்ணன் தன்னுடனே சேர்த்துக்கொண்ட வ்ருத்தாந்தத்தின்மேலே வைத்தருளிச்செய்கிற * மின்னிடை மடவாரிலர்த்தத்தை "மின்

† (பா) உண்டான.

ளிடையார் சேர்கண்ணன்" என்று தொடங்கி யருளிச்செய்கிறா
ரென்கை.

வ்யா.—(மின்னிடையார் சேர்கண்ணன் மெத்தனவந்தானென்று) மின்னிடைமடவாருடனே சேர்ந்த க்ருஷ்ணன் அங்குத்தையிலங்யபரதையாலே ஆற்றாமைக்குதவவாராமல் மந்தகதியாய் வந்தானென்று. அவன் தங்களிடத்திற்பண்ணும ப்ரிவேசத்தை அங்யதாசரித்துத்தங்களாற்றாமையாலே அவன் பதற்றத்தையுமஸத்கல்பமாக்குகிற. "மின்னிடைமடவார்கள் நின்னருள் சூடுவார்முன்புநானஞ்சுவன்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச் செய்தபடி. (தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்) அதாவது - "குருகூர்ச்சடகோபன்" என்கிற வாகாரங்குலைந்து கோபிமாருடைய வாகாரத்தை யுடையராய்.

(தான்தள்ளி) தாங்கள் கழகமிருக்கிற ஸங்கேத ஸ்தலத்திலே புகுருவதாக அவனருகேவர, "போகுநம்பி" "குழலூதுபோயிருந்தே," "போயிருந்துநின் புள்ளுவமறியாதவர்க்குரைநம்பி" "எம்மை நீகழறேலே" "எங்குழலு பூவையொடுங் கிளியோடுங் குழகேலே," "கழகமேறேல்நம்பி" "கன்மமன்றெங்கள் கையிற்பாவை பறிப்பது" "உனக்கேலும் பிழைபிழையே" என்று அவனுக்கவகாசமறும்படி. (க) "[illegible] - ப்ரணயாச்சாபிமாநாச்ச பரிசிக்ஷேபராகவம்" என்றாப்படியையும்;

அவனும், "உன்றாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய் முறுவலுமாகுலங்கள்செய்ய" என்றும், "நின்செய்யவாயிருங்கனியுங் கண்களும்விபரீதமிந்நாள்" என்றும், "வன்மமேசொல்லியெம்மைநீ விளையாடுதி" என்றும், "உகவையால் நெஞ்சமுள்ளுருகி யுன்றாமரைத் தடங்கண் விழிகளினகவலைப் படுப்பானழித்தாயுன்திருவடியால்" என்று மென்னும்படி ஸ்மிதவீக்ஷணங்களாலும் பாவகர்ப்ப (ஸாவஸஹ)மானவுக்திகளாலும்சேஷ்டிதங்களாலுமூடலைத்தீர்த்துச் சேரவிட்டு, "கூத்தவப்பன்றன்னைக் குருகூர்ச்சடகோபனேத்திய தமிழ்மாலை" என்னும்படி கூடினபடியையு மருளிச்செய்கையாலே. "உன்னுடனே கூடேனென்றார் திருக்குருகையர்கோன்" என்றருளிச் செய்தவிதிலே - கூடின [illegible] விவக்ஷிதம். மேலே (உ) "நல்லவலத்தால் நம்மைச்சேர்த்தோன்" என்றிறேயருளிச்செய்யப்

(க) ரா-அ-௩௦ உ. (உ) ௫௰.

மூ.-நல்லவலத்தால் நம்மைச்சேர்த்தோன் முன்னண்ணாரை
வெல்லும் விருத்தவிபூதியனென்று—எல்லையறத்
தானிருந்து வாழ்த்துந்தமிழ்மாறன் சொல்வல்லார்
வானவர்க்குவாய்த்தகுரவர். (ருடு)

புகுகிறது; அதுக்குச்சேர இங்கேகூட வேணுமிறே. (ஊடுங்குரு கையர்கோன்றாள்தொழவே நாடோறும் நெஞ்சமேநல்கு) அவனல்பம் தாழ்த்துக்கூடும்படியான ப்ரேமத்தையுடைய வாழ்வார் திருவடிகளை நித்யஸேவை பண்ணும்படி மநஸ்ஸே நீயும்நித்யமாகஸஹகாரியாயுபகரி. நல்குதல் - கொடுத்தல். (க) "நவ - மநஸ்வ" இறே. (ருச)

பதவுரை.

| | |
|---|---|
| முன் நண்ணாரை வெல்லும் நல்லவலத்தால் | பூர்வஶத்ருக்களை வெல்லுமவனாய் (வீலோபகாரணங்களைப் பறித்தல் முதலிய(நல்ல)† வன்மையாலே |
| நம்மைச்சேர்த்தோன் | நமதுஊடலைநீக்கிக்கூடவிட்டவனான க்ருஷ்ணன் |
| விருத்த விபூதியன்என்று | விருத்த(ஸ)விபூதிகத்வத்தையுடையவனென்றுபேசி |
| எல்லைஅற | முடிவில்லாமல் |
| தான்இருந்து வாழ்த்தும் | தானிருந்து ஸ்தோத்ரம் பண்ணுகிற |
| தமிழ்மாறன் | தமிழ்வேந்தராகிய வாழ்வாருடைய |
| சொல்வல்லார் | ஸ்ரீஸூக்திகளை ஓதவல்லவர் |
| வானவர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| வாய்த்தகுரவர் | பொருந்தினஆசார்யராவர்கள்(ருடு) |

அவ.—ஐம்பத்துமூன்றாம்பாட்டு. (நல்லவலத்தால்)-இதில் - விருத்த(ஸ)விபூதியுக்தனாயிருக்கிற படியைப்பேசின பாசுரத்தையநுபவித்தருளிச் செய்கிறார், எங்ஙனேயென்னில்;

கீழ் "அல்லோம்" என்றிருந்தநம்மை "ஆவோம்" என்னப் பண்ணினவவனுடையவக(வ)டித க(வ)டநாஸாமர்த்த்யத்தை யநுஸந்தித்து விஸ்மிதரானவிவர்க்கு, "இதொன்றுகண்டோ நீரிப்படி

(க) வி பு கூ எ உஅ, † உபாயத்தாலே

விஸ்மிதராகிறது, நாட்டில் தன்னில் தான் சேராதபதார்த்தங்க ளெல்லாவற்றையும் நம்முடனே சேர்த்துக்கொண்டு திருவிண்ணக ரிலே நிற்கிறபடிபாரீர்'' என்று அவன் தன் விருத்தவிபூதியோகத் தைக்காட்ட, அத்தையநுஸந்தித்து ஹ்ருஷ்டராய்ச்செல்லுகிற - * நல்குரவும் செல்விலர்த்தத்தை ''நல்லவலத்தால்'' இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

வ்யா;—(நல்லவலத்தால் நம்மைச்சேர்த்தோன்) அதாவது- லீலோபகரணங்களை யெடுத்தும் பறித்தும் கழகமேறியும் வழிமறி த்தும் சிற்றிலழித்தும் * முற்றத்தூடுபுகுந்துமுறுவல் செய்து வார்த்தை சொல்லியு மிப்படியாயிற்று இவருடலைத் தீர்த்துக் கூட விட்டது. இவர் ''இதோரக(வ)டித க(வ)டநாஸாமர்த்ய முக்தி யிருந்தபடியென்'' என்று பார்த்து ''முன்நண்ணுரை வெல்லும்'' என்று - அத்தைமூதலிக்கிறுர். அதாவது- * பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரியாய் * ஸாக்ஷாந்மந்மதமந்மதனை தன் ஸந்நிதி யிலே ''கிட்டோம்''என்றிருந்தநம்மை ஸ்த்ரீத்வாபி(ஹி)மாநத்தைக் குலைத்து ஊடுகையைத்தவிர்த்துக் கூடப்பண்ணினபடியென்கை. முன்நண்ணுராய்-கிட்டாதாராயிருக்கிற நம்மை- நல்லவலத்தால்- சேர்த்தோனென்றந்வயமாகவுமாம். அன்றிக்கே ''முன்நண்ணுர்'' என்று - பூர்வஶத்ருக்களாய், அவர்களை * நின்றிலங்குமுடியனு யித்யாதிப்படியே வென்றுப்போலே நம்மை நல்லவலத்தால்சேர்த்த தென்றுகவுமாம.

'' இப்படி சேராதத்தைச்சேர்ப்பதே!'' என்றிவரீடுபட, ''இதொன்று கண்டோ நீராஶ்சர்யப்படுகிறீர், லோகத்தில் பரஸ் பரவிருத்த(ஸ)ங்களாயிருக்கிறவிபூதியைச்சேர்த்துக்கொண்டு திரு விண்ணகரிலே நிற்கிறபடிபாரீர்'' என்று விருத்த(ஸ)விபூதியுக்தனு யிருக்கிறபடியைக்காட்ட (விருத்தவிபூதியனென்று) அதாவது-- ''நல்குரவும்செல்வும்,'' '' கண்டவின்பந்துன்பம் '' '' நகரமுநாடுக ளும்'' ''புண்ணியம்பாவம்'' ''கைதவம் செம்மை'' ''மூவுலகங்களு மாயல்லனுய் '' '' பரஞ்சுடருடம்பாயழுக்குப் பதித்தவுடம்பாய்'' ''வஞ்சரஞ்சுராக்காயசுரர்க்கு வெங்கூற்றமுமாய்'' '' நிழல்வெய் யல்''இத்யாதி பாட்டுக்களிலே-(க) ''ஸுகீ: கொவஃ ஹ்ஸாதிஷே

(க) ராயு கஉ0 உசு

மூ;—குரவைமுதலாங்கண்ணன் கோலச் செயல்கள்
இரவுபகலென்னுமலென்றும்—பரவுமனம்
பெற்றேனென்றே களித்துப்பேசும் பராங்குசன்றன்
சொற்றேனினெஞ்சே துவள். (ருச)

---

ஸொ௨ஃ-அக்கிஃ கோபஃ ப்ரஸாதஸ்தேஸோமஃ'' என்னும்படியான விருத்த(ஃ)விபூதிகத்வத்தைப்பரக்கப்பேசி.

(எல்லையறத்தானிருந்துவாழ்த்தும்) அதாவது - 'பல்வகையும் பரந்தபெருமானென்னையாள்வானே'' என்றும், "கண்டுகொள்வதற்கரிய பெருமானென்னை யாள்வான்'' என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் புகர்கொள்கீர்த்தியல்லாவில்லையாவர்க்கும் புண்ணியம்'' என்றும், 'கண்ணநின்னருளே கண்டுகொண்மின்கள்'' என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் வரன்கொள்பாதமல்லாவில்லை யாவர்க்கும் வன்சரண்'' என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரானென் சரணென்கண்ணனென்னையாளுடை யென்னப்பன்'' என்றும், "என்னப்பனெனக்காய்'' என்றுதொடங்கி, "திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன் தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தனதாள் நிழல்'' என்றும், "திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் கழல்களன்றி மற்றோர்களைகணிலம்'' என்றுமிப்படி யிதுக்கென்னச்சமைந்திருந்து நிரவதிகஸ்தோத்ரங்களாலே ஸ்துதித்தருளும்.

(தமிழ்மாறன் சொல்வல்லார்) ஸர்வஸுலபமான த்ராவிட பாஷைக்கு தேஸிகரான வாழ்வார் திவ்யஸூக்தியான வித்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார். (வானவர்க்கு வாய்த்தகுரவர்) அவனுடையவிபூதியை ததீயத்வாகாரேணவநுபவிக்கிற நித்யஸூரிகளுக்கு அவ்வநுபவ விஷயமான வித்திருவாய்மொழியை இவர்களிங்கே யிருந்தநுஸந்திக்கையாலே, அவர்களுக்கநுரூபமான வாதரணீயராவர். "திருவிண்ணகர்பத்தும் வல்லார்கோணையின்றி விண்ணோர்க்கென்றுமாவர் குரவர்கள்'' என்றத்தை யருளிச்செய்தபடி. (ருரு)

---

பதவுரை.

| | |
|---|---|
| கண்ணன் | ஸ்ரீக்ருஷ்ணனுடைய |
| குரவைமுதலாம் | திருக்குரவைகோத்தது முதலிய |
| கோலச்செயல்கள் | திவ்யசேஷ்டிதங்களை |

| | |
|---|---|
| இரவுபகல் என்னுமல் | ராத்ரிகாலம் பகற்காலமென்று பாராமல் |
| என்றும் | எப்போதும் |
| பரவும்மனம்பெற்றேன் என்று | துதிக்கும்படியான மநஸ்ஸைப்பெற்றேனென்று |
| களித்துப்பேசும் | செருக்கிப்பேசின |
| பராங்குசன்தன் | ஆழ்வாருடைய |
| சொல்தேனில் | ஸ்ரீஸூக்தியாகிற தேனில் |
| நெஞ்சே | மனமே! |
| துவள் | அவகாஹிக்கக்கடவாய். (ருச) |

அவ.—ஐம்பத்துநாலாம்பாட்டு. (குரவைமுதலாம்)இதில் க்ருஷ்ணனுடைய நிகில திவ்யசேஷ்டிதங்களை யநுபவித்தருளிச் செய்தபடியை யநுவதித் தருளிச்செய்கிறார். அதெங்ஙனே யென்னில்; 'மாசறுசோதி" "மானேய்நோக்கு" "பிறந்தவாறு" என்கிற திருவாய்மொழிகளிலே, "சேணுயர் வானத்திருக்கும்" "நாராயணன் நாமங்களே-தொல்லருள்நல் வினையால் சொலக்கூடுங்கோல்" "உருக்கியுண்டிடுகின்ற நின்றன்னை நாடும்வண்ணஞ்சொல்லாய்" என்று தூரஸ்தனென்றும், நாகீர்வரத்திருநாமஞ்சொல்லக் கூடவற்றேயென்றும் தரித்துநின்றுகுணநுபவம்பண்ண வல்லேனும்படி பண்ணவேணுமென்றும் தாமாசைப்பட்ட வகைகளெல்லாம்ஸித்திக்கும்படி தான்க்ருஷ்ணனாய் வந்தவதரித்துச்செய்தருளின நிகில திவ்யசேஷ்டிதங்களையும், தத்தே(ஹே)துவான திவ்யகுணங்களையு மநுபவவிஷயமாம்படி காட்டிக்கொடுக்க, அவற்றைக்கட்டடங்க தரித்துநின்று மண்டியநுபவித்து ப்ரீதராய்ச் செல்லுகிற * குரவையாய்ச்சியரிலர்த்தத்தை "குரவைமுதலாம்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.- (குரவைமுதலாங்கண்ணன் கோலச்செயல்கள்) அதாவது - * குரவையாய்ச்சியரோடு கோத்ததும், * கேயத்தீங்குழலூதிற்றும், * நிகரில் மல்லரைச்செற்றதும், * நோவவாய்ச்சியுரலோடார்க்கவிரங்கிற்றும், * வேண்டித்தேவரிரக்கவந்து பிறந்ததும், *

இகல்கொள் புள்ளைப்பிளந்ததும், *மனப்பரிப்போடழுக்கு மானிட சாதியிற்றான்பிறந்து தனக்கு வேண்டுருக்கொண்டதும், * நீணிலத்தொடுவான் வியப்பநிறைபெரும்போர்கள்செய்து வாணனையாயிரந்தோள் துணித்ததும், *கலக்கவேழ்கடலேழ் மலையுலகேழுங்கழியக் கடாயுலிக்கத்தேர்கொடு சென்றமாயமும், * மண்மிசைப்பெரும் பாரம் நீங்க ஓர் பாரதமாபெரும்போர்பண்ணி மாயங்கள் செய்தது முதலாகவெல்லாவற்றையும் நினைக்கிறது, (குரவைமுதலாங்கண்ணன்கோலச் செயல்களென்று).

முந்துறக்குரவைமுதலாகக் காட்டினது திருக்குரவையிலாரவாரத்தையநுபவித்து (ய)தரிக்கைக்காக. * வேண்டித்தேவரிரக்கவந்து பிறந்தவ்ருத்தாந்தத்தை முந்துறமுன்னங் காட்டாதொழிந்தது - * பிறந்தவாற்றிலே ஆழங்காற்பட்டு ஆறுமாஸம் மோஹித்தாப்போலே மோஹிப்பரென்று. (கண்ணன் கோலச்செயல்கள்) ஸ்ரீவால்மீகி (க) 'காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் - காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம்'' என்று-ரகுவரசரிதத்தையே முழுதுமநுபவித்தாப்போலே, இவரும் க்ருஷ்ணனுடைய நிகிலதிவ்ய சேஷ்டிதங்களையநுபவித்தபடி. *தேவக்கோலப்பிரான் செய்கையிறே.

(இரவுபகலென்னுமல்) ராத்ரிபகலென்னுமல். காலநியதியன்றிக்கே (என்றும்பரவுமனம் பெற்றேனென்றே களித்துப்பேசும்) ஸர்வகாலத்திலும்ஸ்துதிக்கும்படியானமநஸ்ஸைப்பெற்றேனென்று ஹர்ஷபாரவஶ்யத்தாலே கர்வித்துப்பேசும். அதாவது - "மாயவினைகளையேயலற்றி யிரவுநன்பகலுந்தவிர்கிலமென்ன குறைவெனக்கே" என்றும், "நேயத்தோடுகழிந்தபோதெனக் கெவ்வுலகம் நிகரே" என்றும், "நுகரவைகல்வைகப்பெற்றேனெனக்கென்னினி நோவதுவே" என்றும், "மேவக்காலங்கள் கூடினேனெனக்கென்னினிவேண்டுவதே" என்றும், "ஈண்டுநாளலற்றப் பெற்றேனெனக்கென்ன விகலுளதே" என்றும், "பகலிராப்பரவப்பெற்றேனெனக்கென்னமனப்பரிப்பே" என்றும், "நினைக்கும்நெஞ்சுடையேனெனக்கினியார் நிகர்நீணிலத்தே" என்றும், "என்னப்பன்றன்மாயங்களே காணுநெஞ்சுடையேனெனக்கினியென்ன கலக்கமுண்டே" என்

(க) ரா-பா-ச-எ.

மூ.—துவளறுசீர்மால்திறத்துத் தொன்னலத்தால்நாளும்
துவளறுதன்சீலமெல்லாஞ் சொன்னுன்—துவளறவே
முன்னமநுபவத்தின்மூழ்கிநின்றமாறனதில்
மன்னு முவப்பால் வந்தமால். (ருரு)

றும்,"மால்வண்ணனை மலக்குநாவுடையேற்கு மாறுளதோவிம்மண்ணின்மிசையே" என்றும், "நண்ணிநான் வணங்கப்பெற்றேனெனக்கார்பிறர் நாயகரே" என்றும் பேசினவையென்கை. (க) "உருகாமல் தரித்ததும்நண்ணிவணங்கப்பலித்தவாறே" என்றிறேநாயனுருமருளிச்செய்தது.

(களித்துப்பேசும் பராங்குசன்றன்) "வலக்கையாழி யிடக்கைச்சங்க மிவையுடைமால்வண்ணனை மலக்குநாவுடையேன்" என்கையாலே - ஸர்வஸ்மாத்பரனை வஶீகரிக்கு மங்குஶமாயுள்ளவரென்கிறத்தைப் பற்றச்சொல்லுகிறது. (உ) "கவிஶம்கரஹஸ்தேப சக்ரம் - கவிஶம்சக்ரஹஸ்தேப சக்ரம்" என்றதிறே திருநாவுடையபிரான்தாஸர் குமாரராகையாலே, அடியறிந்து பராங்குஶனென்கிறூர். (பராங்குசன்றன்சொற்றேனில் நெஞ்சேதவள்) (ங) "வால்மீகிவதநாரவிந்தகளிதம் ராமாயணாக்யம்மது - வால்மீகேர்வதநாரவிந்தகளிதம் ராமாயணக்யம்மது" என்றும், (ச) "ஶுகமுகாதம்ருதத்ரவஸம்யுதம் பிபதபாகவதம் ரஸம் - ஶுகமுகாதம்ருதத்ரவஸம்யுதம்பிபதபாகவதம் ரஸம்" என்றும் சொல்லுமாபோலே, * அமுதமென்மொழியாகையாலும், (ரு) "தேனேயின்னமுதே" என்று பேசப்படுமவன் விஷயமாகையாலும் தேன்போலே யினிதாயிறே யித்திருவாய்மொழிதானிருப்பது. மனஸ்ஸே! அல்பஸாரமானவற்றிலே புக்கலமாவாதே ஸாரக்ராஹியாய், ஸாரதமமான விதிலே ஸக்தமாய்ப்போரு. (சு) "என்னெஞ்சென்னும் பொன்வண்டு" என்னக்கடவதிறே. (ருச)

பதவுரை.

| | |
|---|---|
| துவள்அற | (தங்யபரதையாகிற) குற்றமின்றி |
| முன்னம் அநுபவத்தில் மூழ்கி நின்றமாறன் | முன்னமே பகவதநுபவத்தில படிந்து நின்ற ஆழ்வார் |

(க) ஆசார்யஹ்ரு. (உ) (ங) (ச) (ச) பாக-க-க-ங,
(ரு) தி வாய்-ரு-க-உ, (சு)இரா-நூ-கOO.

| | |
|---|---|
| அதில்மன்னும் உவப்பால் வந்தமால் | அந்தஅநுபவத்திற்பொருந்தி நிற்கப்பெற்ற ஆநந்தத்தாலுண்டான வ்யாமோஹத்தினல் |
| துவள்அறுசீர் | குற்றமற்ற கல்யாணகுணங்களையுடைய |
| மால்திறத்து | எம்பெருமான் விஷயத்தில் |
| தொல்நலத்தால் | ஸ்வாபாவிக பக்தியாலே |
| நாளும் | நாடோறும் |
| துவள்அறு | அவ்விஷயத்தில் சலித்தலில்லாத |
| தன்சீலம் எல்லாம் | தமது ஸ்வபாவங்களை யெல்லாம் |
| சொன்னன் | அருளிச்செய்தார். (ருரு) |

அவ.—ஐம்பத்தைந்தாம்பாட்டு. (துவளறுசீர்) இதில் - பகவத்விஷயத்தில் ப்ராவண்யத்தை யருளிச்செய்தபடியையநுவதித்ருளிச்செய்கிறார். அதெங்ஙனே யென்னில், கீழ்-தம்முடைய த்ருஷ்ணையாலே க்ருஷ்ணகுணசேஷ்டிதங்களை மண்டியநுபவிக்கப்புக்கவிடத்தில், குடிக்கின்றதண்ணீர்விக்கிப் பாரவஶ்யத்தை விளக்குமாபோலே அவைஶைதில்யத்தை விளக்க, அத்தாலே கலங்கி, அடியேபிடித்துத்தமக்கு பகவத்விஷயத்தில்கரணத்ரயத்திலுமுண்டான ப்ராவண்யாதிஶயத்தை அந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிற *துவளில் மாமணிமாடத்திலர்த்தத்தை "துவளறுசீர்" என்று தொடங்கியருளிச்செய்கிறானென்கை.

வ்யா.—"துவளறவே முன்னமநுபவத்தில் மூழ்கின்றமாறனதில் மன்னுமுவப்பால் வந்தமால் துவளறுசீர்மால்திறத்தில் தொன்னலத்தால்நாளும் துவளறுதன் சீலமெல்லாம் சொன்னன்" என்றந்வயம். (துவளறவே) * மயர்வறமதிநலம் பெறுகையாலே யென்னுதல், அந்யபரதையாகிற குற்றமறுகையாலே யென்னுதல். (முன்னமநுபவத்தில் மூழ்கின்றமாறன்) முந்துறமுன்னம் (க) *பொய்ந்நின்ற ஞானந்தொடங்கி இவ்வளவுமநுபவத்திலே யவகாஹித்தவாழ்வார்.

அதாவது-(உ "நிகரிலவன்புகழ்பாடியிளைப்பிலம் பகலுமிரவும் படிந்துகுடைந்தே" என்றும், (ங)"பரமன் பவித்திரன் சீர்செடி

(க) தி-வி-க. (உ) தி-வாய் க-எ-கo. (ங) தி-வாய்-உ-ங-ச.

யார் நோய்கள்கெடப் படிந்து குடைந்தாடி அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே'' என்றும், (க) "சீர்தான் செய்யதாமரைக்கண்ணனென்றென் றிராப்பகல் வாய்வெரீஇ" என்றும், (உ) "துயரில் சீர்க்கண்ணன் மாயன் புகழ்துற்றயான்" என்றும், (ங) "வீவில்சீரன் மலர்க்கண்ணன் விண்ணோர் பெருமான்றன்னை வீவில் காலமிசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன்" என்றும், (ச) "தக்க கீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான் கண்டபின்" என்றும், (ரு) "புகர்கொள் சோதிப்பிரான்றன் செய்கைநினைந்து புலம்பியென்றும் நுகரவைகல் வைகப்பெற்றேன்" என்றுமிப்படியாயிற்று * அந்நாள் தொடங்கியிந்நாடொறும் * இணையடிக்கே அன்பு சூட்டி, அன்பு * பாலேபோல்சீரில் பழுத்தபடி. இப்படிகுணாநுபவத்தாலே தமக்கு * மாறும் * நிகருமின்றி நித்யமத(ஹ)முதி(ஜ)தராய் * மாலேறி.

(துவளறுசீர்மால்திறத்துத் தொன்னலத்தால்) ஆஶ்ரிதர்க்கநுபாவ்யமாகையாலே குற்றமற்றுஹேயப்ரத்யநீகமான கல்யாணகுண யுக்தனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் ஸ்வாபாவிக ப(க்)தியாலே. (நாளுந்துவளறுதன் சீலமெல்லாம்சொன்னான்) நாள்தோறும் தாம் அவ்விஷயத்தில் ப்ராவண்யத்தையுற்றிருக்கிற தம்முடைய ஸ்வபாவமெல்லாமருளிச்செய்தார். (சு) "ராமேதி ராமேதி ஸதைவ புத்யா விசிந்த்ய வாசா ப்ருவதீ - ராமேதி ராமேதி ஸதைவ புத்யா விசிந்த்யவாசாப்ருவதீ" என்றும், (எ) "ஸர்வஸத்த்வேஷு ராஜந் ராமமேவாநுபஶ்யதி - ஏகஸ்தஹ்ருதயாநாம் ராமமேவாநுபஶ்யதி" என்றும் சொல்லுமாபோலே.

அதாவது - "தாமரைத்தடங்க ணென்றும் குவளையொண் மலர்க்கண்கள் நீர்மல்கநின்றுநின்று குமிறுமே" என்றும், "தேவ தேவபிரானென்றேநிமியும் வாயொடுகண்கள்நீர்மல்கநெக்கொசிந்து கரையுமே" என்றும் "கிரைகள் மேய்த்ததுமே பிதற்றிநெடுங்கண்ணீர்மல்கநிற்குமே" என்றும், "கண்ணபிரானென்றே யொற்கமொன்றுமிலளுகந்துகந்துண்மகிழ்ந்து குழையுமே" என்றும், "அன்றுதொட்டுமையாந்திவள் நுழையும் சிந்தையளன்னைமீர்

(க) தி-வாய்-உ-எ-க. (உ) தி-வாய் ங-கo-சு. (ங) தி-வாய்-ச-ரு-ங. (ச) தி-வாய்-ரு ரு. (ரு) தி வாய் சு ச ங (சு) ரா ஸு ங உ கக (எ) ரா ஸு கசு உரு

மூ.—மாலுடனே தான் கலந்து வாழப்பெருமையால்
சாலநைந்து தன்னுடைமைதானடையக்—கோவிலே
தானிகழவேண்டாமற்றன்னை விடல் சொன்மாறன்
ஊனமறுசீர் நெஞ்சேயுண். (ருசு)

தொழுமத்திசையுற்றுநோக்கியே'' என்றும், ''வைகல் நாடொறும் வாய்க்கொள்வாசகமும் மணிவண்ணனுமமே யிவளன்னைமீர்'' என்றும், ''அவன் சின்னமுந்திருநாமமுமிவள் வாயனகள் திருந்தவே'' என்றும், ''இருந்திருந்தரவிந்தலோசன வென்றென்றேநைந்திரங்குமே'' என்றும், ''துலைவில்லிமங்கலமென்று தன்கரங்கள் கூப்பித்தொழுமவ்வூர்த்திருநாமம் கற்றதற்பின்னையே'' என்றும், ''தூலைவில்லிமங்கலம் சென்னியால் வணங்குமவ்வூர்த்திருநாமம் கேட்பதுசிந்தையே''என்றும்,''சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தைதாயென்றடைந்த வண்குருகூரவர் சடகோபன்'' என்றும் - இப்படித்தமக்கு த்ரிவிதகரணத்தாலுமுண்டான ப்ராவண்யஸ்வபாவத்தை யெல்லாமருளிச்செய்தாரென்கை. '' இத்திருவாய்மொழி - ஆழ்வார் ப்ரக்ருதி சொல்லுகிறதென்று நம்முதலிகளெல்லாரும் போரவிரும்பி யிருப்பர்கள்'' என்றிறே ஈட்டிலே யருளிச்செய்தது. (ருரு)

பதவுரை.

| | |
|---|---|
| மாலுடனே | எம்பெருமானோடே |
| தான் கலந்து வாழப்பெருமையால் | தான் கூடிவாழப் பெருமையாலே |
| சாலநைந்து | மிகவும் தளர்ந்து |
| தன் உடைமைதான் அடையக் கோவி தான் இகழவேண்டாமல் | தன் ஆத்மாத்மீயங்களடையத்தான் விட உத்யோகிக்கவேண்டினாற் போலன்றிக்கே |
| தன்னைவிடல் சொல்மாறன் | தன்னடையே அவைமுற்கோலித் தம்மைக் கட்டடங்கவிட்டகலும் படியை அருளிச்செய்த ஆழ்வாருடைய |
| ஊனம்அறுசீர் | குறைவற்ற கல்யாணகுணங்களை |
| நெஞ்சே | மனமே |
| உண் | அநுபவிப்பாயாக. (ருசு) |

அவ.—ஐம்பத்தாறும்பாட்டு. (மாலுடனே) இதில் - தமக்குள்ளதடையக்கைவிட்டுப் போனபடியைப்பேசின பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; கீழ்ப்பிறந்த ஸம்ஶ்லேஷம் மாநஸஸம்ஶ்லேஷமாத்ரமாய் பாஹ்யகரணயோக்ய மல்லாமையாலே, "சென்னியால் வணங்குமவ்வூர்த் திருநாமம் கேட்பது சிந்தையே" என்கிறபடியே மிகவுமவஸந்நராய் அத்தாலே மோஹித்துக்கிடக்க; * ஏறாளுமிறையோனில் தாம்விடப்பார்த்த ஆத்மாத்மீயபதார்த்தங்களடங்கலும் தன்னடையே விட்டுக்கழன்று ஶிதிலமாய்ச் செல்லுகிறபடியை, திருத்தாயார், தன்மகள்வலயா (தீ)திகள் போயிற்றென்று அவ ஹுரிச்சூறை கொண்ட ப்ரகாரத்தைப்பேசின பாசுரத்தாலே சொல்லிக்கூப்பிடுகிற * மாலுக்குவையத்திலர்த்தத்தை "மாலுடனே தான்கலந்து" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(மாலுடனே தான்கலந்துவாழப் பெறுமையால்) ஆஶ்ரிதவ்யாமுக்த(ஓ)னை ஸர்வேஶ்வரனுடன் ஸம்ஶ்லேஷித்து ஸத்தைபெற்று உஜ்ஜீவியாமையால். கீழ் - "அடிமைசெய்வார் திருமாலுக்கு" என்றாரிறே அத்தையடியொற்றினபடி. (சாலநைந்து) மிகவுமவஸந்நராய். தம்தசை தாம்பேசமாட்டாதே திருத்தாயார் பேசும்படியாகத் தளர்ந்து. (தன்னுடைமைதானடையக் கோலிபே தானிசழவேண்டாமல்) * ஏறாளுமிறையோனில் அவனுக்குறுப்பல்லாத ஆத்மாத்மீயங்களடையத்தாம் விடவுத்யோகிக்க வேண்டிறுப்போலன்றிக்கே. (தன்னைவிடல்சொல் மாறன்) தன்னடையே அவை முற்சோவித்தம்மைக் கட்டடங்கவிட்டகலும் படியை யருளிச்செய்தவாழ்வார்.

அதாவது - (க) "உத்தரீயம் தயாத்யக்தம் ஶுபாந்யாபரணாநி ச-உத்தரீயம் தயா த்யக்தம் ஶுபாந்யாபரணாநி ச" என்னும் படி, "ஏலக்குழலிழந்ததுசங்கே" "என்மங்கை யிழந்ததுமாமை நிறமே" "என்சிறுந்திருங்கூந்தலிழந்தது பீடே" "என்பாடுடையல்குலிழந்தது பண்பே" "என்கண்புனைகோதை யிழந்ததுகற்பே" "என்விற்புருவக்கொடிதோற்றதுமெய்யே" "என்தையலிழந்தது

---

(க) பா-கி-சுரு-கo.

மூ.—உண்ணுஞ்சோறுதி யொருமூன்று மெம்பெருமான்
கண்ணனென்றே நீர்மல்கிக்கண்ணிணைகள்—மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில் மாயன்பால்போமாறன்
பொன்னடியே நந்தமக்குப்பொன். (ருஎ)

---

தன்னுடைச்சாயே" "என்வாசக்குழலியிழந்ததுமாண்பே" "என்பூண்புனை மென்முலைதோற்றதுபொற்பே" "என்கற்புடையாட்டியிழந்ததுகட்டே" என்றருளிச்செய்தவை யென்கை.

(தன்னைவிடல்சொல்மாறன்) "கட்டெழில் தென்குருகூர்ச்சடகோபன்சொல்" என்றருளிச்செய்த வாழ்வாருடைய (ஊனமறு சீர்நெஞ்சேயுண்) சீருக்கூனமாவது - ஸ்வார்த்தமாயிருக்கை. அப்படியன்றிக்கே பராநுபவயோக்யமாயிருக்கை-ஊனமற்றிருக்கை. இப்படிசிரவத்யமான கல்யாணகுணத்தை நெஞ்சேயுண். (க) "ஓவாத்தொழில்சார்ங்கன்றொல் சீரை நன்னெஞ்சேயோவாதவுணுக வுண்" என்று ஆழ்வார் அவன்குணங்களைப் புஜிக்குமாபோலே நீயுமாழ்வாருடைய பக்த்யாதிகுணங்களை பு(ஷ)க்தமாகபுஜி.

---

பதவுரை.

| | |
|---|---|
| உண்ணுஞ்சோறு ஆதி | உண்ணுஞ்சோறு முதலான |
| ஒருமூன்றும் § | மூன்று தா(யா)ரகபதார்த்தங்களும் |
| எம்பெருமான் கண்ணனே என்று | எம்பெருமானாகிய ஸ்ரீக்ருஷ்ணனே யென்று |
| கண் இணைகள் நீர்மல்கி | இரண்டுகண்களிலும் நீர்ததும்பப்பெற்று |
| மண் உலகில் மன்னு | இந்நிலவுலகத்தில் நிலைபெற்ற |
| திருக்கோளூரில் | திருக்கோளூரில் எழுந்தருளியிருக்கிற |
| மாயன்பால்போம் | ஸர்வேச்வரனிடஞ்சென்ற |
| மாறன் | ஆழ்வாருடைய |
| பொன் அடியே | அழகியதிருவடிகளே |
| நந்தமக்கு பொன் | நமக்கு தநமாகும். (ருஎ) |

அவ.—ஐம்பத்தேழாம்பாட்டு. (உண்ணுஞ்சோறுதி) இதில் திருக்கோளூரேறப்போனபடியை யருளிச்செய்ததை யநுவதித்

---

(க) பெரி-திருவ-எஅ. § சோறு, நீர், வெற்றிலை.

நருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; திருத்தாயார் "மாலுக்கு வையமளந்தமணாளற்கு' என்றுதொடங்கி "பொற்பமைநீண்முடி பூந்தண்டுழாயற்கு" என்று-ஆபாதமௌளிபர்யந்த பர்யவஸிதங்களானவவன் திருநாமங்களைச் சொல்லிக்கூப்பிட்டுப் பரவசையாய்க்கிடந்துறங்க, ம்ருதஸஞ்ஜீவிநியான திருநாமத்தைக்கேட்டுப் பெண்பிள்ளையுணர்ந்தெழுந்திருந்து அவனிருக்கிற திருக்கோளூரேறப்போக, அநந்தரம் திருத்தாயாருணர்ந்து படுக்கையில் பெண்பிள்ளையைக்காணப் பெறாமையாலே, "தன்வயிற்றிற்பிறப்பாலும் இவள்தன் ஸ்வபாவத்தாலும் திருக்கோளூரேறப்போனாள்" என்று ஶோகிக்கிற அந்தத்திருத்தாயார் பாசுரத்தாலே ஸ்வதசையை யருளிச்செய்கிற * உண்ணுஞ்சோற்றிலர்த்தத்தை உண்ணும் சோறுதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(உண்ணும் சோறுதியொருமூன்று மெம்பெருமான் கண்ணனென்றே நீர்மல்கிக்கண்ணிணைகள்) "உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங்கண்ணன்" என்கிறமுதற்பாட்டு ப்ரதாநமாய் அத்தைப்பின் சென்றருளிச்செய்தபடி.

(உண்ணுஞ்சோறுதியொருமூன்றும்) அந்நாதியானதா(யா)ரகாதி த்ரயமும். (ஒருமூன்றும்) அத்விதீயமாயிருக்கிற மூன்றும். (எம்பெருமான் கண்ணனென்றே) எனக்குஸ்வாமியான க்ருஷ்ணனென்றே யநுஸந்தித்து. (நீர்மல்கிக்கண்ணிணைகள்) பா(வ)நா ப்ரகர்ஷத்தாலே கண்ணிணைகள் நீராலே நிறைந்து. க்ருஷ்ண த்ருஷ்ணா க்ருஷ்ணாநுபவத்தாலேயிறேஶமிப்பது. (மண்ணுலகில்-திருக்கோளூரில் மன்னுமாயன்பால் போமாறன்) இவ்விபூதியிலே திருக்கோளூரிலே நித்யவாஸம்பண்ணுகிற, ஸௌந்தர்ய ஶீலாதிகளாலாஶ்சர்யபூதனான வைத்தமாநிதிபால் போமாழ்வார். * இறந்தால் தங்குமூர் விண்ணூராகையாலே விசேஷிக்க வேண்டா; நாட்டார் பொருந்தி யிருக்குமூர் இவர்க்கு நெருப்பாயிருக்கையாலே "மண்ணினுள் - புகுமூர்திருக்கோளூர்" என்றிறே விசேஷிக்க வேண்டுவது. (௨) "ஸவ்ராந் ஹோமாந் வரிஸ்ருஜ) - ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய" இத்யாதிவத் தானுகந்தவூரிறே இவர்க்கு

(௧) ரா-ஸு-௧௬-௧௧.

மூ. —பொன்னுலகுபூமியெல்லாம் புள்ளினங்கட்கேவழங்கி
என்னிடரைமாலுக்கியம்புமென—மன்னுதிரு
நாடுமுதற்றாது நல்கிவிடுமாறனையே
நீடுலகீர் போய்வணங்குநீர். (ருஅ)

மண்ணினுள்புகுமூர்.* திருக்கோளூரில் பூவியல் பொழிலும் தடமும் மவன்கோயிலுங்கண்டாலிறே இவராவியுள் குளிருவது. (க) "பாலை கடந்தபொன்னே - கண்ணன் வெஃகாவுது-எப்பாலைக்கும் சேமத்ததே" என்னக்கடவதிறே.

மன்னுதிருக்கோளூரில் மாயன்பால் போகையாவது - "ஊரும் நாடுமுலகமுந்தன்னைப்போலவனுடைய பேருந்தார்களுமேபிதற்ற—போருங்கொல்" என்றும், "திருமால் திருநாமங்களே கூவியெழுமென்பர்வைபோய்" என்றும், "செல்வமல்கியவன் கிடந்ததிருக்கோளூர்க்கே மெல்லிடை நுடங்கவிளமான் செல்லமேவினள்" என்றும், "ஆவியுள்குளிர யெங்ஙனேயுகக்குங்கொல்" என்றும் "தென்றிசைத்திலதமனையத்திருக்கோளூர்க்கேசென்று" என்றும், "செல்வமல்கியவன்கிடந்த திருக்கோளூர்க்கேயொல்கியொல்கி நடந்து" என்றும், "கசிந்தநெஞ்சினளாய்க்கண்ணநீர் துளும்பச்செல்லுங்கொல்" என்றும், "என்கண்ணனுக்கென்றீரிய ளிருப்பாளிதெல்லாங் கிடக்கவினிப்போய்" என்றும் "திருக்கோளூர்க்கே நேரிழைநடந்தாள்" என்றும் * மனைக்குவான்பழியும் நினையாதே செல்லவைத்தபடி இதுவாயிற்று. இத்தால் - வழியிலுள்ளவர்களையும் வாழ்வித்து அவனையும்வாழ்வித்துத் தானும் வாழும்படிபோனுளென்றதாயிற்று. இப்படியெல்லாரையும் வாழ்வித்துக்கொண்டு வைத்தமாநிதியை காடிநடந்து போம்மாறன். (பொன்னடியேநந்தமக்குப்பொன்) அவர்க்குவைத்தமாநிதி யடியாயிருக்கும், நமக்குவைத்தமாநிதி ஆழ்வாரடியாயிருக்கும். "கைம்முதலிழந்தாருண்ணும் நிதியினுபத்ஸகத்வம் புகுமூரிலே ஸம்ருத்த(ஸ)ம்" என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலே யருளிச்செய்தது. (ருஎ)

பதவுரை.

| | |
|---|---|
| பொன் உலகு | நித்யவிபூதியென்ன |
| பூமி | லீலாவிபூதியென்ன |

(க) திருவி-உகூ.

| | |
|---|---|
| எல்லாம் | ஆகிய இவையெல்லாவற்றையும் |
| புள் இனங்கட்கே வழங்கி | பறவைக்கூட்டங்களுக்கே கொடுத்து |
| என் இடரை | "என் துக்கத்தை |
| மாலுக்கு | எம்பெருமானுக்கு |
| இயம்பும் என | சொல்லுங்கள்" என்று |
| மன்னு திருநாடுமுதல் | நித்யவைகுண்டம் முதலான இடங்களில் |
| தூதாகவிடும் | தூதாக இச்சித்தனுப்பின |
| மாறனையே | ஆழ்வாரையே |
| நீடுலகீர் | பெரிய உலகத்தீர்களே! |
| நீர்போய் வணங்கும் | நீங்கள்போய்வணங்குங்கள். (ருஅ) |

அவ.—ஐம்பத்தெட்டாம்பாட்டு. (பொன்னுலகு) இதில் - ஆர்த்திபாரவஶ்யத்தாலே தூதுவிட்ட பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; * உண்ணுஞ்சோற்றில் ஆற்றாமையோடே "திருமாலானவைத்தமாநிதி திருக்கண்ணும் செவ்வாயுங்கண்டநுபவிக்கவேணும்" என்று த்வராபரவஶராய்ப் புறப்பட்டு, முட்டப்போகமாட்டாமல் "எங்ஙனே புகுங்கொல்" என்றதுவே பவித்துத்தளர்ந்து விழுந்து நோவுபடுகிற தசையை அவனெழுந்தருளியிருக்கிற பரமபதாதிகளிலே போயறிவியுங்கோளென்று பரிஸரவர்த்திகளான க(வ)டகரைத் தாமர்த்திக்கிற ப்ரகாரத்தை தூதப்ரேஷணவ்யாஜத்தாலே யருளிச்செய்கிற* பொன்னுலகாளீரிலர்த்தத்தை *பொன்னுலகாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(பொன்னுலகுபூமியெல்லாம் புள்ளினங்கட்கேவழங்கி) முதற்பாட்டை முடியக்கடாக்ஷித்தருளிச்செய்தபடி. (பொன்னுலகுபூமியெல்லாம்) (க) "மநுஷ்யலோகாந் - கச்சலோகாந்" என்னும்படி, நித்யவிபூதி, லீலாவிபூதி எல்லாவற்றையும். (புள்ளினங்கட்கேவழங்கி) பக்ஷபாதமுடைய பக்ஷிஸமூஹங்களுக்கே தம்முடைய ரக்ஷணார்த்தமாகவுபகரித்து. (உ) * வண்சடகோபனை

(க) ரா-ஆ-சு-அ-ந0. (உ) தி-வாய்-உ-ச-கக.

பாலே மோக்ஷாதி புருஷார்த்தங்களை வழங்கவல்லராயிருக்கை. (வழங்கியென்னிடரை மாலுக்கியம்புமென) உபயவிபூதியையு முபஹாரமாத்ரமாக வுபகரித்து, பிரிவாலுண்டான என்னுடைய பரிவை ஸர்வேஶ்வரனுக்கறிவியுங்கோளென்று. என்னிடரை - என் துஃகத்தை.

அதாவது - "என்னிலைமை" என்றும் "மெய்யமர்காதல்" என்றும், "பாசறவெய்தி" என்றும், "பேர்த்துமற்றோர்களை கண்வினையாட்டியேன் நானொன்றிலேன்" என்றும், "இன்னவாறிவள்காண்மின்" என்றும் சொன்னவிவையென்கை, (என்னிடரைமாலுக்கியம்புமென) அதாவது — "என்னலங்கொண்டபிரான்றனக்கென்னிலைமையுரைத்து" என்றும், "மெய்யமர்காதல் சொல்லி" என்றும் "யாமிதுவோதக்கவாறென்ன வேண்டும்" என்றும், "எங்குச்சென்றாகிலுங் கண்டிதுவோதக்கவாறென்மினே" என்றும், "கற்பியாவைத்தமாற்றஞ்சொல்லிச் சென்மின்கள்" என்றும், "மதுசூதற்கென் மாற்றஞ்சொல்லி" என்றும், "மாசறுநீலச்சுடர் முடிவானவர்கோனைக் கண்டேசறு நம்மைபல்லால் மறு நோக்கிலளென்று சொல்" என்றும், "விண்ணவர்கோனைக்கண்டு வார்த்தைகள்கொண்டருளியுரையீர்" என்றும், "மந்திரத்தொன்றுணர்த்தி யுரையீர்" என்று மருளிச்செய்தவையென்கை.

(மன்னுதிருநாடு முதற்றூதுநல்கிவிடும்) திருநாடுமுதலாவது - (க) "மூன்றும்தூதுக்கு விஷயம் பரத்வத்வயம்" என்கை பாலே-திருநாடும் நெஞ்சநாடும்விஷயம். "மாமதுவார்தண்டுழாய் முடிவானவர்கோனைக்கண்டு" என்றும், "மாசறுநீலச்சுடர் முடிவானவர்கோனைக்கண்டு" என்றும், "கார்த்திரள்மாமுகில்போல் கண்ணன் விண்ணவர்கோனைக்கண்டு" என்றும், "எங்குச்சென்றாகிலுங்கண்டு" என்றும்-பரத்வாந்தர்யாமித்வ விஷயதூதப்ரேஷணமாயிருக்குமித்திருவாய்மொழி. தூதுநல்கி விடுகையாவது - விருப்பத்தோடேவிடுகை. "தன்மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றிநல்கான்" என்று ஐகரஸ்யம் பற்றுசாகவிடுகையென்றபடி.

---

(க) ஆசார்யஹ்ருதயம்.

மூ.—நீராகிக்கேட்டவர்கணெஞ்சழியமாலுக்கு
மேரார்விசும்பிலிருப்பரிதா—ஆராத
காதலுடன் கூப்பிட்டகாரிமாறன் சொல்லை
யோதிடவேயுய்யுமுலகு. (நிகூ)

---

(மன்னு திருநாடுமுதல் தூதுநல்கிவிடும் மாறனையே) நித்யமான திருநாடுமுதலான ஸ்தலங்களிலே ஆதரத்தோடே தூதுவிடுமாழ்வாரையே. (நீடுலகீர்போய் வணங்குநீர்) ப்ரவாஹரூபேண நித்யமான ஜகத்திலே வர்த்திக்கிறவர்களே! நீங்கள் தூதுவிடுகையாகிற வருத்தமின்றிக்கே நீங்களே நடந்துசென்றுபோய் ஸேவியுங்கோள். திருநாடுபோலே நெடுகியிராதே; திருநாட்டில் திருநகரி கிட்டிற்றாயிறே யிருப்பது. நீங்கள் புருஷகாரநிரபேக்ஷமாக வாழ்வரரையாஶ்ரயியுங்கோள். (நிஅ)

---

பதவுரை.

| | |
|---|---|
| கேட்டவர்கள் நெஞ்சு | கேட்டவர்களுடையமனம் |
| நீர் ஆகி அழிய | நீர்ப்பண்டமாயழியும்படியாகவும் |
| மாலுக்கும் | ஸர்வேஶ்வரனுக்கும் |
| ஏரார்விசும்பில்இருப்புஅரிதா | அழகுமிக்கிருந்துள்ளபரமபதத்தில் இருக்கை அரிதாம்படியாகவும் |
| ஆராதகாதலுடன் | தணியாத அன்புடனே |
| கூப்பிட்ட | அழைத்த |
| காரிமாறன்சொல்லை | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியை |
| ஓதிடவே | அப்யஸிக்கவே |
| உலகுஉய்யும் | உலகம் உஜ்ஜீவிக்கும். (நிகூ) |

அவ.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு (நீராகி) இதில் - கேட்டாரடைய நீராம்படி கூப்பிட்ட பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; தம் ஆர்த்தத்வநிகேட்டு க(வ)டகர் கால்நடைதந்துபோக மாட்டாமல் தளைப்பட்டுக்கிடக்கிறபடியைக் கண்டு, "அறிவிலிகளானவிவர்களீடுபட்டபடி கண்டால் ஸர்வஜ்ஞன் கேட்டால் பொறுக்கமாட்டாமல் சடக்கென வந்துமுகங் காட்டும்" என்றறுதியிட்டு, திருநாட்டிருப்புமடி கலங்கும்படிமுழு

மூ.—உலகுய்யமால் நின்றவுயர்வேங்கடத்தே
அலர்மகளைமுன்னிட்டவன்றன்—மலரடியே
வன்சரணாய்ச்சேர்ந்த மகிழ்மாறன்றாளிணையே
உன்சரணாய் நெஞ்சமேயுள், (கூ௦)

மிடறுசெய்து கூப்பிடுகிற * நீராய் நிலனாயிலர்த்தத்லத "நீராகிக் கேட்டவர்கள் நெஞ்சழிய" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(நீராகிக்கேட்டவர்கள்) கேட்டவர்கள் நீராய் நெஞ்சழியும்படியாகவும். அசேதநங்களோடு சைதந்யலேஶமுடையாரோடு பரமசேதநனோடு வாசியற, கேட்டாரெல்லாரும் நீர்ப்பண்டமாய் நெஞ்சழியும்படி. ,பாவைகளோடு பக்ஷிகளோடு ரக்ஷகனோடு வாசியறவெல்லாரும் த்ரவத்ரவ்யமாய் ஹ்ருதயஶைதில்யம் பிறக்கும்படி.

(மாலுக்குமோரார் விசும்பிலிருப்பரிதா) ஸர்வேஶ்வரனுக்கும் * அந்தாமமான பரமபதத்திலிருப்புப் பொருந்தாதபடியாகவும்; விண்மீதிருப்பரிதாம்படி. (ஆராதகாதலுடன் கூப்பிட்ட) (க) "கேராஶந்தீம் ஸாஶாஹேகி -க்ரோஶந்தீம் ராமராமேதி" என்னும்படி ஶமியாதவபி(ஹி)நிவேஶத்துடனாக்ரோஶம்பண்ணின. அதாவது-"வாராய்" "நடவாய்" "ஒருநாள் காணவாராய்" "ஒளிப்பாயோ" "அருளாயே" "இன்னங்கெடுப்பாயோ" "தளர்வேனோ" "திரிவேனோ" "குறுகாதோ" "சிறுகாலத்தையுறுமோவந்தோ" என்றார்த்தியோடே கூப்பிட்டவையென்கை. (ஆராதகாதலுடன் கூப்பிட்டகாரிமாறன்சொல்லை) அத்யபி(ஹி)நிவேஶத்தாலே ஆர்த்தியைதர்ஶிப்பித்த அபி(ஹி)ஜாதரான வாழ்வார் திவ்யஸூக்தியை, (ஓதிடவேயுய்யுமுலகு)இத்தையப்யஸிக்கவே ஜகத்து உஜ்ஜீவிக்கும். ஜகத்திலுண்டான சேதநருஜ்ஜீவிப்பர்களென்றபடி.(ருகூ)

பதவுரை.

| | |
|---|---|
| உலகு உய்ய | லோகம்உஜ்ஜீவிக்க |
| மால்நின்ற | ஸர்வேஶ்வரன் எழுந்தருளியிருக்கிற |

(க) ரா-ஆ-ருஉ-௬௦.

| | |
|---|---|
| உயர்வேங்கடத்தே | உயர்ந்த திருமலையில் |
| அலர்மகளைமுன்னிட்டு | பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டு |
| அவன் தன் | அந்தஸர்வேஶ்வரனுடைய |
| மலர் அடியே | திருவடித்தாமரைகளையே |
| வன்சரணாய்சேர்ந்த | உறுதியான உபாயமாகப்பற்றின |
| மகிழ்மாறன் | வகுளாபரணருடைய |
| தாளிணையே | திருவடிகளையே |
| நெஞ்சமே | மனமே! |
| உன் சரணாய் | உனக்கு உபாயமாக |
| உள் | நினைப்பாயாக. (கூ௦) |

அவ.-அறுபதாம்பாட்டு. (உலகுய்யமால் நின்ற) இதில் - திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம்புக்க பாசுரத்தை யநுபவித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனே யென்னில், கீழ்-ஆர்த்தி பாரவஶ்யத்தாலே கூப்பிடுகிறவிவர் ப்ராப்யாந்தரமான வைஶ்வர்ய கைவல்யங்களைக் காற்கடைக்கொண்டு ஶ்ரிய:பதிதிருவடிகளில்பண்ணுமடிமையே பரமப்ராப்யமென்றறுதியிட்டு, அந்தப்ராப்யத்தைப் பெறுகைக்காக, தேஶகாலாதி விப்ரக்ருஷ்டங்களான ஸ்தலங்களை விட்டு * கானமும் வானரமும் வேடுமானூர்க்கு முகங்கொடுத்துக்கொண்டு ஸௌலப்யஸாம்ராஜ்யம் பண்ணுகிற திருவேங்கடமுடையான் திருவடிகளிலே, (க) "ஸஹ ராத்ரூ ஸப்ராது:" இத்யாதிப்படியே பிராட்டியை முன்னிட்டு, ஶரண்யகுணபூர்த்தியையும் ஶரணவரணோத்யுக்தரான தம்வெறுமையையுமநுஸந்தித்துக்கொண்டு பூர்ணப்ரபத்தி பண்ணுகிற *உலகமுண்ட பெருவாயலிலார்த்தத்தை "உலகுய்யமால்நின்ற" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா. — (உலகுய்யமால் நின்றவுயர் வேங்கடத்தே) (உ) "தென்னியேங்குதண்டிருவேங்கட முடையா யுலகுதன்னை வாழநின்றநம்பி" என்று சொல்லுகிறபடியே, லோகமாகவுஜ்ஜீவித்து வாழும்படி ஸர்வேஶ்வரன் நின்றருளின திருமலையிலே, "திலதமுலகுக்காய்நின்றதிருவேங்கடத்தெம்பெருமானே" என்றதிலேநோக்கு.

(க) ரா-அ-கக-உ. (உ) பெரி-தி-ரு-ச-க.

(அலர்மகளை முன்னிட்டு) "திருமாமகள் கேள்வா" என்றும், "அலர் மேல் மங்கையுறைமார்பா" என்றும் பெரியபிராட்டியாரைப்புருஷ காரமாகமுன்னிட்டு.

(அவன்றன் மலரடியே) * திருவேங்கடத்தானவவன் * பூவார்கழல்களான * நாண்மலராமடித்தாமரையையே. அதாவது- "குலதொலடியேனுனபாதம்" என்றும், "ஆருவன்பிலடியே னுன்னடிசேர் வண்ணம்" என்றும், "அண்ணலே யுன்னடிசேர" என்றும் 'பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறு' என்றும், "திணரார் சார்ங்கத்துனபாதம் சேர்வதடியேன்" என்றும், "எந்நாளுன்னடிகளடியேன் மேவுவதே" என்றும், "உனபாதங்காண" என்றும்" "நோலாதாற்றேனுனபாதம்" என்றும், "அந்தோவடியேனுனபாதமகலகில்லேன்" என்றும், "உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று அடியேதொடங்கியடியைத் தொடர்ந்தபடி.

(அவன்றன் மலரடியே வன்சரணாய்ச்சேர்ந்த)திருவேங்கடத்தானவவன்றன்மலரடியே. இத்தால் – "நிகரில் புகழாய்" என்று தொடங்கிய நுஸந்திக்கிற வாத்ஸல்யாதிகளும் ஸூசிதம். (அவன்றன் மலரடியேவன்சரணாய்ச்சேர்ந்தமகிழ்மாறன்) "திருவேங்கடத்தானே புகலொன்றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே" என்றுதம் வெறுமையை முன்னிட்டு அவன்திருவடிகளை நிரபேக்ஷாபாயமாகஸ்வீகரித்த ஆழ்வாருடையதிருவடிகளே உனக்கு உபாயமாகஸ்வீகரி. "அகலகில்லேனென்று – பூர்வவாக்யமநுஸந்தித்தார்" என்னும்படி ஸக்ரமமாக ஶரணவரணம் பண்ணுகையாலே, சாத்தின திருமகிழ்மாலையும் ஸம்ருத்த(ஐ)மாயிற்று. ஶரண்யன் * தண்டுழாய் விரைநாறுகண்ணியனைப்போலே, ஶரணாகதரானவிவரும் மகிழ்மாறனார். அதுஶேஷித்வத்யோதகம். இதுஶேஷத்வத்யோதகம். அவர்பூந்துழாயானடியை யடைந்தாப்போலே, இவரும் "மகிழ்மாறன்றாளிணையேயுன் சரணாய் நெஞ்சமேயுள்" என்கிறார்; நெஞ்சே!, வகுளாபி(ஷி)ராமமான திருவடிகளே யுனக்கு உபாயமாகஅத்யவஸித்துப்போரு என்கிறார். (கூ௦)

மூ,—உண்ணிலா வைவருடனிருத்தியிவ்வுலகி
லெண்ணிலா மாயனெனை நலிய—வெண்ணுகின்று
னென்றுநினைந்தோலமிட்டவின்புகழ் சேர்மாறனென
குன்றிவிடுமேபவக்கங்குல். (சுக)

பதவுரை.

| | |
|---|---|
| இவ்வுலகில் | இந்தலோகத்தில் |
| உள்நிலாவு | உள்ளே இருக்கின்ற |
| ஐவருடன் இருத்தி | பஞ்சேந்த்ரியங்களாகிற பகைவருடன் இருக்கச்செய்து |
| எண் இலாமாயன் | அளவற்ற ஆஶ்சர்யகுண சேஷ்டிதங்களையுடைய ஸர்வேஶ்வரன் |
| எனை நலிய | "என்னை வருத்துவதற்கு |
| எண்ணுகின்றான் | நினைக்கின்றான்" |
| என்று நினைந்து | என்றெண்ணி |
| ஓலம் இட்ட | முறையிட்ட |
| இன்புகழ்சேர் | இனிய கீர்த்திபொருந்திய |
| மாறன் என | ஆழ்வார் என்று அநுஸந்திக்கவே |
| பவக்கங்குல் | ஸம்ஸாரமாகிறகாளராத்ரியானது |
| குன்றிவிடும் | நசித்துப்போம். (சுக) |

அவ. — அறுபத்தோராம்பாட்டு. (உண்ணிலாவைவர்) இதில்-இந்த்ரியபயாக்ரோஶத்தை யருளிச்செய்த ஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனே யென்னில்; * உலகமுண்டபெருவாயனிலே-திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஆர்த்திபாவஶராய்ப்பூர்ணப்ரபத்தி பண்ணினவர், "தொடங்கின கார்யம் தலைக்கட்டினல்லது கார்யம் செய்யோம்" என்றிருக்கும் நிரங்குஶஸ்வதந்த்ரனை வீஶ்வரன் பழையபடியே தம்மைஸம்ஸாரத்திலே வைக்கக்கண்டு, ஸம்ஸாரமாகிற சிறைக்கூடத்திலே புண்யபாபங்களாகிற விருவிலங்கையிட்டு இந்த்ரியங்களாகிற ப(ஶ)டர் கையிலே "கண்பாராமல் நலியுங்கோள்" என்றுகாட்டிக்கொடுத்து, நம்மெளிவுகண்டு சிரித்துக்கொண்டு திருநாட்டிலேதானும் நித்ய

ஸூரிகளுமாக விருக்கிறனென்றநுஸந்தித்து, தம்முடைய வார்த்த்யதிஶயத்தையும் ரக்ஷகத்வோபயோகியானவவன் குணங்களையும் அவன் முகத்தைப் பார்த்துச் சொல்லி நின்றுகொண்டு, கேட்டார்க்குத்தரிப்பரிதாம்படி கூப்பிடுகிற * உண்ணிலாவிய விலர்த்தத்தை "உண்ணிலாவைவர்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா. — ( இவ்வுலகில் - உண்ணிலாவைவருடனிருத்தி ) *இருள்தருமாஞாலமான ஸம்ஸாரத்திலே ஆந்தரஶத்ருக்களாய்வர்த்திக்கிறவைந்து இந்த்ரியங்களோடே கூடவிருக்கப்பண்ணி, "ஐம்புலனிவை மண்ணுளென்னைப்பெற்றாலென்செய்யா மற்று நீயும் விட்டால்" என்றத்தைப்பின் சென்றபடி. (எண்ணிலாமாயன் - இவ்வுலகில் - உண்ணிலாவைவருடனிருத்தி - எனைநலியவெண்ணுகின்றான்) அஸங்க்யாதமானவாஶ்சர்ய ஶக்தியுக்தனான ஸர்வேஶ்வரன், தமோபூ(யிஷ்ட)தமான விவ்விபூதியிலே, அஹமர்த்தமானவாத்மாவை அறிவழியப்பண்ணுமதான வைந்துஇந்த்ரியங்களுமாத்மாநு(ப)பந்தியென்னலாம்படி பொருந்தியிருக்கும்படி யாக்கிதுர்ப்பலனானவென்னை, அவற்றைக்கொண்டு விஷயங்களிலே தள்ளிபா(வாயி)திக்கைக்குக் கார்யவிசாரம் பண்ணுகின்றான்.

அதாவது- "உண்ணிலாவியவைவரால் குமைதீற்றியென்னையுன் பாதபங்கயம் நண்ணிலாவகையேநலிவானின்னமெண்ணுகின்றா யெண்ணிலாப்பெருமாயனே" என்றும் "ஓரைந்திவைபெய்திராப்பகல் மோதுவித்திட்டு" என்றும், "ஐவரால் வினையேனை மோதுவித்து" என்றும், "ஓரைவரைக்காட்டி" என்றும், "ஐவரைநேர்மருங்குடைத்தாவடைத்து" என்றும், "ஓரைவர்யாவரையும் மயக்கநீவைத்த" என்றும் "சுமடுதந்தாய்" என்றும் - அவனிப்படி ஐவரைக்கொண்டு செய்வித்தானென்று அவன்மேலே பழியிட்டபடியென்கை. (எண்ணிலாமாயனெனை நலியவெண்ணுகின்றானென்று நினைந்து) ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாயிருக்கிற வீஶ்வரன், அஜ்ஞனுமஶக்தனுமாய் ஶரணம்புகுந்தவென்னை, நலிந்ததுபோராமலின்னம் நலியவெண்ணுகின்றானென்றெண்ணி. "நலிவானின்னமெண்ணுகின்றா யெண்ணிலாப்பெருமாயனே" என்றத்தைக்காட்டுகிறது.

(கலியனிவனென்றுகின்றுனென்று நினைந்தோலமிட்ட) பரமத(ஃ)யாவானவன் கிர்த(ஃ)யரைப்போலே த(ஃ)மிப்பிக்கயத்நம் பண்ணுகின்றுனென்றெண்ணியோலமிட்ட. "எண்ணிலாப்பெருமாயனே" "கார்முகில்வண்ணனே" "சோதிநீண்முடியாய்," "வினையேன் வினைதீர்மருந்தே" "விண்ணுளார் பெருமானேயோ" "பத்தியினுள்ளாய் பரமீசனே" "கொடியேன் பருகின்னமுதே" "என்னம்மான்கண்ணு," "முன்பரவைகடைந்தமுதங்கொண்டமூர்த்தியோ" என்றிப்படி-இந்த்ரியப(ஃ)யத்தாலே, ரக்ஷகத்வாதி குணங்களுக்கு வாசகமான வன்திருநாமங்களைச்சொல்லி; (க) "ஸாவாஜ்ஞாராவணவாயகா..." - ஸாகாம்ருகாராவண ஸாயகார்த்தாஃ" என்றும், (உ) "ஹாராமஸத்யவ்ரதஜீவவ்ராஹோ ஹாபூர்ணசந்த்ர ப்ரதிமாநவக்த்ர" - ஹாராமஸத்யவ்ரத தீர்க்கபாஹோ ஹாபூர்ண சந்த்ர ப்ரதிமாநவக்த்ர" என்றும், ஸாகாம்ருகங்களைப்போலே இவரும் *தண்வாளிக்குடைந்தடைந்தும், (ங) "ஸ்ரீமிஸிம்ஹ... மிவாவ்ருதா - ம்ருகீஸிம்ஹைரிவாவ்ருதா" என்னும்படி ம்ருகஸாபாக்ஷியானவள் ராக்ஷஸிகள்பக்கல் அஸஹ்யமாய் அவர்குளிர்ந்த முகத்திலே விழிக்கவாசைப்பட்டுக் கூப்பிட்டாப்போலவும் கூப்பிட்டபடி.

(இன்புகழ்சேர்) காடடையவிந்த்ரிய சிங்கராய் தத்லாப(ஃ)த்தாலே கூப்பிட. இவர் இந்த்ரியபராக்ரோஸப்பண்ணுகையாயிற்று-இவர்க்கு இன்புகழ் சேர்ந்தது. (ச) "காமார்த்தாவஸாவிந ஷ்டாஸா - காமார்த்தாகல்வபிகப்ரமத்தா" என்னக்கடவதிறே. (ரு) "பாதமகலகில்லாத தம்மையகற்றுகைக்கின் நடுவேயிருக்கக் கண்டு, கலிவான்' 'சுமடுதந்தாய்' 'ஓ' என்று - ஸாதநபலமான ஆக்ரோஸத்தோடே பழியிட்டு" என்றிறே அழகியமணவாளப் பெருமாள் நாயனருமருளிச்செய்தது. (இன்புகழ்சேர்மாறனென) கேட்கைக்கினிதாய் ஸ்லாக்யமான யஸஸ்ஸையுடைய வாழ்வாரென்றநுஸந்திக்க. (குன்றிவிடுமே பவக்கங்குல்) இவ்வுக்திமாத்ரத்தாலே ஸம்ஸாரமாகிறகாளராத்ரி நசித்துவிடும். இதுநிஸ்சயம். குன்றுதல் - குறைதல். ஆழ்வாரைப்போலே "அமுதங்கொண்டமூர்த்தியோ" என்று கூப்பிடுகையின்றிக்கே, அவர்திருநாமத்தைச் சொல்லவே, * விடியாவெங்நரகான ஸம்ஸாரத்துக்கு விடிவு பிறக்கும். (௬௧)

(க) ரா யு-௫௬-௪௫. (உ) ரா ஸு-௨௮-௪௬. (ங) ரா- (ச) (ரு) ஆ-ஹ்ரு-

மூ.—கங்குல்பகலரதி கைவிஞ்சிமோகமுற
வங்கதனைக்கண்டோ ரரங்கரைப்பார்த்து—இங்கிவள்பா
லென்செய நீரெண்ணுகின்ற தென்னுநிலைசேர்மாற
னஞ்சொலுற நெஞ்சுவெள்ளையாம். (௬௨)

பதவுரை.

| | |
|---|---|
| கங்குல் பகல் | இரவிலும் பகலிலும் |
| அரதிகைவிஞ்சி | ஆற்றாமை அதிகமாகி |
| மோகம்உற | மோஹமடைய, |
| அங்கு அதனைக்கண்டு | அவ்விடத்தில் அந்த அவஸ்தையைக்கண்டு |
| ஓர் அரங்கரைப்பார்த்து | ஸ்ரீரங்கநாதனைநோக்கி |
| இங்கு இவள்பால் | "இவ்விடத்தில் இவள்விஷயத்தில் |
| என்செயநீர் எண்ணுகின்றது | யாதுசெய்யநீர்நினைத்திருக்கிறது?" |
| என்னும் நிலைசேர் | என்று தாய் வினவும்படியான நிலைமையை அடைந்த |
| மாறன் | ஆழ்வாருடைய |
| அஞ்சொல்உற | ஸ்ரீஸூக்தியை அநுஸந்திக்க |
| நெஞ்சு வெள்ளையாம் | மநஸ்ஸு பரிசுத்தமாம். (௬௨) |

அவ.—அறுபத்திரண்டாம்பாட்டு. (கங்குல்பகல்) இதில் - அரதியாயலற்றினபடியைப் பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். அதாவது - * உண்ணிலாவியிலார்த்தராய்க் கூப்பிடுகிற தம்மைப்பரிஹரிக்கும்விரகுசிந்தித்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள் நினைவையறிந்து அவர்பரிஹரிக்குமளவு மாறியிருக்க வேண்டியிருக்க, அவர் தம்மை யுபேக்ஷித்தாராகக் கொண்டு கலங்கிமோஹித்து இவர்கிடக்க ; பார்ஶ்வஸ்த்தரானபரிவர் பெரியபெருமாளுடைய அஶரண்ய ஶரண்யத்வாதி குணங்களைச்சொல்லிக்கொண்டு, இவர்திறத்தில் நீர் நினைத்திருக்கிறதென்னென்று கேட்கிறபடியை, பெரியபெருமாளோடே கலந்துபிரிந்தாளொருபிராட்டி யாற்றாமையாலே யழுவது தொழுவது விழுவதெழுவதலற்றுவதாய்ப்படுகிற † வரதியைத் திருத்தாயார், அவர்

† வ்யாதியை.

திருமுகத்தைப் பார்த்துச்சொல்லி ப்ரலாபிக்கிற பாசுரத்தாலே யருளிச்செய்கிற * கங்குலும் பகலிலர்த்தத்தை "கங்குல்பகலரதி" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(கங்குல்பக லரதிசைவிஞ்சிமோகமுற) அதாவது - (க) "ஹ்ரஸ்வவிலஜ்ஞா - மதாவஸாநகேவ - ப்ருஸம்விஸம்ஜ்ஞா - கதாஸாகல்பேவ" என்றும், (க) "விசேஷணஸம்ஜ்ஞாம் ப்ரதிலப்யசைவ - சிரேணஸம்ஜ்ஞாம் ப்ரதிலப்யசைவ" என்றும், (உ) "ராமம்ராக்ஷாநய நஸௌஹ்ருதீ ஹாஷிதாவிதா - ராமம்ரக்தாந்தநயநம்பஸ்யந்தீ ஸாதுக்கிதா" என்றும் சொல்லுகிறபடியே, "கங்குலும் பகலுங்கண்டு யிலறியாள்." "இட்டகாலிட்டகைகளாயிருக்கும்," "சிந்திக்குந்திசைக்கும்" இத்யாதிப்படியே திவாராத்ர விபாக(ஹாம)மறவழுவது தொழுவது மோஹிப்பது ப்ரலாபிப்பது அடைவுகெடப்பேசுவது நெடுமூச்செறிவது அதுதானும் மாட்டா தொழிவது ஸ்தப்தை(யெ)யாயிருப்பதா யிப்படி அரதிவிஞ்சி மோஹத்தை ப்ராப்தையாக. (அங்கதனைக்கண்டு)தன் பெண்பிள்ளை யிடத்திலே அத்தசையைக்கண்டு, (ஒராங்கரைப்பார்த்து) ஆர்த்தி ஹரதையிலே சிந்தித்துப்போருகிற வத்விதீயரான பெரியபெருமாளைப்பார்த்து.

(இங்கிவள்பால்) இத்தசையில் இவளிடையாட்டமாக. (என் செயநீரெண்ணுகின்றது) ஆஸ்ரிதரக்ஷணசிந்தை பண்ணுகிறதேவர் ரக்ஷாபேக்ஷயுடையவிவள் திறத்து எதுதிருவுள்ளம்பற்றியிருக்கிறது, எடுக்கவோ! முடிக்கவோ! ஒன்றும் தெரிகிறதில்லை. எல்லாதசையிலும் இவள் பேற்றுக்கு (ங) "உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்" என்கிறபடியே அத்தலையில் நினைவேயிறேயுபாயம், இத்தலையிலே யுள்ளதெல்லாமாற்றாமையிலே முதலிடுமத்தனை. "இவள் திறத்தென் செய்கின்றாயே," "இவள் திறத்தென் செய்திட்டாயே," இவள்திறத்தென சிந்தித்தாயே" என்றதைப் பின்சென்றபடி. (என்செயநீரெண்ணுகின்றதென்று சொல்லுகிறமாறன்) த்வராஜ்ஞாநத்தாலே தலைமகளென்று பேரையுடைய தாம்மோஹித்துக் கிடக்க, "இந்த மோஹாதிகளுமுபாயமாகாமல் அத்தலையில் நினைவேஸாதநம்" என்னுமத்யவஸாயஜ்ஞாநத்தாலே தாயாரென்று

(க) ரா-ஸு-கஉ-அ; (உ) ரா-ஸு-உ௯-௩௪, (ங) தி-மொ-உ-௪-க,

பேரையுடையராய்த்தெளிந்திருந்து தெரிவிக்கும் தசையையடைந்த வாழ்வாருடைய, (அஞ்சொலுற) அழகிதான வித்திருவாய்மொழியை யாதரித்தநுஸந்திக்க. (நெஞ்சுவெள்ளையாம்) உபாயாந்தர விஷயமான மநோமாலிந்யம் நிவ்ருத்தமாய், தததேகோபாயத்வாநுஸந்தாநத்தாலே மநஶ்ஶுத்திபிறக்கும்.

§ (கங்குல் பகலரதியித்யாதி, வெள்ளையாம்) உபாயாந்தர விஷயமாக, ஓரரங்கரைப்பார்த்து - ஒருகிறவரங்கரைப்பார்த்து, அதாவது - * ‡ உலகமுண்டபெருவாயனிலே, "அகலகில்லேன்" என்று - பூர்ணப்ரபத்திபண்ணினவிடத்திலும் பலித்ததில்லையென்று, * உண்ணிலாவியிலே, "அப்பனே என்னையாள்வானே" என்று - நின்றவிடத்திலேநிற்கவொட்டாமல் கூப்பிட, * திருவேங்கடத்தென்னானை யென்னப்பன், (க) "அரங்கநகர்மேயவப்பனுய், (உ) "மந்திபாய்" இத்யாதிப்படியே, * பைத்தபாம்பணையானுனவன் * அரங்கத்தரவினணையானுய் "பைகொள்பாம்பணையாயிவள் திறத்தருளாய்," "இவள்திறத்தென் சிந்தித்தாய்" என்று கேட்கும்படி * உறங்குவான்போல்யோகு செய்து * யோகநித்திரை சிந்தைசெய்து இவர் ரக்ஷணசிந்தைபண்ணிக்கொண்டா றலைக்கக்கிடக்கிறவவரைப் பார்த்தென்றபடி.

"தொடங்கினகார்யம் தலைக்கட்டுந்தனையும் பற்றுதுபோலேயிருந்தது இவளாற்றாமை; இதுக்கென்செய்வோம்" என்று அவரராயப்புக்கார். அங்கு "அலர்மேல் மங்கையுறைமார்பா" என்றத்தை - இங்கு "என்றிருமகள் சேர்மார்பனே" என்றார்; "வண்ணமருள்கொளணிமேகவண்ணா" என்றத்தை - "முகில்வண்ணன்" என்றார்; "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்றத்தை "அடியையடைந்தருள் சூடியுய்ந்தவன்" என்றார், (ங) "துளங்குநீண்முடி" என்றுதொடங்கி (ச) "ஆழிவண்ணநின்னடியிணையடைந்தேன்" என்றிறே ஐக்யமாகவருளிச்செய்தது. (ரு) * தென்னியோங்கு தண்திருவேங்கடமுடையானேயிறே * பொன்னிசூழ் திருவரங்கனுக் கண்வளர்ந்தருளுகிறது. இவர் ரக்ஷணசிந்தைக்குப் பாங்கானதேசம்பாற்கடல் அரங்கம்போலே.) (கூஉ)

---

(க) அமல கூ. (உ) அமல-ந. (ங) தி-மொ-ரு-அ-கூ.
(ச) தி-மொ-ரு-அ-கூ. (ரு) பெரி-தி-ரு-ச-க.
‡ உலகத்திலகத்திலே. § சூண்டவிதம் க்வாசித்கம்.

மூ.—வெள்ளியநாமங்கேட்டு விட்டகன்றபின்மோகம்
தெள்ளியமால்தென்திருப்பேர்சென்றுபுக—உள்ளமங்கே
பற்றிநின்ற தன்மை†பகரும் சடகோபற்கு
அற்றவர்கள்தாமழியார். (௬௩)

பதவுரை.

| | |
|---|---|
| வெள்ளியநாமம் | போக்யமான பகவந்நாமங்களை |
| கேட்டு | தாய்சொல்லக்கேட்டு |
| மோகம்விட்டு அகன்றபின் | மோஹம்விட்டு நீங்கினபின்பு |
| தெள்ளியமால் | விவேகியானஸர்வேஶ்வரன் (எழுந்தருளியிருக்கிற) |
| தென்திருப்பேர் | தென்திருப்பேர்நகரில் |
| சென்றுபுக | போய்ப்ரவேசிக்க, |
| உள்ளம் அங்கேபற்றிநின்ற தன்மைபகரும் | தமது திருவுள்ளம் அவ்விடத்திலே ஊன்றிநின்றமையை அருளிச்செய்த |
| சடகோபற்கு | ஆழ்வார்விஷயத்தில் |
| அற்றவர்கள்தாம் | அநந்யார்ஹரானவர்கள் |
| ஆழியார் | கம்பீரஹ்ருதயர்கள். (௬௩) |

அவ.---அறுபத்துமூன்றாம்பாட்டு. (வெள்ளியநாமங்கேட்டு) இதில் - தென்திருப்பேரிலே அபஹ்ருதசித்தரானபடியைப் பேசுகிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்.

அதெங்ஙனேயென்னில்; கீழ் - தம்தசைதாம் வாய்விட்டுப்பேசமாட்டாதே மோஹித்துக்கிடந்தவர், பெரியபெருமாளுடைய திருநாமப்ரஸங்கமே ஶிஶிரோபசாரமாக அத்தாலே யாஶ்வஸ்தராயுணர்ந்து, தத்வைலக்ஷண்யாநுஸந்தாநத்தாலே அபஹ்ருதசித்தராய், பெரியபெருமாளெழுந்தருளி யிருக்கிறதென் திருப்பேரிலே போவதாகப்பதறிப்புறப்பட "இப்படிப்பதறுகைநம் ஸ்வரூபத்துக்குச்சேராது, அவர்தாமே வரக்கண்டுநம் ஶேஷத்வத்தை நோக்கிக்கொண்டு பாடாற்றியிருக்கவேண்டாவோ"? என்று பரிஸரவர்த்திகள்நிவாரிக்க, "ஸர்வதா நான் அங்கேபோய்ச்சேருகை தவிரேன்" என்று தம்துணிவை அவர்களுக்குச் சொல்லுகிறபடி.

† (பா) பகர்.

யை அந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிற * வெள்ளைச்சுரிசங்கி லர்த்தத்தை "வெள்ளியநாமம்" இத்யாதியாலே யருளிச்செய் கிறாரென்கை.

வ்யா.—(வெள்ளியநாமங்கேட்டு - மோகம் - விட்டகன்றபின்) பாவநத்வபோக்யத்வ தா(யா)ரகத்வாதி குணங்களையுடைய,முகில் வண்ணரான பெரியபெருமாளுடைய திருநாமங்களைப் பாட்டுத் தோறும் திருத்தாயார் சொல்லக்கேட்டு, கீழில் மோஹமானது விட்டுப்போனபின்பு,(தெள்ளியமால் தென்திருப்பேர் சென்றுபுக) ஆஶ்ரிதரக்ஷணத்திலே விவேகஜ்ஞனான ஸர்வேஶ்வரன் வர்த்திக் கிறதென்திருப்பேரிலே, "தென் திருப்பேரையிற்சேர்வன்நானே" என்றும் "திருப்பேரையிற்சேர்வன்சென்றே" என்றும் சென்று புகுவதாகவொருப்பட, இவ்வதிப்ரவ்ருத்தியைத் தாய்மாரும் தோழிமாரும் தடஸ்தராயுள்ளாருங்கண்டு, "இப்படி ஸாஹஸத்தி லே யொருப்படுகையுக்தமன்று" என்றுநிஷேதிக்க, (உள்ளமங்கே பற்றி நின்றதன்மை பகரும்) திருவுள்ளம் தம்மையொழியவும் *முந்துற்றநெஞ்சாய் விற்றிருந்த விவ்விஷயத்திலே மறுபாடுருவ வூன்றிநின்றஸ்வபாவத்தைநிஷேதிப்பார்க்கருளிச்செய்யுமாழ்வார்.

அதாவது-"நானக்கருங்குழல் தோழிமீர்காளன்னையர் காளய ற்சேரியீர்காள் நானித்தனி நெஞ்சங்காக்கமாட்டேன்" என்று தொடங்கி "கண்ணன் செங்கனிவாயின்திறத்ததுவே" என்றும், "செங்கனிவாயின்திறத்ததாயும்" என்றுதொடங்கி "நங்கள் பிரா னுக்கென்னெஞ்சந்தோழீநாணும் நிறையுமிழந்ததுவே" என்றும், "இழந்தவெம்மாமைத் திறத்துப்போன வென்னெஞ்சினருமங்கே யொழிந்தார்" என்றுதொடங்கி "அன்னையர்காளென்னையென் முனிந்தே" என்றும், "கண்ணபிரானுக்கென் பெண்மைதோற் றேன்-காலம்பெறவென்னைக் காட்டுமினே" என்றும், "காலம்பெற வென்னைக்காட்டுமின்கள்" "என்றும், "பேரையிற்கே புக்கென் னெஞ்சம் நாடிப்பேர்த்து வரவெங்கும் காணமாட்டேன் – என் னெஞ்சங்கண்டதுவே கண்டேனே" என்றும் "நெஞ்சு நிறைவு மெனக்கிங்கில்லை"என்றும்,"நிகரில் முகில்வண்ணன் நேமியானென் னெஞ்சங் கவர்ந்தெனையூழியானே"என்றுமிப்படித் தாமங்கே பத்த

மூ.—ஆழிவண்ணன் தன்விசயமானவை முற்றுங்காட்டி
வாழிதனுலென்று மகிழ்ந்திருக்க—ஊழிலவை
தன்னையின்றுபோற்கண்டு தானுரைத்தமாறன்சொல்
பன்னுவரே நல்லது கற்பார். (கூச)

---

பா(வஸஹா)வரானபடியை யருளிச்செய்தவையென்கை. (க) "அஸ்யா தேவ்யா மநஸ்தஸ்மிந் - அஸ்யாதேவ்யாமநஸ்தஸ்மிந்" என்னக் கடவதிறே.

அன்றிக்கே, "வெள்ளியநாமங்கேட்டுவிட்டகன்றபின் மோகம் - தெள்ளியமால் தென்திருப்பேர்சென்று புகுந்துள்ள மங்கே பற்றிநின்றதன்மை பகரும்" என்று ஏகவாக்யமாக யோஜிக்கவுமாம். (உள்ளமங்கே பற்றிநின்றதன்மைபகரும் சடகோபற்கு அற்றவர்கள் தாமாழியார்) இத்திருவாய்மொழிமுகேந தந்திருவுள்ளம் திருப்பேரிலிருப்பிலே அபஹ்ருதமானபடியை யருளிச்செய்த வாழ்வார் விஷயத்திலே, (உ) "தேவுமற்றறியேன்" என்றவர்கள். (தாம்) இப்படியான பெருமையை யுடையதாங்கள். (ஆழியார்) "அவரடிமைத்திறத்தாழியார்" என்னுமவர்களிலும் இவர்களே(ங) * அகாதபகவத்பக்திஸிந்தவே - அகாதபகவத்பக்தி ஸிந்துவான நாதமுனிகளைப்போலே (ச) * மிககவேதியர் வேதத்தினுட்பொருளையறியவல்லரான அகாத(ய)ஜ்ஞாந ப்ரேமங்களை யுடையார்.

---

பதவுரை.

| | |
|---|---|
| ஆழிவண்ணன் | கடல்வண்ணனை எம்பெருமான் |
| தன்விசயமானவை முற்றும் காட்டி | தன் விஜயபரம்பரைகளை முழுதுங் காட்டி |
| இதனால் வாழ் என்று | இதனால் வாழ்ந்துபோமென்று (ஆழ்வாரைநோக்கி அருளிச்செய்து) |
| மகிழ்ந்து நிற்க | ஸந்தோஷித்திருக்க, |
| ஊழிலவை தன்னை | பழையனவாய்க்கழிந்த அபதாநங்களை |

---

(க) ரா-ஸு-கு-டுஉ. (உ) கண்ணி-உ. (ங) ஸ்தோ-ர. (ச) கண்ணி-கூ.

| | |
|---|---|
| இன்று போல்கண்டு | இன்றுநடந்தவைபோல் ஸாக்ஷாத் கரித்து |
| தான் உரைத்த | தாம் அநுபவித்ததற்கும் போக்கு வீடாக அருளிச்செய்த |
| மாறன்சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீ ஸூக்தியை |
| பன்னுவரே | அநுஸந்திப்பவர்களே |
| நல்லதுகற்பார் | விலக்ஷணஶப்தங்களை அப்யஸிப்பவர்களாவர். (சுச) |

அவ.—அறுபத்துநாலாம்பாட்டு. (ஆழிவண்ணன்) இதில் - விஜயபரம்பரைகளைப்பேசினபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனே யென்னில்; "மண்டிணிஞாலமுமேழ்கடலும் நீள் விசும்புங்கழியப்பெரிதால்" என்று பக்த்யதிஶயத்தாலே அவஸந்நரானவிவர் தளர்த்தியை மாற்றித் தரிப்பிக்கைக்கு "பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்றபிரான்" என்று ப்ரஸ்துதமானவவதார சரிதமாயுள்ள, த்ரைவிக்ரமணந்தொடங்கி கோவர்த்தநோத்தரணபர்யந்தமான விஜயபரம்பரையைப் பத்தும்பத்தாக வவன் காட்டிக்கொடுக்க, அத்தை யநுபவித்து ஹ்ருஷ்டராகிற *ஆழியெழச்சங்கிலர்த்தத்தை - "ஆழிவண்ணன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-( ஆழிவண்ணன் தன்விசயமானவை முற்றுங்காட்டி வாழிதனுலென்று மகிழ்ந்துநிற்க) அதாவது - கீழ் (ரு) "ஆழிநீர் வண்ணனையச்சுதனை" என்று - ஶ்ரமஹரமானவடிவை யுடையஸர்வேஶ்வரன், தன் விஜயபரம்பரைகளான ஸர்வசேஷ்டிதங்களையும் இவர்க்கு விஷயமாம்படி காட்டி, ஏவம்விதமான விவற்றாலே ஹ்ருஷ்டராய் வாழுமென்றுசொல்லி, அவ்வாகாரங்களைக்காட்டிக்கொடுநிற்க.

(க) "[illegible] - சிரகிர்வ்ருத்தமப்யேதத்ப்ரத்யக்ஷமிவதர்ஶிதம்" என்னும்படியே "ஆழியெழ" என்றுதொடங்கி 'அப்பனூழியெழவுலகங்கொண்டவாறே' என்று-த்ரைவிக்ரமணத்தையும்; "ஆறுமலைக்கெதிர்ந்தோடுமொலி" என்றுதொடங்கி "அப்பன் சாறுபடவமுதங்கொண்டநான்றே"

(க) ரா-பா-ச-கவ.

என்று - அம்ருதமதநவைசித்ரியையும்; "நான்றிலவேழ்மண்ணும்" என்றுதொடங்கி "அப்பனூன்றியிடந்தெயிற்றிற்கொண்ட நாளே" என்று - பூம்யுத்த(ஐ)ரண ஸக்தியையும்; "நாளுமெழு" என்று தொடங்கி 'அப்பனாழியெழுவுலகமுண்டவூணே' என்று - ஜகந்நிக(ம)ரணத்தையும்; "ஊனுடைமல்லர் ததர்ந்தவொலி" என்றுதொடங்கி "அப்பன் காணுடைப்பாரதங்கையறைபோழ்தே" என்று - பாரதஸமராத்புதத்வத்தையும்; "போழ்துமெலிந்தபுன்செக்கரில்" என்றுதொடங்கி "அப்பனூழ்தியர் செய்தசுரரைக்கொல்லுமாறே" என்று - ஹிரண்யவிதாரண க்ரமத்தையும்; "மாறுநிரைத்திரைக்கும் சரங்கள்" என்றுதொடங்கி "அப்பன் நீறுபடவிலங்கை செற்ற நேரே" என்று - ராவணநிராகரணத்தையும்; "நேர்சரிந்தான்" என்றுதொடங்கி "அப்பன் நேர்சரிவாணன் திண்டோள் கொண்டவன்றே" என்று - பாணபாஹுவநச்சேதநசேஷ்டிதத்தையும்; "அன்று மண்ணீரெரிகால்" என்றுதொடங்கி "அப்பனன்று முதலுலகம் செய்ததுமே" என்று ஜகத்ஸமஷ்டி ஸ்ருஷ்டியையும்; "மேய்நிரை கீழ் புக" என்றுதொடங்கி "அப்பன் தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே" என்று - கோவர்த்தநோத்த(ஐ)ரணஸாமர்த்யத்தையுங்கண்டநுபவித்து; "குன்றமெடுத்தபிரானடியாரொடு மொன்றிநின்றசடகோபன்" என்றுமகிழ்ந்துகால் த(ய)ரித்து நின்றாராயிற்று.

(க) "நஹ்யாஜீவஸ்ஸுவிஸம்ப்ரேந - நந்தாமிபஸ்யந்நபிதர்ஸநேந" என்னக்கடவதிறே. (ஊழிலவைதன்னை) பழையதாய்க் கழிந்தவந்தவதாரங்களை. (இன்றுபோல்கண்டு) ப்ரத்யக்ஷமாக இன்றுபோலே யநுபவித்து. (தானுரைத்தமாறன்சொல்) தாமநுபவத்துக்குப் போக்குவிட்டருளிச்செய்த வாழ்வார் திவ்யஸூக்தியை. (பன்னுவரே நல்லதுகற்பார்) ஆராய்ந்தநுஸந்திக்குமவர்களே, தங்கள் ப்ரியஹிதங்களுக்குறுப்பாக விலக்ஷண ஸப்தங்களை யப்யஸிப்பாராவர். § தங்கள் ப்ரியஹிதங்களுக்குறுப்பாக ஆழ்வார் திருவடிகளே சரணமென்றறிந்தநுஸந்திக்குமவர்களே, எல்லாமறிந்தநுஸந்தித்தவர்களென்றதாயிற்று. (கூச)

(க) ரா-அ-கஉ-கரு.

§ இது "மாறன்தாள் பன்னுவரே" என்றபடத்தைப்பற்ற.

மூ.—கற்றோர் கருதும் விசயங்களுக்கெல்லாம்
பற்றும்விபவகுணப்பண்புகளை—உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர் தம்மிழவை வாய்ந்துரைத்தமாறன்சொல்
பண்ணிலினிதான தமிழ்ப்பா. (கூரு)

பதவுரை.

| | |
|---|---|
| கற்றோர் | ஸகலஶாஸ்த்ர தாத்பர்யங்களையுங் கற்றவர்களான தஶரதவஸுதேவாதிகள் |
| கருதும் | ஆதரிக்கிற |
| விசயங்களுக்கு எல்லாம் | விஜயங்களுக்கெல்லாம் |
| பற்று ஆம் | ஆஶ்ரயமாகிய |
| விபவகுணப்பண்புகளை | விபவாவதாரகுண ஸ்வபாவங்களை |
| உற்று உணர்ந்து | ஆராய்ந்தறிந்து |
| மண்ணில் உள்ளோர் தம் இழவை | பூமியிலுள்ளவர்கள் பகவதநுபவத்தை இழக்கும்படியை |
| வாய்ந்து உரைத்த | பொருந்தி அருளிச்செய்த |
| மாறன்சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியானது |
| பண்ணில் இனிதான | பண்ணிசையில் பரமபோக்யமான |
| தமிழ்ப்பா | த்ராவிட ப்ரஹ்மஸம்ஹிதை. (கூரு) |

அவ.—(கற்றோர் கருதும்) இதில் - "விஜயங்களுக்கடியான விபவங்களையிழப்பதே" என்று வெறுத்தபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதாவது - கீழ்ச்சொன்ன விஜயபரம்பரைக்கடியானவிபவகுணங்களை யநுஸந்தித்து "படுக்கைக்கீழே தனம்(புதை)ந்கிடக்கக்கால்வீங்கிச்சாவாரைப்போலே, இம்மஹாநிதியுண்டாயிருக்கவிவர்களித்தையிழந்து அநர்த்தப்படுவதே" என்றுஸம்ஸாரிகளிழவுக்குவெறுக்கிற * கற்பாரிராமபிரானிலர்த்தத்தை "கற்றோர் கருதும்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(கற்றோர் கருதும் விசயங்களுக்கெல்லாம் பற்றும் விபவகுணப்பண்புகளை யுற்றுணர்ந்து) அதாவது - ஸகலஶாஸ்த்ர தாத்பர்யங்களைக்கற்ற சக்ரவர்த்தி, ஶ்ரீவஸுதேவா, ஶ்ரீஜாம்பவான்

மஹாராஜர், திருவடி முதலாயுள்ள அவதார விஜயஹர்ஷிகளானவர்கள் ஆதரிக்கும் விஜயங்களுக்கெல்லாமாஶ்ரயமாயுள்ள அவதாரமான விபவகுணஸ்வபாவங்களை; அவதாரந்தோறும் ததநுகுணமாக குணங்களும் பேதித்திறே யிருப்பது; அவைதானும் ஆஶ்ரித ரக்ஷணத்துக்குறுப்பாகையாலே; அவற்றின் ஸ்வபாவத்தை யுற்றுணர்ந்து- அவற்றின்படியை மேலெழவன்றிக்கே அந்தரங்கமாக வாராய்ந்து. அதாவது - (௧) "ராமோ ராமோ ராம இதி - ராமோ ராமோ ராமஇதி" என்றும், 'கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ" என்றும் நடந்தமை கேட்டும் - நாட்டிற் பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ" என்றும், 'தன்மையறிவாரையறிந்தும் - கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" என்றும், "தோற்றியசூழல்கள்சிந்தித்து தன்மையறிபவர் தாமவற்காளன்றியாவரோ" என்றும், "கேழற்றிரு வுருவாயிற்றுக் கேட்டுமுணர்ந்தவர் - சூழல்கள் சிந்திக்கில் மாயன்கழலன்றிச் சூழ்வரோ" என்றும், 'கோட்டங்கை வாமனனாய்ச் செய்தகூத்துக்கள் கண்டும் - கேட்டுமுணர்ந்தவர் கேசவற்காளன்றியாவரோ" என்றும், "கொண்டங்குத்தன்னொடுங்கொண்டுடன் சென்றதுணர்ந்தும் - கண்டுந்தெளிந்தும் கற்றார் கண்ணற்காளன்றியாவரோ" என்றும், 'இரணியனாகத்தை மல்லலரியுருவாய்ச்செய்த மாயமறிந்தும்-செல்லவுணர்ந்தவர் செல்வன்றன்சீரன்றிக் கற்பரோ" என்றும், 'நடந்த நல்வார்த்தை யறிந்தும் - மாயவற்காளன்றியாவரோ" என்றும், 'அவன் செய்யும் சேமத்தை யெண்ணித்தெளிவுற்று- மாயவற்காளன்றியாவரோ" என்றுமிப்படிப்பத்தும்பத்தாக வாராய்ந்தென்கை. (மண்ணிலுள்ளோர் தம்மிழவை) "அவன் குணமிப்படியா யிருக்கவித்தை யிழப்பதே" என்றுபூமியிலுண்டானவர்கள் பகவத்குணாநுபவாலாபத்தை. (வாய்ந்துரைத்த மாறன்சொல்) ஸாலபராய்க்கிட்டி நின்று அந்தரங்கமாக வருளிச்செய்தவாழ்வார் திவ்யஸூக்தியானது. (பண்ணிலினிதான தமிழ்ப்பா) நட்டராகத்தோடேகூடி, த்ராவிடரூபமான சந்தஸ்ஸு. இப்படி லாகத்தோடேகூடின விதுவுமொரு சந்தஸ்ஸே யென்றீடுபாடாயிருக்கிறது. (௯௫)

---

(௧) ரா-யு-௧௩௧-௯௩,

மூ.—பாமருவுவேதம் பகர்மால்குணங்களுடன்
ஆமழகுவேண்டப்பாடாமவற்றைத்—தூமனத்தால்
நண்ணியவனைக்காண நன்குருகிக்கூப்பிட்ட
வண்ணலை நண்ணரேழையர். (௬௬

பதவுரை.

| | |
|---|---|
| பாமருவு வேதம் பகர் | சந்தஸ்ஸுக்களோடு கூடின வேதங்களால் ப்ரதிபாதிக்கப்படுகிற |
| மால்குணங்களுடன் | பவ்யமான கல்யாணகுணங்களோடேகூடி |
| ஆம் அழகு வேண்டப்பாடாம் அவற்றை | நன்றான அழகு மேன்மையாகிற‡ அவற்றை |
| தூமனத்தால் நண்ணி | பரிஶுத்தாந்த: கரண ஸாக்ஷாத்காரத்தாலேகிட்டி அநுபவித்து |
| அவனைக்காண | மேற்சொன்ன குணவிஶிஷ்டனானவனை ப்ரத்யக்ஷமாகக்கிட்டி அநுபவிக்க இச்சித்து |
| நன்கு உருகி | நன்றாயுருகி |
| கூப்பிட்ட | ஓ என்று கூவின |
| அண்ணலை | ஸ்வாமியான ஆழ்வாரை |
| நண்ணார் | ஆஶ்ரயியாதவர்கள் |
| ஏழையர் | ஏழைகளாவர். (௬௬) |

அவ.—அறுபத்தாறாம்பாட்டு. (பாமருவு) இதில்-எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லிக்கூப்பிட்ட பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; * சற்பாரில்,-நிரவதிகபோக்யங்களான கல்யாண குணங்களையுடைய வெம்பெருமானுடைய ப்ராப்யத்வம் ப்ராபகத்வம் விரோதிநிவர்த்தகத்வமாகிற விவ்வோஸ்வபாவங்களை யநுஸந்தித்து, "இப்படி குணாதிகனானவனை யநுபவிக்கவேணும்" என்றாசைப்பட்டுக் கிடையாமையாலே, அம்புபட்டாரைப்போலே கிடந்† தழைக்கின்ற*பாமருமூவுலகிலர்த்தத்தை "பாமருவுவேதம்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

‡ (பா) மேம்பட்ட. † (பா) தழைக்கின்ற.

வ்யா. (பாமருவு வேதம் பகர்மால்குணங்களுடனுமழகுவேண்டப்பாடாமவற்றை) ச(ஹ)ந்தஸ்ஸுக்களோடே கூடின வேதப்ரதிபாத்யமான குணங்களோடே கூடி நன்றானவழகு மேன்மையாகிற வவற்றை; (தூமனத்தால்நண்ணி)(க) "ஜ்ஞாநஸாக விஶுத்தேந மநஸா துவிஶுத்தேந" என்று மாநஸஸாக்ஷாத்காரத்தாலே கிட்டியநுபவித்து. (அவனைக்காண) கீழ்க்க குணவிஶிஷ்டனானவனை ப்ரத்யக்ஷாநுபவம் பண்ணவேணுமென்று இச்சித்து. (நன்குருகிக்கூப்பிட்ட) நன்றாகவுருகி, அந்தப்ரேமாநுகூலமான வுருகுதலோடே கூப்பிட்ட.

(அண்ணலை நண்ணாரேழையர்) § அதாவது - வேதம் பகர்மால் குணங்களாவது (உ) "ஸர்வகந்த: ஸர்வரஸ: -ஸர்வாங்காமாந்" என்கிற கல்யாண குணங்கள்; அவைதான் ப்ராப்யங்களாயும் ப்ராபகங்களாயுமிருக்குமிறே. மோக்ஷதஶையில் ப்ராப்யமாய் முமுக்ஷுதஶையிலநுபவிப்பார்க்கு அவதாராதிகளில் ப்ராப்யத்வ ப்ராபகத்வமாகிற வுப(ஹ)யாகாரத்தையுமுடைத்தாயிருக்கும்; ஆகையாலே "பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ" என்றுதொடங்கி "தாமரைக்கையாவோ வுன்னையென்றுகொல் சேர்வதுவே" என்றும், "என்றுகொல் சேர்வதந்தோ" என்றுதொடங்கி "நின்திருப்பாதத்தையான்" என்றும் - ப்ராப்யத்வத்தையும்; "காத்தவெங்கூத்தாவோ" என்றுதொடங்கி "உன்னையெங்குத்தலைப்பெய்வனே" என்றும், "எங்குத்தலைப்பெய்வன் நான்" என்றுதொடங்கி "என்னுடைக்கோவலனே" என்றும், "என்னுடைக்கோவலன்" என்றுதொடங்கி "என்னுடையாருயிரா ரெங்ஙனே கொல்வந்தெய்துவரே" என்றும், "வந்தெய்துமாறறியேன்" என்றுதொடங்கி "என்திருமார்பனை" என்றும், "என்திருமார்பன்றன்னை" என்றுதொடங்கி "விசும்பாளியைக்காணேனே" என்றும், இப்படியஞ்சுபாட்டாலே - அவனுடைய ப்ராபகத்வத்தையும்; "ஆளியைக்காண்பரியாய்" என்றுதொடங்கி "அடர்த்தானையுங் காண்டுங்கொலோ" என்றும், "காண்டுங்கொலோ நெஞ்சம்" என்றுதொடங்கி "அமரரியேற்றினையே" என்றும், இவ்விரண்டு பாட்டாலும் - விரோதிநிரஸநஶீலத்தையும்; எற்றரும்

(க) (உ) சா-கஎ. § என்கிறது.

வைகுந்தத்தை யருளும்நமக்காயர் குலத்திற்றிளம்பிள்ளை" என்றுமே, ஸுப்ரதத்வத்தையும்.

இப்படியான (க) "வஹவோ ருபகல்யாணகுணா: - பஹுவோரூபகல்யாணகுணா:" என்கிற விக்குணங்களோடே நகூறின வழகையும். அதாவது – "பற்பநாபாவோ" என்று - (உ) * செகாப்பூழிலெழுகமலப்பூவழகையும், "பற்பநாதாவோ, தாமரைக் கண்ணுவோ, தாமரைக்கையாவோ," "செய்யநின் திருப்பாதம்" என்று - திவ்யாவயவஸௌந்தர்யத்தையும், "காத்தவெங்கூத்தாவோ" என்று-ஸமுதாயஸோபையையும், "பூத்தண்டுழாய் முடியாய்" என்று ஒப்பனையழகையும், "என்பொல்லாக்கருமாணிக்கமே" என்றும் "செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தொருமாணிக்கம் சேர்வதுபோல்" என்றும் - வடிவழகையும், "என் திருமார்பனையே" என்று - ஸ்ரீயஃபதியாகையால் வந்தசேர்த்தி யழகையும், அத்தோடே வேண்டப்பாட்டையும், அதாவது - 'மூவுலகும்படைத்த' என்று - ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வமும், "மூவுலகுமளந்த" என்று - ஸ்ருஷ்டமான ஜகத்தைத்தன் காலின் கீழேயாம்படி யெல்லைநடந்து மீட்டும், அதுக்குமேலே "தாமரைக்கண்ணுவோ" என்று - புண்டரீகாக்ஷத்வத்தால் வந்தமேன்மையையும், "அரன் நான்முகனேத்தும் செய்யநின் திருப்பாதம்" என்றுஸர்வஸ்மாத்பரத்வத்தையும், 'என் மலைமகள் கூறன்றன்னையென்றுமென்னுமகளை யகம்பால்கொண்ட நான்முகனைநின்ற சசிபதியை" என்று-அவர்களுக்கு அந்தராத்மதயாநிர்வாஹகனான படியையும் இவற்றாலே பவித்தவேண்டப்பாடு இவையென்கை.

(தூமனத்தால் நண்ணிபித்யாதி) மோக்தங்களான விவற்றை (ங) "தூமனத்தனாய்' என்கிற பரிஶுத்தமான ஜ்ஞாந விஷயமாம்படி யநுபவித்து, ஏவம்விதனானவனை, ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரத்தாலே யநுபவிக்கவிச்சித்து, பக்திபாரவஶ்யத்தாலே த்ரவீபூதராய்க்கூப்பிட்ட "பற்பநாபாவோ" "காத்தவெங்கூத்தாவோ" "விசும்பாளியைக்காணேனே" என்றிப்படி விஷாத(ஶா)திஶயத்தாலே கூப்பிட்ட, (அண்ணலை நண்ணுரேழையர்) இதரவிஷயத்திலே சபலராய் தத்லாபத்திலே கூப்பிடுகிற ஸம்ஸாரிகள்நடுவே, பகவதலாப

(க) ரா-அ-உ-உசு. (உ) நா-தி-கககஉ. (ங) தி-வாய்-உ-எ-அ.

மூ.-ஏழையர்கள்நெஞ்சை யிளகுவிக்குமாலழகு
சூழவந்துதோன்றித் துயர் விளைக்க — ஆழுமனம்
தன்னுடனேயவ்வழகைத்தானுரைத்த மாறன்பால்
மன்னுமவர் தீவினைபோம் மாய்ந்து. (சுஎ)

---

(அ)த்தலே கூப்பிடுகிற ஸர்வாத்மசேஷியான வாழ்வாரையாச்ர யியார்கள், அதுக்கடி-இதரவிஷயசாபல்யமிறே. "இப்படி ஸுலப ராய் ப்ராப்தசேஷியான வாழ்வாரை லபியாதே இதரவிஷய சபல ராவதே" என்றுவெறுக்கிறார். (சுசு)

---

பதவுரை.

| | |
|---|---|
| ஏழையர்கள் | சபலரான ஸம்ஸாரிகளுடைய |
| நெஞ்சு | மநஸ்ஸை |
| இளகுவிக்கும் | உருக்குகின்ற |
| மால் அழகு | எம்பெருமானுடைய அழகானது |
| சூழவந்து தோன்றி | எங்குஞ்சூழ்ந்து காணப்பட்டு |
| துயர்விளைக்க | வருத்தத்தை உண்டாக்க, |
| ஆழும் மனம் தன்னுடனே | அத்துன்பக்கடலில் ஆழ்ந்த மனத்தோடே |
| அவ்வழகை | அந்த ஸௌந்தர்யத்தை |
| தாம் உரைத்த | தாமே அநுபவித்தருளிச்செய்த |
| மாறன்பால் | ஆழ்வார் விஷயத்தில் |
| மன்னுமவர் | பொருந்தியிருப்போருடைய |
| தீவினை | பாவமானது |
| மாய்ந்துபோம் | நசித்துப்போம். (சுஎ) |

அவ. — அறுபத்தேழாம்பாட்டு(ஏழையர்கள்நெஞ்சை) இதில்-அவனுடைய வுத்தமாங்கத்தலழகு ஒருமுகமாய் நலிகிறபடியைப் பேசுகிற ஸூக்தியையநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்; "மல்குநீலச்சுடர் தழைப்ப" என்றுகீழ் ப்ரஸ்துதமான வெம்பெருமானுடையவழகு திருவுள்ளத்திலே யூற்றிருந்து, அத்தையே யிடைவிடாமல் (ஸா)பாவித்து(ஸா)பாவநா ப்ரகர்ஷத்தாலே அவ்வழகு ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாய்த்தோற்றி, தனித்தனியும் திரளவுமொருமுகஞ்செய்துநலிய, தாம் நலிவுபட்டுச் செல்லுகிறபடியை,

உருவுவெளிப்பாட்டாலே நோவுபடுகிறுளொருபிராட்டி பாசுரத்தாலே யருளிச்செய்கிற * ஏழையராவியிலர்த்தத்தை "ஏழையர்கள்" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

வ்யா.-(ஏழையர்கள் நெஞ்சையிளகுவிக்கும் மாலழகு)ச(ப)பலைகளான வபலைகளுடைய மநஸ்ஸை த்ர(வ)விப்பிக்கும் ஸர்வேச்வரனுடைய * ஸ்மயமாந முகாம்புஜத்தில் நயநஸௌந்தர்யம். (சூழவந்து தோன்றித்துயர்விளைக்க) எங்கும்சூழ்ந்து ஸ்ம்ருதிவிஷயமாய் பாத(வா ய)கமாயிறே துக்கத்தைவிளைப்பது. அதாவது(க)-"வ்ருக்ஷேவ்ருக்ஷேஹிபச்யாமி - வாஸஹஸ்தமிவாந்தகம் - வ்ருக்ஷேவ்ருக்ஷேஹிபச்யாமி-பாசஹஸ்தமிவாந்தகம்" என்னும்படி, 'ஏழையராவி யுண்ணுமிணைக்கூற்றங்கொலோ வறியேன்" என்கிறமுதற்பாட்டை யடியொத்தினபடி.

(ஆழுமனந்தன்னுடனே யவ்வழகைத்தானுரைத்த) "வெண்ணெயுண்டான்றிரு மூக்கெனதாவியுள்ளேமாட்டியவல் விளக்கின் சுடராய் நிற்கும்" என்றும், "நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான்தொண்டைவாயேயுந்திசையுளெல்லாம் வந்துதோன்றும்" என்றும், "கண்ணபெருமான் புருவமவையேயென்னுயிர் மேலனவாயடுகின்றன வென்றுகின்றே" என்றும், "குன்றமெடுத்தபிரான் முறுவலெனதாவியடும்" என்றும், "பைவிடப்பாம்பணையான் றிருக்குண்டலக்காதுகளே கைவிடலொன்று மின்றியடுகின்றன" என்றும், "பெருயான்றன்றிரு நுதலேகோள் மன்னியாவியடும்" என்றும், இப்படித் தனித்தனியும்; "கோளிழைத்தாமரையும்" இத்யாதிப்படியே ஒருமுகமாகவும்; அதுக்குமேலே, (உ) "செங்கமலப் பூவில் தேனுண்ணும்வண்டேபோல் பங்கிகள்வந்துன் பவளவாய் மொய்ப்ப" என்றும்,(ங)"லலாடபர்யந்த விலம்பிதாலகம்" என்றும்சொல்லும்படியாய், "மாயன் குழல்விள்கின்ற பூந்தண்டுழாய் விரைநாறவந்தென்னுயிரைக்கள் கின்றவாறு" என்று மருளிச்செய்தவையென்கை.

இப்படி துக்கமக்நமான மநஸ்ஸோடேனே. (அவ்வழகைத் தானுரைத்தமாறன்பால் மன்னுமவர் தீவினைபோம்மாய்ந்து) நிர

(க) ரா-ஆ-ருக-சச. (உ) பெரி.தி-க-உ. (ங) ஸ்தோ-ர

மூ —மாயாமல்தன்னைவைத்த வைசித்திரியாலே
தீயாவிசித்திரமாச்சேர்பொருளோ—டாயாமல்
வாய்ந்துநிற்குமாயன் வளமுரைத்த மாறனைநாம்
ஏய்ந்துரைத்து வாழுநாளென்று. (சுஅ)

---

வதிகபோக்யமான அந்த உத்தமாங்கத்திலே ஸௌந்தர்யத்தை யநுபவித்தருளிச்செய்த வாழ்வார் விஷயத்திலே பொருந்தியிருக்குமவர்களுடைய ப்ரபலப்ரதிபந்தகம் நசித்துநிஶ்ஶேஷமாகப் போம் தீவினை - துஷ்கர்மம். "மாறன்சொல்மன்னுமவர் தீவினை போம்மாய்ந்து" என்றுபாடமானபோது, ஆழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியை மநஸ்ஸிலேபொருந்தி யநுஸந்திக்குமவர்கள் ப்ரதிபந்தகம் நிஶ்ஶேஷமாகப் போமென்றபடி. (சுஎ)

---

பதவுரை.

| | |
|---|---|
| மாயாமல்தன்னைவைத்த | தமது ஶேஷத்வஸ்வரூபம் நஶியாமல் தம்மைவைத்த |
| வைசித்திரியாலே | விசித்ராகாரதையாலே |
| தீயாவிசித்திரமா | தீ முதலான பஞ்சபூதங்களும் ஒன்றின் காரியம் ஒன்றுக்கின்றிக்கே வெவ்வேறுருவாய் |
| சேர்பொருளோடு | சேதநவர்க்கங்களும் அப்படியே வெவ்வேறுருவமாகையாலே விசித்ரமாய்ச்சேர்ந்த பதார்த்தங்களோடே |
| ஆயாமல் | அவற்றின் தோஷங்களை ஆராயாமல் |
| வாய்ந்துநிற்கும | அவற்றோடு பொருந்திநிற்கிற |
| மாயன்வளம் | ஸர்வேஶ்வரனுடைய விபூதிவிஸ்தாரத்தை |
| உரைத்த | அருளிச்செய்த |
| மாறனை | ஆழ்வாரை |
| நாம் ஏய்ந்து உரைத்து | நாம்கிட்டி அவர் திருநாமங்களைச் சொல்லி |
| வாழும்நாள் என்று | வாழுங்காலம் எக்காலமோ ?(சுஅ) |

அவ.—அறுபத்தெட்டாம்பாட்டு. (மாயாமல்) இதில் - எம்பெருமான் காட்டின விசித்ரஜகதாகாரதையை யநுபவித்து விஸ்மிதராயருளிச்செய்த திவ்யஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில் * ஏழையராவியில் - உருவுவெளிப்பாட்டாலே நோவுபடும்படி யாற்றாமை கரைபுரண்டிருக்கச் செய்தேயும், தம்மையறியாதபடிவைத் துநோக்கிக்கொண்டு போருகிற விவ்வாஸ்சர்யத்தைக் கண்டு இவர் விஸ்மிதராக, "இதொன்று கண்டோ நீர் இப்படி விஸ்மயப்படுகிறது," என்று அவன் தன்னுடைய வாஸ்சர்ய ஜகதாகாரத்தைக் காட்டிக்கொடுக்க, அத்தை யநுபவித்து விஸ்மிதராகிற மாயாவாமன னிலர்த்தத்தை "மாயாமல் தன்னைவைத்த" இத்யாதியாலே யருளிச் செய்கிறுரென்கை.

வ்யா.—(மாயாமல் தன்னைவைத்தவை சித்திரியாலே) அதாவது - ஶரண்யனான வுனக்கு அஜ்ஞாநஶக்திகளாகிற தோஷமின்றிக்கே ஸர்வஜ்ஞத்வாதி குணங்களுண்டாயிருக்க, ஶரணாகதனானவெனக்கு ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களும் ஆர்த்தியுமுண்டாகையாலே அதிகாரி மாந்த்யமின்றிக்கேயிருக்க வைத்தவிதில் பொருந்தாதவென்னை வைத்து நடத்திக்கொண்டுபோகிறதுக்கு ஹேதுவென்?" என்று-"பாசங்கள்நீக்கி" என்றுதொடங்கி "மாயவனே யருளாய்"என்று அவன்றன்னைக்கேட்க,அவனும் அதுக்கு நிருத்தரனாக "இதொன்றிருந்தபடியென்? என்று இவ்வாஸ்சர்யத்திலே இவர்விஸ்மிதராக, அவனவற்றைக் கண்டுவைத்து "இதோராஸ்சர்யமோ" என்று தன் விசித்ரஜகதாகாரதையைக்காட்ட, (தீயாவிசித்திரமாச்சேர் பொருளோடு) "மாயாவாமனனே" என்றுதொடங்கி "இவையென்னவிசித்திரமே" என்றத்தைப்பின்சென்றருளிச் செய்தபடி.

தீயாதியாக பஞ்சபூதங்களுமொன்றின் கார்யமொன்றுக்கின்றிக்கே விவிதா(கா)காரமாய் சேதநவர்க்க(ங்க)ங்களுமப்படியே விவிதாகாரமாகையாலே விசித்ரமாய்ச்சேர்ந்த பதார்த்தங்களோடு, (ஆயாமல் வாய்ந்துநிற்கும் மாயன்) அவற்றின் தோஷங்களையாராயாமல் வாய்ந்துநிற்கும்மாயன். "ஓயாமல் வாய்ந்துநிற்கும்" என்றுபாடமாய், நிரந்தரமாகச்சேர்ந்து நிற்குமென்றுகவுமாம்.

மூ.-என்றனை நீ யிங்குவைத்ததே துக்கெனமாலும்
என்றனுக்கு மென்றமர்க்கு மின்பமதாம்—நன்றுகவி
பாடவெனக்கைம்மாறிலாமை பகர் மாறன்
பாடணைவார்க் குண்டாமின்பம். (கூகூ)

பொருந்திநிற்குமாஸ்சர்ய ஶக்தியுக்தனான ஸர்வேஸ்வரன். "மாயா" என்றத்தைப்பேசினபடி. (வளமுரைத்த) விபூதிவிஸ்தாரத்தை யருளிச்செய்த.

அதாவது - (க) 'வ ா ாா ஊ ஒ ஸா ரு ‡ ா ‡ ா ஊ: - நகேராயவஸஙோவஸ: - புராபூத்வாம்ருதர்த்தாந்த: - நக்ஙோதவஸமாபந்ந: " என்னும்படி, " அங்கண்மலர்த்தண்டுழாய்முடி யச்சுதனே யருளாய் - பின்னும் வெங்கண் வெங்கூற்றமுமாமிவையென்னவிசித்திரமே" என்றும், "சித்திரத்தேர்வலவா-. வித்தகத்தால் நிற்றி நீ'' என்றும், "கள்ள விழ்தாமரைக் கண்கண்ணனே - உள்ளப்பல் யோகுசெய்தி'' என்றும், "பாசங்கள் நீக்கியென்னை - இவையென்னமயக்குக்களே'' என்றும், "மயக்காவாமனனே-இவையென்னதுயரங்களே'' என்றும், "துயரங்கள் செய்யுங்கண்ணா - இவையென்ன சுண்டாயங்களே"என்றும், "என்ன சுண்டாயங்களாலெங்ஙனே நின்றிட்டாய் - இவையென்னவியற்கைகளே" என்றும், "என்னவியற்கைகளால் நின்றிட்டாய் - உலப்பில்லை நுணுக்கங்களே'' என்றும், "இல்லைநுணுக்கங்களே - அச்சுதனே - அதுவேயுனக்காம்வண்ணமே" என்றுமிப்படி அவன் விசித்ர விபூதிவிஸ்தாரயுக்தனாயிருக்கிறபடியை யருளிச்செய்தவையென்கை. (மாயன் வளமுரைத்தமாறனை) இப்படி விசித்ரஜகதாகாரனானவன் ஸம்பத்தை யநுபவித்தருளிச்செய்த வாழ்வாரை. (நாமேய்ந்துரைத்து வாழுநாளென்று) நாம்கிட்டி அவர் திருநாமங்களைச்சொல்லி வாழுங்காலமாகவற்றேரா? அன்றுமொருநாளாகவற்றேரவென்றபடி. கூஅ

பதவுரை.

| | |
|---|---|
| என்றனை | 'ஸம்ஸாரத்திற்பொருந்தாதஎன்னை |
| நீ இங்குவைத்தது | நீ இவ்விபூதியில் வைத்தது |
| ஏதுக்கென | எதற்காக?' என்று(எம்பெருமானை ஆழ்வார்) கேட்க, |

(க) ரா-ஆ-ஊ-ம.

| | |
|---|---|
| மாலும் | எம்பெருமானும் |
| என்றனக்கும் | "எனக்கும் |
| என்தமர்க்கும் | என் அடியார்க்கும் |
| இன்பமதா | போக்யமாக |
| நன்று கவிபாட என | நல்லகவிகளைப்பாடும் பொருட்டு" என்று விடையருள, |
| கைமாறுஇலாமை | எம்பெருமான் செய்த உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரம் தம்மிடத்தில்லாமையை |
| பகர் | அருளிச்செய்த |
| மாறன்பாடு | ஆழ்வார்பக்கலில் |
| அணைவார்க்கு | கிட்டுமவர்க்கு |
| இன்பம் உண்டாம் | ஆநந்தமுண்டாகும். (கூகூ) |

அவ,—அறுபத்தொன்பதாம் பாட்டு. (என்றனை நீ) இதில் - அவன் திருவாய்மொழிபாடுவித்தபடியை யநுஸந்தித்து ஈடுபடுகிற பாசுரத்தை யநுவதித் தருளிச் செய்கிறார். எங்ஙனே யென்னில்; "எனக்கு ருசியின்றிக்கே யிருக்க ஸம்ஸாரத்திலே என்னை வைத்தது க்கு ஹேதுவென்?" என்றுகேட்க, "உம்மைக்கொண்டு நமக்கும் நம்முடையார்க்கு மநுபவிக்கலாம்படி விலக்ஷணமான திருவாய்மொழி ப்ரபந்தத்தைப் பாடுவித்துக் கொள்ளவைத்தோங்காணும்" என்று நேர்கொடுநேரான பரிஹாரத்தை அவனருளிச்செய்ய, "வேதங்கள், வ்யாஸாதிகள், முதலாழ்வார்கள், இவர்களுண்டாயிருக்க, அத்யந்த ஹேயனான வென்னைக்கொண்டு, வேதங்களாலு மெல்லை காணவொண்ணாத தன்வைபவத்துக்குத் தகுதியாக விலக்ஷணமான திருவாய்மொழியைப் பாடுவித்துக் கொண்ட விம்மஹோபகாரத்துக்கு உபய விபூதியிலும் ஸத்ருசமாகச் செய்யத் தக்கதொரு ப்ரத்யுபகார மில்லை" என்று தலை சீய்த்துப்போகிற * என்றைக்கு மென்னையிலர்த்தத்தை, "என்றனை நீ" இத்யாதியாலே யருளிச்செய்கிறா ரென்கை.

வ்யா—(என்றனை நீ யிங்குவைத்த தேதுக்கென) அவன் காட்டினதாகையாலே விசித்ர விபூதியை யநுபவித்து, மீளவும் பூர்வப்ர

க்ருதமான தம்முடைய ஶங்கையை, "பாசங்கள் நீக்கி யென்னை யுனக்கேயறக் கொண்டிட்டு நீவாசமலர்த்தண்டுழாய் முடி மாயவனே யருளாய்" என்று கேட்க, (என்றனை நீ) ஸம்ஸாரத்தில் பொருந்தாத வென்னை நீ; ஸம்ஸாரத்தில் பொருந்தாதாரை யேற விடுகைக்கு ஸர்வஶக்தியுக்தனான நீ. (இங்கு) * இருள் தரு மாஞாலமான விவ்விபூதியிலே. (வைத்ததேதுக்கென) ப்ரயோஜந நிரபேக்ஷமாயிருக்க, என்ன ப்ரயோஜநத்தைப் பற்றவைத்த தென்ன,

(மாலுமென்றனக்கு மென்றமர்க்கு மின்பமதா நன்றாகவி பாடவென) திருமாலான வெனக்கினிதாகவும், * திருமாலடியாரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இனிதாகவும், விலக்ஷணமாய் "கவியமுதம்" என்னும்படியானவினிய கவிகளைப் பாடவைத்தோமென்ன; தன்னைக் கவிபாடுகைக்கு, வேதங்களும், அத்தைப் பின் சென்ற வைதிகரான வ்யாஸ வால்மீகி ப்ரப்ருதிகளான பரமருஷிகளும், * செந்தமிழ் பாடுவாராய் (க) "பெருந்தமிழனல்லேன் பெரிது" என்று ப்ரஶம்ஸிப்பாருமான முதலாழ்வார்களு முண்டாயிருக்க, (கவிபாடவென கைம்மாறில்லாமை) "கவிபாட வைத்தோம்" என்றவிந்த வுபகாரத்துக்கு ப்ரத்யுபகார மில்லாமையை,

(பகர் மாறன்) அருளிச்செய்த வாழ்வார். அதாவது-"என்னைக்கும் - என் சொல்லி நிற்பனோ" "என்சொல்லி நிற்பன் - என் முன் சொல்லும் மூவுருவாமுதல்வனே" "ஆம்முதல்வனிவனென்று - என் வாய் முதலப்பனை யென்று மறப்பனோ" "செப்பமே செய்து திரிகின்ற சீர்கண்டு - அப்பனையென்று மறப்பன்" "சீர்கண்டு கொண்டு -பார் பரவின் கவிபாடுபரமரே" "இன்கவிபாடும் பரமகவிகளால் தன்கவிதான் தன்னைப்பாடுவியாது - வன்கவி பாடுமென் வைகுந்த நாதனே" "வைகுந்த நாதன் – எந்நாள் சிந்தித்தார்வனோ" "ஆர்வனோ - சீர்பெறவின்கவி சொன்னதிறத்துக்கே" "திறத்துக்கு-உறப்பலவின் கவி சொன்ன உதவிக்கே" "உதவி கைம்மாறென் னுயிர் - எதுவுமொன்று மில்லை செய்வதிங்கு மங்கே" என்றிப்படி உபகார ஸ்ம்ருத்யதிஶயத்தாலே யீடு பட்டருளிச் செய்தவையென்கை.

---

(க) ௨-திருவ எச.

மூ-இன்பக்கவி பாடுவித்தோனை யிந்திரையோடு
அன்புற்றுவாழ் திருவாறன்விளையில்—துன்பமறக்
கண்டடிமை செய்யக் கருதியமாறன்கழலே
திண்டிறலோர் யாவர்க்குந்தேவு. (எ௦)

(க) "என் சொல்லி எந்நாள் பார் விண்ணீர் இறப்பெதிர் எதுவுமென்கிறவதிலுபகாரஸ்ம்ருதியோடே" என்றிறே நாயனருமருளிச்செய்தது. (உ) "வேதவித்பிஸ் ஸஹஸ்ராணி ஸ்லோகாநா முக்தவாந்ருஷி:-சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷி:" என்னும்படி, * பாலோடமுதன்னவான * இங்ஙனே சொன்ன வோராயிரமான * உறப்பலவின் கவிகளைப் பாடுவிக்கையாலே யிவர்க் கீடுபாடா யிருக்கிறது. (கைம்மாறிலாமை பகர்மாறன் பாடணைவார்க் குண்டாமின்பம்) இப்படிக்ருதஜ்ஞரான வாழ்வார் பரிஸரவர்த்திகளாம்படி கிட்டுவார்க்கு ஆநந்த முண்டாம். "எங்ஙனே சொல்லினு மின்பம் பயக்குமே" என்கிற நிர்ப்பந்தமும் வேண்டா, கேவலம் கிட்டவமையும். (கக)

பதவுரை.

| | |
|---|---|
| இன்பக்கவிபாடுவித்தோனை | போக்யமான திருவாய்மொழியைத் தம்மைக்கொண்டு பாடுவித்த பெருமானை |
| இந்திரையோடு | பெரியபிராட்டியாரோடுகூடி |
| அன்புற்றுவாழ் | மகிழ்ந்து வாழ்கின்ற |
| திருவாறன் விளையில் | திருவாறன் விளையென்னுந் திருப்பதியில் |
| துன்பம் அறக்கண்டு | தமது வருத்தந் தீரும்படிகண்டு |
| அடிமை செய்யக்கருதிய | கைங்கரியம் பண்ண ஆசைப்பட்ட |
| மாறன்கழலே | ஆழ்வார் திருவடிகளே |
| திண்திறலோர் யாவர்க்கும் | த்ருடாத்யவஸாயிகளான அனைவர்க்கும் |
| தேவு | பரதேவதையாகும். (எ௦) |

(க) ஆசார்யஹ்ருதயம்-எ. (உ) ரா பா-ச-உ.

அவ.—எழுபதாம்பாட்டு. (இன்பக்கவி) இதில் - திருவாய்மொழி பாடியடிமைசெய்யப் பாரித்த திவ்யஸம்ருத்தியை யநுவதித்தருளிச் செய்கிறார்.

எங்ஙனே யென்னில்; தாம்பாடின திருவாய்மொழி கேட்கைக்காகப் பெரியபிராட்டியாருடனே பேரோலக்கமாகத் திருவாறன் விளையிலே அவன்வந்தெழுந்தருளியிருக்கிறபடியை யநுஸந்தித்து "நாமங்கே சென்று (க) 'திருமாலவன் கவி' என்றவாயோலைப் படியே அவனுமவளுமான சேர்த்தியிலே திருவாய்மொழியை அவர்களிருவரு முகந்து திருச்செவி சாத்தும்படி கேட்பித்தடிமை செய்யப் பெறுவதெப்போதோ?" என்று மநோரதிக்கிற * இன்பம் பயக்கவி லர்த்தத்தை, "இன்பக்கவி பாடுவித்தோனை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா,—(இன்பக்கவி பாடுவித்தோனை) "இன் கவி பாடியவீசனை," "இன்கவி யென்பித்த," "என் நாமுதல் வந்து புகுந்துநல்லின் கவி," திருந்துநல்லின்கவி, ".வண்டின் கவி," "சீர்பெறவின் கவி," "உறப்பலவின் கவி" "பதவியவன்கவி பாடியவப்பன்" என்று கிரதிசய போக்யமான திருவாய்மொழியை யென்னைக்கொண்டு பாடுவித்த உபகாரகனை. (இந்திரையோ டன்புற்றுவாழ் திருவாறன் விளையில்) பெரியபிராட்டியாரோடே கூட "திருவாய்மொழி கேட்கைக்குப் பாங்கானவிடம்" என்றத்யாதரத்தைப் பண்ணிவாழ்ந்து கொடுபோருகிற திருவாறன் விளையில். அன்றிக்கே, இந்திரையோடன்புற்றென்று - பெரிய பிராட்டியாரிடத்திலே ஸ்நிக்த (ழு)ளுயென்றுமாம். இத்தால் - "இன்பம் பயக்க" என்கிற முதற் பாட்டைக் கடாக்ஷித் தருளிச்செய்தபடி. (உ) "ராஜ்ஞ்யா ஸீதயா ஸாயஹ்நே - ராமஸ்துஸீதயா ஸார்த்தம்" (ங) * "ராமஸ் ஸீதாமநுப்ராப்ய ராஜ்யம் புநரவாப்தவாந் | ப்ரஹ்ருஷ்ட முதிதோ லோகஃ" இறே.

(திருவாறன் விளையில் தன்பமறக்கண்டு) * ஏழையராவியல் துக்கமெல்லாம் தீரக்கண்டு. (அடிமைசெய்ய க்கருதிய) கண்டால் செய்யும் கார்யமான கைங்கர்யம் செய்கையிலே மநோரதிக்கிற. அதாவது - "அன்புற்றமர்ந்து வலஞ்செய்து கைதொ

(க) தி-வி ௯-அ. (உ) ரா பா-௪௯-௨ ஸ்ரீ. (ங) ரா-ஸங்க்ஷேபே.

௭௧. தேவனுறைபதியிற்சேரப்பெறுமையால்
மேவுமடியார் வசனுமெய்ந்நிலையும்—யாவையுந்தா
னாகிநிலையுஞ்சங்கித்தவை தெளிந்தமாறன்பால்
மாநிலத்தீர் நங்கண்மனம். (௭௧)

---

ளுநாள்களு மாகுங்கொலோ'' 'மாகந்த நீர்கொண்டு தூவிவலஞ் செய்து கைதொழக் கூடுங்கொலோ'' "நீடுபொழில் திருவாறன் விளைதொழ வாய்க்குங்கொல் நிச்சலுமே'' "வடமதுரைப் பிறந்த வாய்க்குமணி நிறக்கண்ணபிரான்றன் மலரடிப்போதுகள் - எப்பொழுதும் மனத்தீங்கு நினைக்கப்பெற-வாய்க்குங்கொல்நிச்சலுமே'' "மதிள்திருவாறன் விளையுலகமலி புகழ்பாட' "திருவாறன் விளையென்னும் நீணகரமதுவே'' 'வாணனையாயிரந்தோள் துணித்தான் சரணன்றி மற்றொன்றிலமே'' "திருவாறன் விளையொன்றி வலஞ் செய்ய,'' "திருவாறன் விளையதனை மேவிவலஞ்செய்து கைதொழக் கூடுங்கொ லென்னுமென் சிந்தனையே'' 'திருவாறன் விளையுறை தீர்த்தனுக் கற்றபின் - சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மை'' என்றிப்படியாயிற்று இவர்க் கவ்விஷயத்தில் கைங்கர்ய மநோரதம் நடந்தபடி யென்கை,

"உபகார ஸ்ம்ருதியோடே தஞ்சரிதைகேள்வி யாகாமல் * இன்பம் பயக்க விருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக்கேட்பிப்பதாக காந கோஷ்டியையும் தேவபிரானறிய மறந்தவர்'' என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலு மருளிச்செய்தது. (தொண்டடிமை செய்யக் கருதியமாறன் கழலே திண்டிறலோர்யாவர்க்கும் தேவு [illegible]ர்மநாநுபவ கைங்கர்ய மநோரதத்தை யுடையவாழ்வார் திருவடிகளே, த்ருடாத்யவஸாய யுக்தராயுள்ளார்க்கெல்லாம் பரதேவதை. ஆழ்வாரும் வேண்டா; நமக்கு உத்தேஸ்ய மாழ்வார் திருவடிகளே யமையும். அன்றிக்கே, மாறன் கழல்சேர் திண்டிறலோருண்டு - த்ருடாத்யவஸாய யுக்தரான மதுரகவி நாதமுநிப்ரப்ருதிகளாயுள்ளவர்கள், மற்றும் அத்யவஸாய † யுக்தராயுள்ள ரெல்லார்க்கும் குலதைவமென்றாகவுமாம். (௭௦)

---

பதவுரை.

மாநிலத்தீர் — பெரிய உலகத்திலுள்ளவர்களே!
தேவன் உறைபதியில் — எம்பெருமான் வாழ்கின்ற திருவாறனவிளையென்ற க்ஷேத்ரத்தில்

| | |
|---|---|
| சேரப்பெருமைபால் | சேர்ந்துபாடி அடிமைசெய்யப் பெருமையாலே |
| மேவும் அடியார் வசன் ஆம் மெய்நிலையும் | எம்பெருமான் றன்னை ஆஶ்ரயித்திருக்கிற அடியார்க்குப் பாரதந்த்ரனும் நிலையிலும் |
| யாவையும் தான் ஆம் நிலையும் | சேதநாசேதநங்களெல்லாம் 'தான்' என்கிறசொல்லுக்குள்ளே அடங்கும்படியான நிலையிலும் |
| சங்கித்து | அதிஶங்கைபண்ணி |
| அவைதெளிந்த | அவற்றை உள்ளவாறுதெளிந்த |
| மாறன்பால் | ஆழ்வார்விஷயத்தில் |
| நங்கள்மனம் | எங்கள்மனம் பதிந்திருக்கும். (எக) |

அவ.-எழுபத்தோராம்பாட்டு (தேவனுறைபதியில்) இதில்-அவனுடைய குணங்களிலும் ஸ்வரூபத்திலு மதிஶங்கித்த வதிஶங்கையைப்போக்கினபடியைப்பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இவர்மநோரதித்தபோதே அத்தேசத்திலே புக்குத்திருவாய்மொழி கேட்பித்தடிமைசெய்யப் பெருமையாலேமிகவு மவஸந்நராய், "அவன் ஆஶ்ரிதபாரதந்த்ரன், ஸர்வநிர்வாஹகனென்றிருந்தோம், இவையுந்நம்மைத்தோற்றிப்போயாகிறதோ?" என்று இவர் அவன் குணத்திலும்ஸ்வரூபத்திலுமதிஶங்கைபண்ண, நீழ்தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட வுபகாரத்தை ஸ்மரிப்பித்து, அவன் தம்மதிஶங்கையைப்போக்க, அத்தையநுஸந்தித்து அதிஶங்கைதீருகிற * தேவிமாரிலர்த்தத்தை "தேவனுறைபதியில்" இத்யாதியாலே யருளிச்செய்கிறரென்கை.

வ்யா.-(தேவனுறைபதியில்) நீமே – "தன்மைதேவபிரானறியும்" என்னும்படியான * தேவர்க்குந் தேவனானவன், திவ்யமஹிஷியோடே நித்யவாஸம்பண்ணுகிற திருவாறன் விளையிலே

புக்குப்பாடி யடிமைசெய்யப் பெறுமையாலே யென்னுதல்; அன்றிக்கே, "தேவிமாராவார் திருமகள் பூமியேவ மற்றமரராட்செய்வார் — அப்பனே காணுமாறருளாய்" "என்றென்றேகலங்கி" என்று அவஸந்நராயென்னுதல். (மேவுமடியார் வசனுமெய்க்நிலையும் யாவையும் தானு நிலையும் ஸங்கித்து) தன்னையாஸ்ரயித்திருக்கிறததீய பர தந்த்ரனும் நிலையிலும்,சேதநாசேதநங்களெல்லாம் "தான்" என்கிற சொல்லுக்குள்ளே யடங்கும்படியான நிலையிலு மதிஸங்கை பண்ண.

அதாவது - (க) "வ்யாகீர்வ்யாஜ்ஞ: - ஸஜ்ஞ்ஞ ஸஞ்ஜ்ஞா ஸம்ஜ்ஞயாத - க்யாதப்ராஜ்ஞ: - ஸங்கேமத்பாக்ய ஸங்க்ஷயாத்" என்னும்படி, "உமருகந்துகந்த வுருவம் நின்னுருவமாகி" என்று தொடங்கி, "அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்றும், "இறந்ததும் நீயே" என்று தொடங்கி "அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்றும், இப்படி ஸ்வரூபத்திலும் குணத்திலு மதிஸங்கை பண்ணின படியை யடியொற்றின படியென்கை. இப்படி யாஸ்ரித பாரதந்த்ர்யத்திலும் ஸர்வநிர்வாஹகத்வத்திலும்பிறந்த விஸங்கை நிவ்ருத்தமாம்படி பூர்வோபகாரத்தை ஸ்மரிக்கும்படி, "மலரடிப்போதுக ளென்னெஞ்சத்தெப் பொழுது மிருத்திவணங்கப் பலரடியார் முன்பருளிய" என்று உபகரித்ததை ஸ்ம்ருதி விஷயமாம்படி ப்ரகாசிப்பிக்க, அத்தை "தாள்களை யெனக்கேதலைத்தலைச் சிறப்பத்தந்த பேருதவி" என்றநுஸந்தித்து ப்ரீதராய் தெளிந்தவென்கை.

(தெளிந்த மாறன்பால் மாநிலத்தீர் நங்கள்மனம்) இதர விஷயங்களிலே மண்டியிருக்கிற மஹாப்ருதிவியிலுள்ளவர்களே! உங்களைப்போலின்றிக்கே ஆழ்வார் விஷயத்திலேயாயிருக்கும் நம்முடைய மநஸ்ஸு. உங்களுக்கு இதரவிஷயத்திலேயாயிருக்கும், ஆழ்வார்க்கு பகவத்விஷயத்திலே யாயிருக்கும்; உபய வ்யாவ்ருத்தரான வெங்களுக்கு ஆழ்வார் விஷயத்திலே யாயிருக்கும் மநஸ்ஸு. (எக

(க) ரா-அயோ-உக-கக.

மூ.—நங்கருத்தை நன்றாக நாடிநிற்குமாலறிய
விங்கிவற்றிலாசை யெமக்குளதென்—சங்கையினால்
தன்னுயிரின் மற்றினசை தானொழிந்த மாறன்றான்
அந்நிலையையாய்ந்துரைத்தானங்கு. (எ௨.)

---

பதவுரை.

| | |
|---|---|
| நங்கருத்தை | நம்முடைய ஹ்ருதயத்தை |
| நன்றாகநாடிநிற்கும் | நன்றாக ஆராய்ந்துபோருகிற |
| மால்அறிய | எம்பெருமான் அறிய |
| இங்கு இவற்றில் ஆசை | இவ்விபூதியில் விருப்பம் |
| எமக்கு உளதென்சங்கையினால் | எமக்குண்டடென்னு மதிசங்கையாலே |
| தன் உயிரில் மற்றில் | ஆத்மாத்மீயங்களில் |
| நசைதான் ஒழிந்த | விருப்பமற்ற |
| மாறன் | ஆழ்வார் |
| அந்நிலையை ஆய்ந்து | அந்த ஸ்வபாவத்தை ஆராய்ந்து |
| அங்கு உரைத்தான் | ஆராய்ந்தறிந்த அவ்வாறேஅருளிச்செய்தார். (எ௨) |

அவ.—எழுபத்திரண்டாம்பாட்டு, (நங்கருத்தை) இதில் - ஆழ்வார் ஆத்மாத்மீயங்களில் நசையற்ற * நங்கள்வரிவளையை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ் - அதிசங்கை தீர்த்தமாத்ரமாய், ஸ்வாபேக்ஷிதமான பாஹ்ய ஸம்ஶ்லேஷம் பிறவாமையாலே கலங்கி அவன்தாங்காரபங்கராய், ஸர்வஜ்ஞனான வவனறிய நாமறியாதேயிருக்க, நமக்கு ஸம்ஸாரத்திலே நசையுண்டாகவேணும்'' என்றுபார்த்து ஆத்மாத்மீயங்களில் தாம் நசையற்றபடியை அந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிற *நங்கள் வரிவளையிலர்த்தத்தை, "நங்கருத்தை" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா. - (நங்கருத்தை நன்றாகநாடிநிற்கும் மாலறிய) நம்முடைய ஹ்ருதயத்தை நன்றாக வாராய்ந்து போரும் மாலறியவென்னுதல், நம்முடைய ஹ்ருதயத்தை நன்றாக விரும்பி வர்த்தித்துப் போரும் ஸர்வேஶ்வரனறியவென்னுதல், * உள்ளத்தேயுறை

ஏழ்.—அங்கமரர்பேணவவர் நடுவேவாழ்திருமாற்கு
இங்கோர் பரிவரிலையென்றஞ்ச—எங்கும்
பரிவருளவென்னப்பயந்தீர்ந்தமாற
வரிகழற்றான் சேர்ந்தவர் வாழ்வார். (எஉ)

யும் மாலிறே. இவர் * கருத்தையுமவிந்திருந்தானுமாய்; இப்படி ஸர்வஜ்ஞனை ஸர்வேச்வரனறியும்படி. (இங்கிவற்றிலாசையெம க்குளதென் சங்கையினால்) இந்தவிபூதியிலே (க) "பாசங்கள்நீக்கி யென்னை" என்னும்படி, பண்டே * அருளிலும். * மாலுக்கு வையத்திலும் கைசுழன்ற விவற்றிலாசை; அவற்றை யுபேக்ஷித் திருக்கிற நமக்கு நாமறியாமல் தானறிந்ததாகச் சிறிதபேக்ஷையுண் டென்று நினைத்திருக்கிறானென்கிற சங்கையினாலே, (தன்னுயிரின் மற்றில்நசை தானொழிந்தமாறன்) அந்நிலையையாய்ந்துரைத் தானாங்கு) ஆத்மாவிலும் அதுக்கசலான வாத்மீயங்களிலும் நசைய ற்றவாழ்வார், அந்தஸ்வபாவத்தையாராய்ந்தருளிச்செய்தார் அத்த சையிலே.

அதாவது - (க) "ஹஸ்ரூஹைஸ்வாவ்ஹ ஹ்யமஹா மிமாப்யாபாம்" என்றதாயோ நிறவுத்த, (உ) "ஸ்ஜூவா ஸ வாஜேஸ்வ-ராஜ்பஞ் சா ஹஞ்சாரஸ்ய" என்றும், (ங) "வெதூஜா ஜூம் - நைச்சத்ராஜ்யம்" என்றும் நசையற்று, சித்ரகூடத்திலே சென்று * ப்ரஸாயாசித்துப் பாதுகைகளைப் பெற்றாப்போலே இவரும், "வேங்கடவாணனை வேண்டிச்சென்று-சங்கஞ்சரிந்தனசா யிழந்தேன்" என்றும், "கோல்வளையொடுமாமை கொள்வான்" "கோல்வளை நெஞ்சத்தொடுக்கமெல்லாம் பாடற்றொழிய விழந்துவை கல் பல்வளையார் முன்பரிசழிந்தேன்". "கோலம்பலவென்றும் காண்ப தாணை புங்களோடெங்களிடையில்லையே" "கடையறப்பாசங்கள் விட்டபின்னையன்றி யவனவை காண்கொடானே" "நான்கொடுத் தேனினியென்கொடுக்கேன்" "இன்னிடையேனல்லேனென்றுநீங்கி" "பாதமடைவதன் பாசத்தாலே மற்றவள் பாசங்கள் முற்றவிட்டு" என்றுமிப்படியாயிற்று அந்நிலையையாய்ந்துரைத்தபடி. (எஉ)

பதவுரை.

| | |
|---|---|
| அங்கு | அந்தநித்யவிபூதியிலே [பண்ண |
| அமரர்பேண | நித்யஸூரிகள் மங்களாசாஸநம் |

(*) ரா-அ எஅ-உஉ. (உ) ரா-அ-அஉ-கஉ. (ங) ரா-ஸங்க்ஷேபே.

| | |
|---|---|
| அவர்நடுவே வாழ் | அவர்களின்நடுவில் வாழ்கின்ற |
| திருமாற்கு | ஸ்ரியஃபதிக்கு |
| இங்கு | இவ்விபூதியில் |
| ஓர்பரிவர் இலையென்று | அஞ்ச-பரிவுடன் மங்களாஸாஸநம் பண்ணுவார் ஒருவருமில்லையென்று பயப்பட |
| எங்கும் | எவ்விடத்திலும் |
| பரிவர் உளர் என்ன | பரிவுள்ளவர்களிருக்கிறார்களென்று (எம்பெருமான்)கூற, |
| பயம்தீர்ந்த | அதனால் அச்சந்தீரப்பெற்ற |
| மாறன் | ஆழ்வாருடைய |
| வரிகழல்தாள் | வரியையுடைய வீரக்கழலோடே கூடின திருவடிகளை |
| சேர்ந்தவர் | அடைந்தவர்கள் |
| வாழ்வார் | உஜ்ஜீவிக்கப்பெறுவர்கள். (எ௩) |

அவ.-எழுபத்துமூன்றாம்பாட்டு. (அங்கமரர்பேண) இதில் - பரிவரில்லையென்று கலங்க, பரிவருளரென்று தேற்றினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார், - எங்ஙனேயென்னில்; "ஓர் கோல நீலநன்னெடுங்குன்றம் வருவதொப்பான்" என்றுகீழநுஸந்தித்தவனுடைய திவ்யவிக்ரஹ வைலக்ஷண்யத்திலே திருவுள்ளம்சென்று, "இப்படி ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களுக்குக்கொள்கலமான விவ்வடிவோடே ப்ரயோஜநாந்தரபரரான தேவர்கள் கார்யம்செய்கைக்காக ப்ரதிகூலர் வர்த்திக்கிற விஸ்ஸம்ஸாரத்திலே தனியே வந்தவதரித்து ஸஞ்சரியாநின்றான்; எங்கேயென்னதீங்கு வரத்தேடுகிறதோ" என்று இவர் வயிறெரிந்து ப(ஹ)யப்பட, "நமக்கு முமுக்ஷுக்களும்முக்தரும்நித்யருமுண்டு; "நாம்தாம்கடலைக்குளப்படிபோலே கலக்கவல்ல பெருமிடுக்கராகையாலே நமக்கொருகுறைகளுமில்லை" என்று அவனருளிச்செய்ய, அச்சந்தீருகிற அந்நிகிலார்த்தத்தை * அங்கமரர்பேண வித்யாதியாலே யருளிச்செய்கிறார்.

வ்யா.-(அங்கமரர்பேண) (க) "ஆங்காரவாரமது" என்னுமா போலே, தேசமது, தேசிகரவர்கள், பரிவின் மிகுதியது. நித்யவிபூதியிலே * பணியாவமரரான நித்யஸூரிகள் நித்யமங்களாஶாஸநம் பண்ண, அவர்கள் நடுவே வாழுகிற ஸ்ரீயஃபதியான ஸர்வேஶ்வரனுக்கு, அப்படி (உ) * பரமாத்துமனைச் சூழ்ந்திருந்தேத்துவாரிங்கொருவருமில்லையென்று பயப்பட. அதாவது-"அங்குமிங்கும்" என்றுதொடங்கி "அங்கஞ்சேரும் பூமகள் மண்மகளாய்ட்கள் சங்குசக்கரக்கையவனென்பர் சரணமே" என்றும் "கனலாழி பரணத்தின்படையேந்திய வீசற்காளாயே - மரணம் தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம்" என்றும், இச்சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணாதே, ஐஶ்வர்ய காமரும் ஆத்மாநுபவ காமருமாயிப்படியந்யபராய்ப்போருகையாலே, * பாரும் வில்லுங்கொண்டு பின்செல்லும் பரிவரொருவருமில்லையென்கிறது.

(பரிவரில்லையென்றஞ்ச) "உன்கோலம் காரெழில் காணலுற்றுழும் கொடியேற்கே" "திருநீலமணிபார்மேனியோடென் மனம் சூழவருவாரே" என்றும், "கருமாமேனியன்பினென்காதல்கலைக்கில" என்றும், "ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்" என்றும். (ங) "யந்நாராயவலமண்ணம் வநிதுவிடகாயா:-தநுராதாயவிசும்ணம் கநித்ரபிடகாதர:" (ச) "வ்யூஷ தஷூயந்ஷு: ணிஷ்-தக்ஷிணா ந ஜமாஜஹ - ப்ருஷ்டதஸ் து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோ ஹு ஜகா மஹ" என்னும்படி "உருவார் சக்கரம் சங்கு சுமந்திங்கும்மோடொருபாடுழல்வானோரடியானுமுளனென்றே" என்றும், "என்றிறஞ்சொல்லார் செய்வதென்" என்றும், "என்றேயென்னை யுன்னேரார் கோலத்திருந்தடிக்கீழ் நின்றேயாட்செய்ய நீகொண்டருள நினைப்பதுதான்" என்று-மங்களாஶாஸநரூப கைங்கர்யங்கொண்டருள நினைப்பிட்டருளுவதென்று அவனைக்கேட்டும், இப்படிக் கலக்கத்தாலே யஞ்ச.

(எங்கும் பரிவருளரென்ன) இங்குமங்குமெங்கும் நமக்குப்பரிவருளரென்ன, அதாவது-"கலக்கமில்லா நற்றவ முனிவர்" என்று தொடங்கி "என்செய்வதுரையீரே" என்று - இப்படி நம்மைப்பரிகைக்கு முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யருமுண்டு, நாம்தாம் மங்

(க) ச-திருவ-கூ. (உ) திருப்பல்லா.
(ங) ரா-அ.ஙக-உங. (ச) ரா-கக-க.

மூ.—வாராயவச்சமினி மால் தன்வலியினையும்
சீரார்பரிவுடன் சேர்த்தியையும்—பாருமெனத்
தானுகந்த மாறன்றாள் சார்நெஞ்சேசாராயேல்
மானிடவரைச் சார்ந்தமாய். (எசு)

தர்த்தைச் சொன்னது கூடி விர்த்துவைகூடாபி(வி)தமாம்படிசுடைந்தம ஞாபாரஞானசுகமென்றுதன் மிடுக்கைக்காட்ட (பயந்தீர்ந்தமாறன் வரிகழற்குள் சேர்ந்தவர் வாழ்வார்) ஆழ்வாரைப்போலே பயமும் பயநிவ்ருத்தியுமின்றிக்கே, ஆழ்வாருடைய, வார்த்தையுடைத்தான வீரக்கழலோடேகூடின திருவடிகளைச் சேர்ந்தவர்கள் நிர்ப்ப(ய)ராய் வாழப்பெறுவார். ஆழ்வாரிப்பாசுரத்தாலே பயந்தீர்க்கையாலே, யராய் இவர்களுக்கு வாழ்வேயாயிருக்கும். (எரு)

பதவுரை.

| | |
|---|---|
| இனி அச்சம்வாராமல் | (ஆழ்வார்) இனி அஞ்சவேண்டாமல் |
| மால் | ஸர்வேச்வரன் |
| தன்வலியினையும் | தன்னுடைய பராக்ரமாதிகளையும் |
| சீர் ஆர் பரிவுடன் சேர்த்தியையும் | மேன்மைபொருந்திய அன்பரோடு தான் சேர்ந்திருக்கும் படியையும் |
| பாருமென | பாரும் என்று காட்ட (க்கண்டு) |
| தான் உகந்த | தாம் உகந்தருளின |
| மாறன் தாள் | ஆழ்வாருடைய திருவடிகளை |
| நெஞ்சே சார் | மனமே! ஆச்ரயி; |
| சாராயேல் | அங்ஙனம் ஆச்ரயியாதொழிவாயா கில் |
| மானிடவரை சார்ந்துமாய் | மநுஷ்யரை ஆச்ரயித்து நசித்துப் போ. (எசு) |

அவ—எழுபத்துநாலாம்பாட்டு. (வாராமலச்சம்) இதில்—பயம் மறுவலிடாதபடி தன்சௌர்யவீர்யாதிகளையும், மஹாபாநுக்ரஹஸமர்த்தர் ஸஹவாஸத்தையுங் காட்டக்கண்டபடிபேசினவாழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இன்னமும்இவர்க்கு அம்பக்கல் பரிவினகனத்தாலே பயம் மறு

வவிடக்கூடுமென்று விசாரித்து, ப்ராதிகூலர்க்குக் கணிசிக்கவொண்ணாதபடி அரணுடைத்தான திருச்செங்குன்றூரிலே, ஸ்ருஷ்டிஸ்த்தித்யாதிகளை நிர்வஹிக்கவல்ல ஶக்திமான்களாய், ஶாபாநுக்ரஹஸமர்த்தராசைமூவாயிரம் ப்ராஹ்மணர் பரிந்துநோக்க, அவர்களும் குழைச்சரக்காம்படி (க) "விஶ்வாநி ராநவாநி ... ணாநி ஹந்ஶிஷ்நி ஹரிமணெஸூ-பிஶாசாந் தாநவாந் அங்குல்யக்ரேணதாந் ஹந்யாமிச்சந் ஹரிகணேஶ்வர" என்று ஸௌர்யவீர்ய பராக்ரமாதிகுணங்களோடே தானெழுந்தருளியிருக்கிறநிலையை ஸர்வேஶ்வரன் காட்டிக்கொடுக்க, அத்தாலேயச்சங்கெட்டு, அவன் வடிவழகிலே நெஞ்சைவைத்தநுபவித்து ஹ்ருஷ்டராகிற * வார்கடாவருவியிலர்த்தத்தை "வாராமலச்சமினி" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.---(வாராமலச்சமினிமால் தன் வலியிலையும்) "வார்கடாவருவி" என்றுதொடங்கி "கஞ்சனைத்தகர்த்த சீர்கொள்சிற்றுயன்" என்னுமளவும்சொன்ன ஸௌர்யவீர்யாதிகள்முதலான தன்ஶக்தியோக(ம)த்தையும் (சீரார்பரிவருடன் சேர்த்தியையும்) அத்தாலே-"அசுரர்வன்கையர் வெங்கூற்றை" என்னும்தன்மிடுக்கையும், "நல்லநான்மறையோர்" என்றும், "மனக்கொள்சீர் மூவாயிரவர்வண்சிவனுமயனும் தானுமொப்பார்வாழ்" என்றும், "அமர்ந்தசீர் மூவாயிரவர் வேதியர்கள் தம்பதியவனிதேவர் வாழ்வமர்ந்தமாயோனை" என்றும்-ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணராயிருக்கிற மூவாயிரம் ப்ராஹ்மணர் பரியவிருக்கிற விருப்பையும் தர்ஶியுமென்ன, தர்ஶித்து. "தேம்பணைபுடைசூழ் திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு" என்றும் "செறிகுலைவாழை கமுகுதெங்கணிசூழ் திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு" என்றும் "நல்லநீண்மாடத் திருசசெங்குன்றூரில் திருச்சிற்றாறு" என்றும் "கனக்கொள் திண்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு" என்றும் "கூரியவிச்சையோடொழுக்கம் நடைப்பலியியற்கைத் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறமர்ந்தநாதனே" என்றும், இப்படியரணையுடைத்தானவூரிலிருப்பையுமநுஸந்தித்துநிர்ப்ப(ஹ)யராய், "திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுட்கண்டவத்திருவடி" என்றுதொடங்கி "திகழவென்சிந்த

(க) ரா-யு-கஅ-உரு.

மூ,—மாயன் வடிவழகைக் காணாதவல்விடா
யாய் அறவிஞ்சியழுதலற்றும்—தூயபுக
ழுற்ற சடகோபனை நாமொன்றி நிற்கும்போதுபகல்
அற்றபொழுதானதெல்லியாம். (எரு)

---

புளானே'' என்னும்படிவடிவழகிலே நெஞ்சைவைத்தநுபவித்து ஹ்ருஷ்டராய், "தேனைநன்பாலைக்கன்னலையமுதை" என்று அவன் ரஸ்யதையையுமநுபவித்து. (தானுகந்தமாறன்) "நின்கோலங்காணெழில் காணலுற்றழும்" என்று - அழகிலேகலங்கினவர், இப்போது அவ்வழகையநுபவித்து ஹ்ருஷ்டரானவாழ்வார், (தாள்சார் நெஞ்சே) ஆழ்வார் திருவடிகளையபாஶ்ரயமாகவாஶ்ரயி, நெஞ்சே! (சாரயேல்) ஆஶ்ரயியாதிருப்புதியாகில். (மானிடவரைச்சார்ந்துமாய்) ப்ரக்ருதிவஶ்யரான மநுஷ்யரை யாஶ்ரயித்துநஶித்துப்போ. ஆழ்வார் திருவடிகளிலாஶ்ரயணம் உஜ்ஜீவநஹேது, ததிதராஶ்ரயணம் நாஶஹேதுவென்றதாயிற்று. (எச)

---

பதவுரை.

| | |
|---|---|
| மாயன் | ஸர்வேஶ்வரனுடைய |
| வடிவு அழகை | திவ்யவிக்ரஹஸௌந்தர்யத்தை |
| காணாத | ஸேவிக்கப்பெறாமையாலுண்டான |
| வல்விடாயாயது | மிக்கவருத்தமானது |
| அறவிஞ்சி | மிகவும் அதிகரித்து |
| அழுது அலற்றும் | அழுது அடைவுகெடக்கூப்பிடுகிற |
| தூயபுகழ்உற்ற | பரிசுத்தமான கீர்த்தியை யுடையரான |
| சடகோபனை | ஆழ்வாரை |
| நாம் ஒன்றிநிற்கும்போது | நாம்கிட்டிநின்று அநுபவிக்குங்காலம் |
| பகல் | பகலாயிருக்கும்; |
| அற்றபொழுதானது | அவ்வநுபவம் விச்சேதித்த காலமானது |
| எல்லி ஆம் | காளராத்ரியாயிருக்கும், (எரு) |

அவ,-எழுபத்தஞ்சாம்பாட்டு. (மாயன்வடிவழகை) இதில்-அவனுடையவடிவழகை யநுபவியாம லழுதவாழ்வார் ஆர்த்த்யதிஶய ஸூசகஸூக்தியை யநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்;கீழ்ப்ரஸ்துதமான வநுபவம் மாநஸாநுபவமாத்ரமாய்பாஹ்ய ஸம்ஶ்லேஷ யோக்யமல்லாமையாலேமிகவும் நோவுபட்டு,காட்டுத்தீ கதுவினாரைப்போலே பரிதப்த ஸி(ஹி)த்தகாத்ரராய், அவயவஶோபை, ஆபரணஶோபை, ஒப்பனையழகு,இவற்றுக்காஶ்ரயமான விக்ரஹம், இவற்றினுடைய வைலக்ஷண்யத்தைப் பலபடியாக வர்ணித்துக்கொண்டு பெருங்கூப்பீடாகக் கூப்பிடுகிற * மாயக்கூத்தனிலர்த்தத்தை, "மாயன் வடிவழகை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா,—(மாயன் வடிவழகை) ஸௌந்தர்ய ஶீலாதிகளாலாஶ்சர்யமான வவன் விக்ரஹ ஸௌந்தர்யாதிகளை, (க) "யஸ்தா விதப்தாஃ வஸுந்த்ரம் ஹ்ராதயந்த இவப்ரஜாஃ - கர்மாபிதப்தாஃ பர்ஜந்யம் ஹ்லாதயந்த மிவப்ரஜாஃ" என்னும்படி யநுபவிக்க. (காணுதவல்விடாயாய்) (உ) "கனகழல் காண்பதென்று கொல் கண்களே" என்றும், (ரு) "மெய்க்கொள்ளக் காணவிரும்புமென் கண்களே" என்றும், இப்படிப்பாரிப்பையுடைய கண்களின்விடாய்தீரப்பருகப் பெறாமையாலே;- ப்ரத்யக்ஷமாகக் காணப்- பெறாமையாலே மிக்க விடாயையுடையராய்· (அதறவிஞ்சி) * காண வாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்துபசையற்று, "கீழில் விடாயெல்லாம் குளப்படி" என்னும்படி கடல்போலே அது அ(ஹி)பிவ்ருத்தமாய், அத்தாலே (அழுதலற்றும்) பிறந்த விடாய்தீரவந்து கலவாமையாலே பாலரைப்போலே யழுது, அடைவுகெடக்கூப்பிடும்,

அதாவது-"வாசத்தடம்போல் வருவானேபொருநாள் காணவாராய்" என்றும், "கருமாமாணிக்க நாள்நன்மலைபோல்சுடர்ச்சோதி முடிசேர் சென்னியம்மானே - இரங்கி யொருநாள் நீயந்தோ காணவாராய்" என்றும், "முடிசேர் சென்னியம்மா" என்று தொடங்கி "பெருமானே யென்றென்றேங்கி யழுதக்கால்" "படிசேர் மகரக்குழைகளும்" என்றுதொடங்கி "தூநீர் முகில்போல் தோன்றாயே" என்றும் "ஆளக்கூப்பிட் டழைத்தக்கால்- தொண்டனேனுன் கழல்

(க) ரா அ-ரு-உக. (உ) தி-வாய்-ரு-அ ௯௦. (ரு) தி-வாய்-ரு-அ-ச,

மூ:—எல்லிபகல்நடந்த விந்தவிடாய் தீருகைக்கு
மெல்லவந்து தான் கலக்கவேணுமென—நல்லவர்கள்
மன்னு கடித்தானத்தே மாலிருக்க மாறன்கண்டு
இந்நிலையைச் சொன்னானிருந்து. (எசு)

---

காணவொருநாள் வந்து தோன்றாயே" என்றும், "முகப்பே கூவிப் பணிகொள்ளாய்" என்றும், "நற்றேர்த்தனிப்பாகா வாராயிதுவோ பொருத்தம்" என்றும், "இருஞ்சிறைப்புள்ளதுவே கொடியா வுயர்த்தானே - உன்னை யெங்கே காண்கேனே" என்றும், இப்படி (க) "[illegible] - கதா த்ரக்ஷ்யாமி ராமஸ்ய வதநம் புஷ்கரேக்ஷணம்" என்னும்படி.

(அழுதலற்றுந் தூயபுகழுற்ற) ஸௌந்தர்யாதிகளை யநுபவிக்கப்பெறுமையாலே யழுதலற்றும் புகழை யுடையராய். இதரவிஷயாலாபத்தாலேக்லேசிக்கை அயஶஸ்ஸாய், பகவதலாபத்தாலேக்லேசிக்கை ஶ்லாக்யமானயஶஸ்ஸாயிறேயிருப்பது. (தூயபுகழுற்ற சடகோபனை நாமொன்றி நிற்கும்போது பகல்) இப்படியானயஶஸ்ஸையுடையரானவாழ்வாரை நாம் அநந்யப்ரயோஜநராய்க் கிட்டி நின்றநுபவிக்கும் காலம்பகலாயிருக்கும். * பராங்குஶாதித்ய ஸந்நிதியிறே. (அற்றபொழுதானது) அவனுடைய வநுபவ விச்சேத காலமானது. (எல்லியாம்) ஸம்ஸாரமாகிற காளராத்ரியாம். (எடு)

---

பதவுரை.

| | |
|---|---|
| எல்லி பகல் நடந்த | இராப்பகல்களாய் வர்த்தி(ஸி-்)த்த |
| இந்தவிடாய் தீருகைக்கு | இந்த வருத்தம் நீங்குகைக்காக |
| மெல்லவந்து தான்கலக்கவேணும் என | மையவந்துதான் அநுபவிக்கவேணுமென்று நினைத்து |
| நல்லவர்கள் மன்னு | நற்புகழ் வேதியர்கள் நிலைபெற்று |
| கடித்தானத்தே | திருக்கடித்தானத்திலே [வாழ்கிற |
| மால் இருக்க | ஸர்வேஶ்வரன்எழுந்தருளியிருக்க |
| மாறன் கண்டு | (அவ்விருப்பை) ஆழ்வார்ஸேவித்து |
| இருந்து | நிலைபெற்றிருந்து |
| இந்நிலையைச் சொன்னான் | இந்த ஸ்வபாவத்தை அருளிச்செய்தார், (எசு) |

---

(க) ரா-அ-சுக-அ.

அவ,—எழுபத்தாறாம்பாட்டு. (எல்லிபகல்நடந்த)' இவர் [illegible]ய்தீர அடுத்தணித்தாகவந்திருந்து, பின்புதம்முடனே கலந்தபடி பேசின வாழ்வார் பாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார். எங்ஙனே யென்னில்; இவருடைய பெருவிடாய் கெடும்படி இவரோடே வந்து கலந்து ஸம்ஶ்லேஷிக்கக் கோலி, அடுத்தணித்தாகத் திருக்கடித்தானத்திலே வந்திருந்து தம்பக்கலிலே அத்ய (ஹி) பிநிவிஷ்டனா யிருக்கிறபடியைஅவன்காட்டிக் கொடுக்க அத்தை யநுஸந்தித்து ஹ்ருஷ்டராகிற * எல்லியுங் காலையிலர்த்தத்தை "எல்லிபகல்" என்று தொடங்கியருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(எல்லிபகல் நடந்த விந்தவிடாய் தீருகைக்கு மெல்ல வந்துதான் கலக்கவேணுமென) ராத்ரிந்திவமநுவர்த்தித்த வார்த்திஸமிக்கைக்கு, முந்தகதியாய் வந்தநுபவிக்கவேணுமென்று நினைத்து முந்துற (௧) "ஸாரஆஜாஸ்ரமேசுஷா - பரத்வாஜாஸ்ரமங் கத்வா" என்னுமாபோலே. (நல்லவர்கள் மன்னுகடித்தானத்தே 'மாவிருக்க மாறன் கண்டு) "நற்புகழ் வேதியர் நான்மறை நின்றெதிர் கற்பகச்சோலைத் திருக்கடித்தானம்" என்றும் "செல்வர்கள்வாழும் திருக்கடித்தானம்" என்றும் "தேசத்தமரர் திருக்கடித்தானம்"என்றும், அங்குற்றைக்கநுகூலரானவர்கள் நித்யவாஸம்பண்ணும்திருக்கடித்தானத்திலே தம்மை விஷயீகரிக்க ஸர்வேஶ்வரன் வந்திருக்க.

அவ்விருப்பைக் கண்டவாழ்வார். (இந்நிலையைச் சொன்னுனிருந்து) அதாவது - "திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையு மொருக்கடுத்துள்ளே யுறையும்பிரான்" என்றும் "உள்ளந்தோறும் தித்திப்பான் திருவமர் மார்வன் திருக்கடித்தானத்தை மருவியுறைகின்றமாயப்பிரான்"என்றும் "தேசத்தமரர்-வாசப்பொழில் மன்னுகோயில் கொண்டானே" என்றும் "நேசத்தினால்நெஞ்சநாடு குடிகொண்டான்" என்றும், "கோயில்கொண்டான்றன் திருக்கடித்தானத்தைக் கோயில் கொண்டானதனோடு மென்னெஞ்சகம்" என்றும் "என்னெஞ்சும் திருக்கடித்தான நகரும் தனதாயப்பதியே" என்றும் "அற்புதன் நாராயணனரி வாமனன்நிற்பது - கற்பகச்சோலைத் திருக்கடித்தானம் - மேவியிருப்ப தென்னெஞ்சகம்" என்றும் இப்படி யிங்குற்றை யிருப்புத்தம்மை விடாய்கெட விஷயீ

(௧) ரா-ஸங்க்ஷேபே,

மூ.—இருந்தவன்றான் வந்திங்கிவரெண்ணமெல்லாம்
திருந்தவிவர் தந்திறத்தே செய்து—பொருந்தக்
கலந்தினியனாய் நிற்கக்கண்ட சடகோபர்
கலந்தநெறிகட்டுரைத்தார்கண்டு. (எஎ)

---

கரிக்கைக்கென்றும் இஸ்ஸ்வபாவத்தைப் பொருந்தி யிருந்தருளிச் செய்தாரென்கை. அவன் வரவாற்றாமே. *மாயக்கூத்தினில்விடாய் தீர்ந்துபொருந்தி யிருந்தருளிச் செய்தாரென்கை. (எசு)

---

பதவுரை.

| | |
|---|---|
| இருந்தவன் தான் | திருக்கடித்தானத்திலே யிருந்தஸர்வேஸ்வரனே |
| இங்கு வந்து | இவ்விடத்தேறவந்து |
| இவர் எண்ணம் எல்லாம் திருந்த | இவருடைய மநோரதம் முழுதும் முற்றுப்பெற |
| இவர் தம் திறத்தே செய்து | இவரிடத்தே கிருபைசெய்து |
| பொருந்தக்கலந்து | ஒருநீராய்க்கலந்து |
| இனியனாய் நிற்கக்கண்ட | இனியனாய் நிற்கும்படியை ஸேவித்த |
| சடகோபர் | ஆழ்வார் |
| கலந்தநெறி | அவன் தம்மோடுவந்துகலந்த ப்ரகாரத்தை |
| கண்டு | திருவுள்ளத்தாலேகண்டு |
| கட்டுரைத்தார் | அருளிச்செய்தார், (எஎ) |

அவ.-எழுபத்தேழாம்பாட்டு. (இருந்தவன்) இதில்—இவர் கருத்தைத்தான் கைக்கொண்டு இவருடனே கலந்தபடி பேசினவாழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்;- இவர், வெள்ளக்கேட்டாலே யழியாதபடி திருக்கடித்தானத்திருப்பைக்காட்டி ஸம்ஸ்லேஷரஸத்தை ஸாத்மிப்பித்த வநந்தரம், ஸ்வவிஷயத்திலர்த்தித்வ ப்ரமுகமான விவர் மநோரதத்தையெல்லாம்தான் இவர் பக்கலிலே பண்ணிக்கொண்டு இவரோடே பூர்ணஸம்ஸ்லேஷம்பண்ணி, அந்தஸம்ஸ்லேஷ ஜநிதஹர்ஷப்ரகர்ஷத்தாலே

புறுக்கணிந்த திவ்யாவயவங்களையும், நீலபர்வதம்போலே வொளி விடுகிற வடிவையுமுடையனாயிருக்கிறபடியை மண்டியநுபவித்து ஹ்ருஷ்டராய்ச்செல்லுகிற * இருத்தும் வியந்திலர்த்தத்தை, "இருந்தவன்தான் வந்து" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—( இருந்தவன் தான்வந்து ) திருக்கடித்தானத்திலே யிருந்ததான், இவரிருந்தவளவும் மெள்ளவந்து. (இவரெண்ணமெல்லாம் திருந்தவிவர் தந்திறத்தே செய்து) இவரெண்ணமாவது - "என்றன்கருத்தையுற வீற்றிருந்தான்" என்று (க) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிற வாழ்வார் திருவுள்ளக்கருத்தைத் தான் கைக்கொண்டபடியென்கை. (திருந்தவிவர் தந்திறத்தேசெய்து) தனக்காஶ்ரிதபாரதந்த்ர்யம் ஸ்வரூபமாகையாலே, நன்றாக விவர் விஷயத்திலேசெய்து. தன்னைமுற்றூட்டாக வநுபவிக்கும் படியாக்கிவைத்து. (பொருந்தக்கலந்து) "நாம் நித்யஸூரிகளுக்கவ்வருகாயிருப்புதோம், இவர் நித்ய ஸம்ஸாரிகளுக்கவ்வருகாக வெண்ணியிருப்பர்" என்றுவாசிவையாமல் "சிறியேனுடைச்சிந்தையுள்" "தூயசுடர்ச்சோதி தனதென்னுள் வைத்தான்"என்னும்படி ஒருநீராகக்கலந்து. ( இனியனாயிருக்கக் கண்டசடகோபர் ) "திகழுமணிக்குன்றமொன்றே பொத்துநின்றான்" "கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல் திருமார்வுகால் கண்கைசெவ்வாயுந் தியானே" என்றும், "செவ்வாய்முறுவலோடெனத்துள்ளத் திருந்த வவ்வாயன்றியானறியேன்"என்றும்,இப்படியாயிற்றுப் பெறும் பேறுபெற்றானாயினியனாயிருந்தபடி யென்கை. (கண்டசடகோபர்) இப்படி அவனினியனாயிருந்த படியைக் கண்டநுபவித்தவாழ்வார்.

(கலந்தநெறிகட்டுரைத்தார்கண்டு) அவன் தம்முடனேவந்துகலந்தபடியைத்திருவுள்ளத்தாலேகண்டருளிச்செய்தார். கலக்கைக்கு அவன் க்ருபையேயுபாயம், இத்தலையிலுள்ளது அநுமதிமாத்ரமே. கலந்தநெறிகட்டுரைக்கையாவது-(உ)"ஸமேத்யாந்யோந்யஸம்ஸ்லேஷேண அந்யோந்ய மபிவீக்ஷந்தௌ" என்னும்படி "கண்டுகொண்டு - இருந்தான்" "தருந்தானருள் தானினியானறியேன்" (௩) "கிஞ்சன வ்யாஜீக்ருத்ய மோஹயம் - கிந்துஸ்யாச்சித்தமோஹோயம்" "மருள் தானீதோ" "மாயமயக்குமயக்கான்" "திகழும்தன்திருவருள்செய்தே" "திகழுந்தன்திருவருள்செய்து" "வெறிதேயருள் செய்வர்" என்றருளிச்செய்தவிவையென்கை.

(க) திருவாய். ௨-௩-௪, (௨) [illegible] (௩) [illegible]

ரூ. கண்ணிறைய வந்துகலந்தமாலிக்கலவி
திண்ணிலையாவேணுமெனச்சிந்தித்துத்-தண்ணிதெனு
மாருயிரினேற்றமதுகாட்ட வாய்ந்துரைத்தான்
காரிமாறன்றன்கருத்து. (எஅ)

பதவுரை.

| | |
|---|---|
| கண்நிறையவந்து கலந்தமால் | கண்கள் நிறையவந்து கலந்த எம்பெருமான் |
| இக்கலவி | இந்தக்கலவியானது |
| திண்ணிலையாவேணும் எனச்சிந்தித்து | த்ருடமாயிருக்க வேணுமென்றெண்ண, |
| தண்ணிது எனும் | சிறியதென்கிற |
| ஆர் உயிரின் | அருமையாகிய ஆத்மாவின் |
| ஏற்றமது காட்ட | பெருமையைக்காட்டியருள |
| காரிமாறன் | ஆழ்வார் |
| ஆய்ந்து | ஆராய்ந்து |
| தன் கருத்து உரைத்தான் | தமது திருவுள்ளக்கருத்தை அருளிச்செய்தார். (எஅ) |

அவ.—எழுபத்தெட்டாம்பாட்டு. (கண்ணிறையவந்து) இதில் ஆத்மஸ்வரூபவைலக்ஷண்யத்தை எம்பெருமான் காட்டக்கண்டு பேசினவாழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்; * இருத்தும் வியந்தில் பெரிய ப்ரீதியோடே யநுபவிக்கிறவளவில் "சிறியேனுடைச்சிந்தையுள்" என்றுநம் பெருமைக்கெதிர்த்தட்டான தம் சிறுமையை யநுஸந்தித்தார்; இவர் இன்னும் * வளவேழுலகு தலையெடுத்து நம்மைவிட்டகலவுங்கூடும், அதுக்கிடமறும்படி, "ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் நித்யமாய் ஸ்ரீஸ்தநம்போலேயும் ஸ்ரீகௌஸ்துபம்போலேயும் நமக்கு நித்யபோக்யமாய்க் காணுமிவ்வாத்மவஸ்து இருப்பது" என்று ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யமடியாக வவன் காட்டிக்கொடுக்க, அத்தை யநுஸந்தித்து ப்ரீதராகிற * கண்கள் சிவந்திலர்த்தத்தை "கண்ணிறைய" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-(கண்ணிறையவந்து கலந்தமால்) * கண்ணும் வாயும் துவர்ந்த விவருடைய கண்ணிறையும்படி வந்து ஸம்ஶ்லேஷித்த வாஶ்ரிதவ்யாமுக்த (ஞ) னான ஸர்வேஶ்வரன். (இக்கலவி) * இருத்தும் வியந்திருலிந்த ஸம்ஶ்லேஷம். (திண்ணிலையாவேனுமெனச்சிந்தித்து) த்ருடஸ்வபாவத்தை யுடைத்தாகவேணுமென்றெண்ணி (தண்ணிதெனுமாருயிரினேற்றமது காட்ட) இவர் "சிறியேனுடைச்சிந்தை" என்றநுஸந்தித்துப்போருகிற வாத்மாவினுடைய பெருமையானதைக் காட்டியருள. (ஆய்ந்துரைத்தான்) ஆத்மஸ்வரூபவைலக்ஷண்யத்தை யாராய்ந்தருளிச்செய்தார்.

அதாவது - (க) "ஶ்ரவஸ்-தாஸஸ்ய" (உ) "ஸோஹம் - தாஸோஹம்" என்னும்படி, "கண்கள்சிவந்து" என்றுதொடங்கி "அடியேனுள்ளான்" என்றும் "அடியேனுள்ளான்" என்றுதொடங்கி "உணர்விலும்பரொருவனே" என்றும் "உணர்விலும்பரொருவனே" என்றுதொடங்கி "என்னுணர்விலுள்ளே யிருத்தினேன்" என்று இரண்டரைப்பாட்டாலும் தனக்கு ஶ்ரீகௌஸ்துபம்போலே ஶேஷமாயிருக்கிற படியையும், "உணர்வைப்பெறவூர்ந்து" என்றும், "தேனும்பாலும் கன்னலுமமுதுமாகித்தித்தி தென்னூனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றையுணர்ந்தேனே" என்றும், "நன்றாய் ஞானம்கடந்ததே" என்றும், "தெருளும் மருளும்மாய்த்தோமே" என்றும் - ஆத்மாவினுடைய ப்ரக்ருதே: பரத்வமும். ஜ்ஞாத்ருத்வாதிகளும் போக்யதையும் ஜ்ஞாநாநந்தத்வமும் முதலாக வருளிச்செய்தவையென்கை.

(அதுகாட்டவாய்ந்துரைத்தான் காரிமாறன் தன்கருத்து) ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை யெம்பெருமான்காட்ட, அத்தையாராய்ந்தருளிச்செய்தாராழ்வார் தன்திருவுள்ளக்கருத்தாலே யென்னுதல்; இப்படி ஸ்வரூபவைலக்ஷண்யத்தை யாராய்ந்தருளிச்செய்யும்படியாயிற்று ஆழ்வார் திருவுள்ளக்கருத்தென்னுதல்; அப்போது, "ஆய்ந்துரைத்த காரிமாறன் தன் கருத்து" என்றாகக்கடவது.

(க) பார-யோக (உ) [illegible]

மூ.—கருமால் திறத்திலொரு கன்னிகையாமாற
னொருமா கலவியுரைப்பால்—திரமாக
வன்னியருக்காகாதவன் றனக்கே யாகுமுயிர்
இந்நிலையையோருநெடிதா. (எகூ)

பதவுரை.

| | |
|---|---|
| கருமால்திறத்தில் | ஸ்ரீ க்ருஷ்ணபகவான் விஷயத்தில் |
| ஒருகன்னிகையாம் மாறன் | ஒரு கந்யகாவஸ்தையை யடைந்த ஆழ்வார் |
| ஒருமா கலவி உரைப்பால் | அத்விதீயமாய் விலக்ஷணமான ஸம்ஶ்லேஷ லக்ஷணங்களைத் தோழி பேச்சாலே அருளிச்செய்யப் புகுகையாலே |
| திரம் ஆக | ஸ்திரமாக |
| உயிர் அந்நியர்க்கு ஆகாது | ப்ராப்தஶேஷிக்கே ஶேஷமாகிற ஆத்மஸ்வரூப நிஷ்டை பிறர்க்கு ஶேஷமாகாமல் |
| அவன் தனக்கே ஆகும் இந்நிலையை | அவனுக்கே ஶேஷமாகுமிந்த நிலைமையை |
| நெடிதா | தீர்க்கமாக |
| ஓரும் | ஆராயுங்கள், (எகூ) |

அவ.—எழுபத்தொன்பதாம்பாட்டு (கருமால் திறத்தில்) இதில்-ஆத்மாவினுடைய அநந்யஶேஷத்வ நிவ்ருத்தியை யாழ்வாரருளிச் செய்தபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இப்படி விலக்ஷணமான வாத்மஸ்வருபந்தான் தனக்கு முரித்தன்றி க்கே அவனுக்கே அநந்யார்ஹ ஶேஷமாயிருக்கும்படியை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * கருமாணிக்க மலைமேலர்த்தத்தை "கருமால்திறத்தில்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-(கருமால்திறத்திலொரு கன்னிகையாம் மாறன்) நீல நிறத்தையுடையனாய், ஆஶ்ரிதவ்யாமுக்தனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் அநந்யஶேஷத்வமில்லாத கந்யகாவஸ்தையை பஜித்தவாழ்வார். "கருமாணிக்கமலை" என்றத்தைக் கடாக்ஷித்தபடி. (ஒருமா கலவியுரைப்பால்) அத்விதீயமாய், விலக்ஷணமான ஸம்ஶ்லேஷ லக்ஷணங்களைத் தோழிபேச்சாலே யருளிச்செய்யப்புகுகையாலே,

மூ;—நெடுமாலழகுதனில் நீள்குணத்திலீடு
படுமாநிலையுடைய பத்தர்க்கடிமைதனில்
எல்லைநிலந்தானாக வெண்ணினான் மாறனது
தொல்லைநிலைமான நிலைகொண்டு. (௮௦)

---

அதாவது - 'திருப்புலியூர் குருமாயன் பேரன்றிப் பேச்சிலள்' என்றும், "திருப்புலியூர் வளமே - புகழும்" என்றும், "அப்பன் திருவருள் மூழ்கினள் - புனையிழைகளணிவும் ஆடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மையதன்று" என்றும், 'திருவருட்கமுகொண் பழத்தமெல்லியிலைச் செவ்விதழே - திருவருளகளும் சேர்ந்தமைக் கடையாளம் திருந்தவுள" என்றும், இவற்றாலே "கண்ணன் றாளடைந்தாளிம்மடவரல்" என்றும், "படவரவணையான்றன் நாமமல்லால் பரவாளிவள்" என்றும், "திருப்புலியூர்புகழன்றிமற்று - பரவாளிவள்" என்றும் "திருப்புலியூர் நின்றமாயப்பிரான் திருவருளாமிவள்நேர் பட்டதே - அன்றிமற்றொருபாயமென்னிவளந்தண்டுழாய்கமழ்தல்" என்றும், இப்படிக்கல்பிக்குறிகளைக் கூறப் புகுந்தையாலேயென்கை.

(திருமாலவன்னியர்க்காகாது) (க) "ஸம்ந்ர ஜோவயாஸ்யாமி ஸுஜாதஸ்யகஸ்யசித் - கதம்நாமோபதாஸ்யாமி புஜமந்யஸ்யகஸ்யசித்" என்கிறபடியே நிஸ்சயமாக அந்யருக்கு சேஷமாகலாகாது, ப்ராப்தசேஷியானவனுக்கே சேஷமாகிற வாத்மஸ்வரூபத்தின் நிஷ்டையை. (ஒருநெடிதா) ஆராய்ந்துபோருங்கோள்! தீர்க்கமாகவென்னுதல்; தீர்க்கமாகவிசாரியென்று தன் திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறாராதல். (௭௧)

---

பதவுரை.

| | |
|---|---|
| நெடுமால் அழகுதனில் | ஸர்வேஸ்வரனுடையவடிவழகிலும் |
| நீள் குணத்தில் | பெரிய ஸௌஹார்த்த குணத்திலும் |
| ஈடுபடும் | ஈடுபடுகின்ற |
| மாநிலைஉடைய | பெரிய ஸ்வபாவத்தையுடைய |

---

(க) ரா-ஸு-ஸ-௨௧-௧௫

| | |
|---|---|
| பத்தர்க்கு அடிமைதனில் | பாகவதர்களின் திறத்தில் அடிமையாமளவுமன்றிக்கே (அவ்வடிமைக்கு) |
| எல்லைநிலம்தான் ஆக எண்ணினான் | எல்லைநிலம்தாமாக நினைத்தருளினார்; (அவர்யாரென்னில்,) |
| மாறன் | ஆழ்வார், (ஏனெனில்;) |
| அது கொல்லை நிலம் ஆனநிலை கொண்டு | அந்த பாகவதசேஷத்வம் எல்லை கடந்த உத்தமபுருஷார்த்தம் என்கிற நிஷ்டையினால், (அ0) |

அவ;—(நெடுமாலழகுதனில்) இதில், அநந்யார்ஹசேஷத்வத்துக் கெல்லை, பாகவத சேஷத்வ பர்யந்தமா யிருக்குமென் றாழ்வாரருளிச் செய்த பாசுரத்தை யநுவதித் தருளிச்செய்கிறார், அதெங்ஙனேயென்னில், கீழ் ஆத்மாவுக்குச்சொன்னபகவதநந்யார்ஹ சேஷத்வந்தான் நிலைநிற்பது, பாகவத சேஷத்வ பர்யந்தமானாலென்னுமிடத்தை யநுஸந்தித்து "அவனுடைய ஸௌந்தர்ய சீலாதிகுண சேஷ்டிதங்களிலே தோற்றடிமை புக்கிருக்கும் பாகவதர்களுக்குச் சேஷமா யிருக்குமிருப்பே யெனக்கு புருஷார்த்தம்;ஐஶ்வர்ய கைவல்ய பகவல்லாபங்களாகிற புருஷார்த்தங்கள்நான் பற்றின பாகவத சேஷத்வமாகிற பரம புருஷார்த்தத் துக்குத் தனித்தனியும் திரளவும் ஒப்பாகமாட்டாது; ஆனபின்பு எனக்கு மென்னுடையார்க்குமிப்புருஷார்த்தம் காலதத்வ முள்ளதனையும்நித்யஸித்தமாய்ச் செல்லவேணும்,' என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ப்ரார்த்தித்துத் தலைக்கட்டுகிற * நெடுமாற்கடிமையிலர்த்தத்தை "நெடுமாலழகுதனில்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—நெடுமாலழகு தனில் நீள் குணத்திலீடுபடுமா நிலையுடையபத்தர்) அதாவது, புயல்மேகம்போல் திருமேனியம்மான் புனைபூம் கழலடிக்கீழ்ச்சயமே யடிமை தலைநின்றார் திருத்தாள் என்றும், "அவனடியார் சிறுமாமனிசராயென்னை யாண்டாரிங்கேதிரிய-செந்தாமரைக்கண் திருக்குறளன் நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப்புகுதல்-உறுமோ" என்றும், "தனிமாப்புகழே யெஞ்ஞான்றும்" என்று தொடங்கி, தனியாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப்புகுதலின்றி யவ

மூ.—கொண்டபெண்டிர் தான் முதலாக்கூறுமுற்றார்கன்மத்தால்
அண்டினவரென்றேயவரைவிட்டு—தொண்டருடன்
சேர்க்குந்திருமாலைச் சேருமென்றானார்க்குமிதம்
பார்க்கும் புகழ்மாறன்பண்பு. (அக)

---

ணடியார் நனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கு" என்றும், "கோளுமுடையமணிமலைபோற்கிடந்தான் தமர்கள்கூட்டமே நாளும் வாய்க்கநங்கட்கு" என்றும், 'தமர்கள்கூட்டவல்வினையை' என்றுதொடங்கி "கோதிலடியார் தமர்கள்தமர்கள் தமர்கள் தமர்களாம்சதிரேவாய்க்கதமியேற்கு" என்றும், "நீக்கமில்லாவடியார் தம்மடியாரடியாரெங்கோக்களவர்க்கே குடிகளாய்ச்செல்லும்நல்லகோட்பாடு - வாய்க்கதமியேற்கு" என்றும், இப்படி உத்துங்கதத்வமான வடிவழகிலும், "தனிமாப்புகழே" என்கிறதீக்(ஷ)கஸௌஹார்த(ஈ)குணத்திலும் ஈடுபட்டிருக்கும்;

(பத்தராவியைதனியெல்லைநிலம் தானுகவெண்ணினான் மாறன்) பக்தர்கள் திறத்திலடிமையாமளவு மன்றிக்கே அவ்வடிமையில் ஸீமாபூமிதாமம்படி பறுஸந்தித்தாராழ்வார் (அதுகொல்லைநிலமான நிலைகொண்டு) அந்தபாகவதசேஷத்வம் ஸீமாநிலங்கியான உத்தமபுருஷார்த்தமென்கிற நிஷ்டையைக்கொண்டு, எல்லைநிலம் தானுக வெண்ணினான். (க) "ஶத்ருக்நோநித்ய ஶத்ருஹ்ந:-ஶத்ருக்நோநித்யஶத்ருக்ந:" என்கிறபடியே "வியன்மூவுலகுபெறினும்" என்கிறவைஶ்வர்யம் ஆத்மப்ராப்தியளவாயிருக்கும்; "தானேதானேயானாலும்" என்கிற ஆத்மப்ராப்தி "செந்தாமரைக்கண் திருக்குறளனு மாவிரைநாண்மலரடிக்கீழ் புகுதல்" என்கிறபகவத்ப்ராப்தியளவாயிருக்கும், இந்தபகவத்ப்ராப்தி பாகவதப்ராப்தி ஸாபேக்ஷமாயிருக்கும்; இந்தப்புருஷார்த்தத்துக்கு மேலெல்லையில்லை; ஆகையிறே "முழுதமுறுமோ" என்றது. (அக)

பதவுரை.

ஆர்க்கும் — எத்தனை அறிவில்லாதவர்கள் விஷயத்திலும்

இதம்பார்க்கும் — ஹிதத்தையே செய்யப்பார்க்கிற

---

(க ரா-அ க-க.

| | |
|---|---|
| புகழ் | கீர்த்தியையுடைய |
| மாறன் | ஆழ்வார், |
| பண்டு | முற்காலத்தில் |
| கொண்டபெண்டிர்தான் முதலாக்கூறும் | கொண்டமனைவி முதலாகச்சொல்லப்படுகிற |
| உற்றார் | பந்துவர்க்கமெல்லாம் |
| கன்மத்தால் அண்டினவர்என்றே | கர்மோபாதிகமாக அடைந்தவர்களென்றே |
| அவரை விட்டு | அந்தஔபாதிகபந்துக்களைவிட்டு |
| தொண்டருடன் சேர்க்கும் திருமாலை | தன்னை ஆஶ்ரயித்தவர்களைத் தனக்கு ஶேஷபூதரானவர்களோடே சேர்க்கும் ஶ்ரியஃபதியை |
| சேரும் என்றான் | ஆஶ்ரியியுங்களென்றருளிச் செய்தார். (அக) |

அவ.—எண்பத்தோராம்பாட்டு. (கொண்ட பெண்டிர்தான்முதலா) இதில்ஸோபாதி(யி)கபந்துக்களைவிட்டுநிருபாதிகபந்துவைப் பற்றச்சொல்லுகிற வாழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; தன்னைப்பற்றினாரைத்தனக்கபி(ஹி)மதரானபாகவதர்கள் திருவடிகளிலேசேர்த்துரக்ஷிக்கும்ஸர்வேஶ்வரனே ப்ராப்யமும் ப்ராபகமும் ஸர்வவிதபந்துவும்; அல்லாதாரடங்கலும் ஔபாதிக பந்துக்கள்; ஆனபின்பு, அவனையொழிந்த ஔபாதிக பந்துக்களைவிட்டு, (க) "ஸுராதாஸத்ராவஸஸூஹ்ருவிதா வஸ்ச ராவவ:—ப்ராதா பர்த்தா ச பந்துஶ்ச பிதா ச மம ராகவ:" என்னும்படி நிருபாதிக ஸர்வவிதபந்துமான ஸர்வேஶ்வரனுக்கடிமை புக்குஉஜ்ஜீவித்துப்பொருங்கோளென்றுப்ரீதிப்ரகர்ஷத்தாலேபிறரைக்குறித்துஉபதேசிக்கிற *கொண்டபெண்டிரிலர்த்தத்தை "கொண்டபெண்டிர்தான் முதலா" இத்பாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-(கொண்டபெண்டிர்தான் முதலாக்கூறுமுற்றார்) கையில் தநத்தையழியமாறிக்கொண்டஸ்த்ரீகள்; கொண்டவென்று-அதின் ஔபாதிகத்வம் தோற்றுகிறது; தானென்று-கொண்டபெண்டிரில்

(க) ரா-அ.

ப்ராதாந்யம் தோற்றுகிறது. இப்படி களத்ரபுத்ராதியாகச்சொல்லப் படுகிற பந்துவர்க்கமெல்லாம், "கூடுமுற்றார்" என்றுபாடமானபோது ஆகந்துகமாக வந்துகூடினவர்களென்கிறது. (கன்மத்தாலுண்டினவரென்றே யவரைவிட்டு) கர்மௌபாதிகமாக வடைந்தவர்களென்றே ஔபாதிக பந்துக்களானவர்களைவிட்டு, "கொண்டபெண்டிர் மக்களுற்றார்" என்றுதொடங்கியருளிச்செய்ததை யநுவதித்தருளிச்செய்தபடி. (தொண்டருடன்சேர்க்குந்திருமாலைச்சேருமென்றான்) தன்னையாஸ்ரயித்தவர்களைத்தனக்கு ஶேஷபூதரானவர்களோடே சேர்க்கும் ஸ்ரியஃபதியை யாஸ்ரயியுங்கோ ளென்றார். (ஆர்க்குமிதம்பார்க்கும் புகழ்மாறன்பண்டு) எத்தனையறிவில்லாதவர்கள் விஷயத்திலும்ஹிதத்தைத்தம்முடைய தீர்க்கதர்ஶித்வத்தாலே தர்ஶிக்கும் யஶஸ்ஸையுடையரான வாழ்வார் முற்காலத்திலே. இப்படி ஆத்மஹித தர்ஶியான விவருமொருவரே யென்றபடி.

ஆர்க்குமிதம்பார்க்கையாவது-"கொண்டபெண்டிர்" என்றுதொடங்கி 'தொண்டரோமாயுய்யலல்லாலில்லைகண்டீர் துணை" என்றும், "துணையும் சார்வுமாகுவார்போல்" என்றுதொடங்கி "புணைபென்றுய்யப்போகிலல்லாலில்லை கண்டீர்பொருள்" என்றும், "பொருள்கையுண்டாய்" என்றுதொடங்கி "அருள்கொள்ளாளாயுய்யலல்லாலில்லைகண்டீரரணே" என்றும், " அரணமாவர் " என்றுதொடங்கி, " சரணென்றுய்யப்போகிலல்லாலில்லை கண்டீர்சதிரே " என்றும், "சதிரம்" என்றுதொடங்கி "எதிர்கொள்ளாளாயுய்யலல்லாலில்லை கண்டீரின்பமே" என்றும் "இல்லைகண்டீரின்பம்" என்றுதொடங்கி "சொல்லியுய்யப்போகிலல்லால்மற்றொன்றில்லைசுருக்கே" என்றும்,

"மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம்" என்றுதொடங்கி "வடமதுரைப்பிறந்தான் குற்றமில்சீர்கற்றுவைகல் வாழ்தல் கண்டீர்குணமே" என்றும், "வாழ்தல் கண்டீர்குணமிது" என்றுதொடங்கி "வீழ்துணையாப்போமிதனில் யாதுமில்லை மிக்கதே" என்றும், "யாதுமில்லை மிக்கதனில்" என்றுதொடங்கி "தாதுசேர்தோட்கண்ணனல்லாலில்லை கண்டீர்சரணே" என்றும் "கண்ணனல்லால்" என்றுதொடங்கி "அவனன்றிமற்றில்லை" என்றும், இப்படி பஹுமுகமாக ஸர்வர்க்கும் ஸர்வஹிதங்களையுமுபதேசித்தருளிற்

மூ,—பண்டையுறவானபரனைப் புளிங்குடிக்கே
கண்டெனக்கெல்லா வுறவின் காரியமும்—தண்டற நீ
செய்தருளென்றே யிரந்த சீர் மாறன்றாளிணையே
உய்துணையென்றுள்ளமேயோர். (அஉ)

---

றென்கை. (க) "இம்மடவுலகர்கண்டதோடு பட்ட அபாந்தவராஷ்கார போக்யாஸ்லோகாநுபாயப்ரதிஸம்பந்தியைக்காட்டி" என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலே நாயனாருமருளிச்செய்தது.

பதவுரை.

| | |
|---|---|
| பண்டை உறவான பரனை | அநாதிஸித்த ஸம்பந்தத்தையுடையனான எம்பெருமானை |
| புளிங்குடிக்கே கண்டு | திருப்புளிங்குடியிலே ஸேவித்து |
| எனக்கு | அடியேனுக்கு |
| எல்லா உறவின் காரியமும் | ஸர்வவித பந்துத்வ கார்யத்தையும் |
| தண்டு அற நீ செய்தருள் என்று | தடையின்றி நீ செய்தருள வேணுமென்று |
| இரந்த | ப்ரார்த்தித்த |
| சீர் மாறன் | ஸ்ரீ ஶடகோபருடைய |
| தாள் இணையே | இரண்டு திருவடிகளே |
| உய் துணை என்று | நமக்கு உஜ்ஜீவந ஸஹாயமென்று |
| உள்ளமே | நெஞ்சே |
| ஓர் | அநுஸந்தி. (அஉ.) |

அவ,—எண்பத்திரண்டாம்பாட்டு (பண்டையுறவான பரனை). இதில் "பந்துக்ருத்யமெல்லாஞ்செய்யவேணும்" என்றுபேசினவாழ்வார்பாசுரத்தையநுவதித்தருளிச் செய்கிறார்; எங்ஙனேயென்னில்; "இப்படி நிருபாதிக பந்துவானஸர்வேஶ்வரனுக்குஸர்வவித பந்து க்ருத்யமும்செய்யவேணும்" என்று திருப்புளிங்குடியிலே போய்ப்புக்கு, அங்கேபிராட்டியோடேகூடப்பள்ளிகொண்டருளுகிற * காய்சினவேந்தைக் குறித்து, "திருப்பவளத்தைத்திறந்து ஒரு இன்சொல்லுச்சொல்ல வேணும், திருக்கண்களையலர விழித்துக்குளிர நோக்

கியருளவேணும், திருவடிகளைத் தலைக்கலங்காரமாக வைத்தருள வேணும், பிராட்டியும் தேவருமாக திவ்ய ஸிம்ஹாஸநத்திலே யெழுந்தருளி யிருக்கவேணும், கண்முகப்பே நாங்கள் ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணும்படி யுலாவியருளவேணும்" என்றாப்போலே, ஒரு கோடி வெள்ளங்களை அவர் ஸந்நிதியிலே யசலறியாதபடி ப்ரார்த்திக்கிற* பண்டை நாளிலர்த்தத்தை "பண்டையுறவான" இத்யாதியாலே யருளிச் செய்கிறாரென்கை.

வ்யா,—(பண்டையுறவான பரனை) (க) "உலகுக்கோர் முந்தைத்தாய் தந்தையே முழுவேழுலகுமுண்டாய்" (உ) "தாயிருக்கும் வண்ணமே யும்மைத்தன் வயிற்றிருத்தி யுய்யக்கொண்டான்" என்னும்படி, (ங) "எண்டிசையும் கீழும் மேலும் முற்றவுமுண்டபிரான்" என்று அநாதிஸித்த (ஸ) மானஸம்பந்தத்தையுடையஸர்வஸ்மாத்பரனை. அன்றிக்கே, (ச)*கண்கள் சிவந்து தொடங்கி நடந்துவருகிற திருமந்த்ர ப்ரதிபாத்யமான நவவித ஸம்பந்த யுக்தனான ஸர்வஸ்மாத்பரனை யென்றாகவுமாம். (புளிங்குடிக்கே கண்டு) "திருப்புளிங்குடிக் கிடந்தானே" என்னும்படி, திருப்புளிங்குடியிலேகண்டு. (ரு) "என் மனக்கே" என்னுமாபோலே, "புளிங்குடிக்கே" என்றிருக்கிறது.

(எனக்கெல்லா உறவின் காரியமும்) "குடிகுடிவழிவந்தாட்செய்யுந்தொண்டர்" என்றும் "வழிவருகின்ற வடியர்" என்றும் "தொல்லடிமை வழிவருந்தொண்டர்" என்றும் சொல்லும்படியான வெனக்கு (சு) "ஹ்ருதஸ்ய ஸ்ரீஷ்யஸ்யசாவஸஸ்ய - ப்ராதுஶ் ஶிஷ்யஸ்ய தாஸ்ய" என்னும்படி ஸர்வவித பந்துத்வகார்யமும். (தண்டற நீசெய்தருளென்றே யிரந்த) விளம்பமின்றிக்கே யென்னுதல்; பரப்ரேரிதனையன்றிக்கே யென்னுதல்; இவற்றிலொன்றுமிடைவிடாமல் தடையற தேவர் நடத்தியருளவேணுமென்றர்த்தி(யி-ல்)த்தவென்னுதல்.

அதாவது - "சோதிவாய் திறந்துன் தாமரைக்கண்களால் நோக்காய் "நின் பாதபங்கயமே தலைக்கணியாய்" "நீயெழுந்துன் தாமரை மங்கையும் நீயுமிடங்கொள் மூவுலகுந்தொழ விருந்தருளாய்" "கனிவாய் சிவப்பநீகாணவாராய் "நின் திருக்கண்டாமரை தயக்க நின்றருளாய்" "காய்சினப் பறவையூர்ந்து-காய்சின

(க) தி-வாய்-ரு-எ-எ. (உ) தி-மொ-கக க-சு. (ங) தி-வாய் க-க க.
(ச) தி-வாய்-அ-அ- (ரு) தி-வாய்-உ-க-ச (சு) ரா-அ-க0க-கஉ.

மூ.—ஓரா நீர்வேண்டினவையுள்ள தெல்லாஞ்செய்கின்றேன்
நாராயணனன்றோ நானென்று—பேருறவைக்
காட்டவவன் சீலத்திற் கால்தாழ்ந்தமாறனருள்
மாட்டிவிடும் நம்மனத்துமை. (அங)

---

வாழி சங்குவாள் வில்தண்டேந்தி யெம்மிடர் கடிவானே" "இம்மடவுலகர் காண நீ யொருநாளிருந்திடா யெங்கள் கண்முகப்பே" "இருந்திடாய் வீற்றிடங்கொண்டே" "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீயொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே" என்று இப்படி ஆத்ம தர்ஶந பலாநுபவ பரம்பரையைக்கூவுதல் வருதலென்று முடிகவிட்டபடி யென்கை. இப்படிச்செய்தருளவேணுமென் றர்த்தித்த. (சீர்மாறன்) கைங்கர்ய ஸம்பத்தை யுடையவரென்னுதல்; பக்த்யாதி குணங்களையுடையவ ரென்னுதல்; ஏவம்விதரான வாழ்வார் திருவடிகளை. (உய்துணை யென்றுள்ளமேயோர்)நாஶத்தை விளக்குந் துணைபோலன்றிக்கே, உஜ்ஜீவநத்தைப் பண்ணுந் துணையென்று மநஸ்ஸே அநுஸந்தித்துப் போருவென்கிறார். (அஉ)

---

பதவுரை.

| | |
|---|---|
| நீர் | (ஆழ்வீர்!) நீர் |
| ஓரா | ஆராய்ந்து |
| வேண்டினவைஉள்ளது எல்லாம் | அபேக்ஷித்தவை யெல்லாவற்றையும் |
| செய்கின்றேன் | நான் முடித்துத்தருகின்றேன்; |
| நான் நாராயணன் அன்றோ என்று | நான் ஸர்வஶக்தனான நாராயணனன்றோ வென்று |
| பேர் உறவைக்காட்ட | தனது பெரிதான ஸர்வவிதபந்துத்வத்தையுங்காட்ட, |
| அவன் சீலத்தில் | அவ்வெம்பெருமானுடைய ஶீலகுணத்திலே |
| கால்தாழ்ந்த | ஆழங்காற்பட்ட |
| மாறன் அருள் | ஆழ்வாருடைய க்ருபையானது |
| நம்மனத்து | நமது நெஞ்சிலுள்ள |
| மை | அஜ்ஞாநத்தை (அங) |
| மாட்டிவிடும் | மாளச்செய்துவிடும் (நீக்கிவிடும்). |

அவ.—எண்பத்துமூன்றாம்பாட்டு (ஓராநீர்) இதில்-ஶீல குணத்திலே யாழங்காற்பட்டு, ஆழ்வார் பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; "உம்முடைய பேற்றுக்குநீர் ப்ரார்த்திக்கவேணுமோ, நாமே ப்ரார்த்தித்துச் செய்யும்படியன்றோ, நமக்குண்டான நாராயணத்வ ப்ரயுக்தமான ரக்தஸ்பர்ஶம்; ஆனபின்பு, நாமேஉம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் செய்யக்கடவோம்" என்றுஅவனருளிச்செய்ய, "தன்பெருமைபாராதே என் சிறுமைபாராதே யிப்படி யருளிச்செய்வதே? இதொருஶீலமிருக்கும்படியே" என்று, அவனுடையசீலகுணத்திலே வித்த(ஸ)ராகிற *ஓராயிரத்திலர்த்தத்தை "ஓராநீர்வேண்டினவை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-(ஓராநீர்வேண்டினவை யுள்ளதெல்லாஞ்செய்கின்றேன்) ஓரா-ஓர்ந்து; "அதுவேணும்இதுவேணும்" என்றாராய்ந்து, நீரர்த்தித்தவையுள்ளதெல்லாமென்னுதல்; அன்றிக்கே, நீரர்த்தித்தவற்றையெல்லாம், "இன்னதுஉபகரிக்கவேணும், இன்னதுஉபகரிக்கவேணும்" என்றுநாம் நிரூபித்தென்னுதல்; இப்படி ப்ந்துக்ருத்யமாயுள்ளதெல்லாம் நாமேயர்த்திகளாய்ச் செய்கிறோம், அதுக்குடலாக (நாராயணனன்றோநானென்று பேருறவைக்காட்ட) (க)‡ "நாஜோ நாராயணஶ்ரீஜோ நீ-ராமோநாராயணஶ்ஶ்ரீமாந்" என்னும்படி-ஸர்வவிதபந்துத்வமும் நடத்தும்படிக்கு நான் நாராயணஶப்த வாச்யனன்றோவென்று, அத்தாலேபெரிதான தன்ஸர்வவிதபந்துத்வத்தையும்காட்ட; அத்தை "ஓராயிரமாயுலகேழளிக்கும் பேராயிரங்கொண்டதோர் பீடுடையன் நாராயணன் நங்கள்பிரானவனே" என்று அநுஸந்தித்து.

(அவன்சீலத்தில்கால்தாழ்ந்தமாறனருள்) அதாவது-"அவனேமற்றெல்லாமுமறிந்தனமே" என்றும், "அரியைவணங்கி யறிந்தனர்நோய்களறுக்கும்மருந்தே" என்றுவெறுத்தும், "விண்ணுலகந்தருந்தேவனைச்சோரேல் கண்டாய்மனமே" என்றும், "இனமேதுமிலானையடைவதுமே" என்றும், "என்மனமுடைவது மவற்கேயொருங்காகவே" என்றும், "ஆகஞ்சேர்நரசிங்கமதாகி" என்றும், "நின்ற வேங்கடம் நீணிலத்துள்ளது" என்றும், "தொழுது-எழுதுமென்

‡ நமோ-

(க)

மூ,—மையார்கண்மாமார்பின் மன்னுந்திருமாலை
கையாழி சங்குடனே காணவெண்ணி—மெய்யான
காதலுடன் கூப்பிட்டுக் கண்டுகந்த மாறன்பேர்
ஓதவுய்யுமே யின்னுயிர். (அச)

---

னுமிதமிகை'' என்றும், "தாளதாமரையான்'' என்று தொடங்கி "ந; ஞேயன் புகழ்கோவுணசீலமே'' என்றும், "சீலமெல்லையிலான்'' என்றும் இப்படி குணவானென்னும்படியான ஶீலகுணத்திலே யாழ்ங்காற்பட்டருளிச்செய்த வாழ்வாரருளுண்டு - க்ருபை; அது (மாட்டிவிடும் நம்பனத்துமை) நம்முடைய வஜ்ஞாநத்தை விஶ்லே ஷமாகப்போக்கும். (உ) "அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான் யானார்'' என்று பிற்காலிச்கிற கலக்கத்தை, சீலகுணப்ரகாசகத்வத்தாலே ஶேஷியாதபடிநசிப்பிக்கும்; ஸாமாந்யமான வஜ்ஞாநமாகவுமாம். (அரு)

பதவுரை.

| | |
|---|---|
| மை ஆர் கண்மா | மையணிந்தகண்களையுடைய பெரியபிராட்டியார் |
| மார்பில் மன்னும் | திருமார்பிலே நித்யவாஸம்பண்ணப்பெற்ற |
| திருமாலை | ஶ்ரிய:பதியை |
| கை ஆழிசங்குடனே | திருக்கைநிறைந்த திருவாழி திருச்சங்குகளுடனே |
| காண எண்ணி | ஸேவிக்கக்கருதி |
| மெய்ஆன | உண்மையான |
| காதலுடன் | அபிநிவேஶத்தோடு |
| கூப்பிட்டு | கூவி |
| கண்டு | அவ்வாறே ஸேவித்து |
| உகந்த | மகிழ்ச்சியடைந்த |
| மாறன்பேர் | ஆழ்வாருடைய திருநாமங்களை |
| ஓத | அநுஸந்திக்கவே |
| இன் உயிர் | விலக்ஷணமான ஆத்மவஸ்து |
| உய்யும் | உஜ்ஜீவிக்கும். (அச) |

---

(க) தி-வாய் மு-க-எ.

அவ;—எண்பத்துநாலாம்பாட்டு. (மையார்கண்மா) இதில் விலக்ஷண விக்ரஹயுக்தனானவனைக் காண வாசைப்பட்டுக் கூப்பிடு கிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார்; எங்ஙனே யென்னில்; கீழ்- "ஸீலாதிகனாய், அதுக்கூற்றுவாயான பிராட்டியோடே நித்ய ஸம்யுக்தனாய், இரண்டிடத்திலும் தகுபெற(ய) தரித்தவாழ்வார்களை யுடையனானவெம்பெருமானை யநுபவிக்கவேணும்" என்று தாமும் தம்முடைய கரணக்ராம(ங்க)ங்களுமாகவிடாய்த்துக் கூப்பிட, தூணிலேதோற்றிச் சிறுக்கனுக்குதவினாப்போலே மானஸமாகத் தோற்றித்தன்குணங்களை யநுபவிப்பிக்க, அத்தை யநுபவித்து ஹ்ருஷ்டரா கிற * மையார்கருங்கண்ணியிலர்த்தத்தை, "மையார் கண்மாமார்பில்மன்னும்" என்று தொடங்கி யருளிச்செய்கிறு ரென்கை.

வ்யா,— (மையார்கண்மா மார்பில் மன்னுந்திருமாலே) (௧) * அஸிதேக்ஷணையான லக்ஷ்மி, வக்ஷஸ்தலத்திலே நித்யவாஸம் பண்ணும்படியாய், அத்தாலே ஸ்ரீய:பதியான ஸர்வேஶ்வரனை. (கையாழி சங்குடனே காணவெண்ணி) அச்சேர்த்தியைக் காத்தூட்டவல்ல வாழ்வார்களோடே யநுபவிக்கவெண்ணி. இத்தால் - "மையார் கருங்கண்ணி" என்று தொடங்கி "உன்னைக் காணக்கருதுமென் கண்ணே" என்ற முதற்பாட்டைக் கடாக்ஷித்தருளிச் செய்தபடி. (௨) "வைதேஹீம் லக்ஷ்மணம் ராமம் நேத்ரைரநிமிஷைரிவ - வைதேஹீம் லக்ஷ்மணம் ராமம்நேத்ரைரநிமிஷைரிவ" (௩) "[illegible] - அவஷ்டப்ய ஸதிஷ்டந்தம் ஸுதர்ஶநமநூர்ஜிதம்" என்னும்படியாயிற் றபேக்ஷித்தது.

(மெய்யான காதலுடன் கூப்பிட்டுக் கண்டுகந்த) யதாவத்தான ப்ரேமத்தோடே கூப்பிட்டு, அப்படியே கண்டு ஹ்ருஷ்டரான; அதாவது – "கண்ணேயுன்னைக் காணக்கருதி" என்று தொடங்கி "நண்ணித்தொழுதேயென்று நாளழைப்பன்" என்றும், "உகந்தேயுன்னை யுள்ளுமென்னுள்ளத்து" என்று தொடங்கி "நரசிங்கமதாயவுருவே" என்றும், "தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக் கண்டுகொண்டேன்" என்றும, "கண்டுகொண்டு" என்று

(௧) ரா-ஸு-௧௬-௫. (௨) ரா ஆ-௧-௧௪. (௩) ரா-கி ௧௯-௨௫.

மூ,—இன்னுயிர்மால் தோற்றினிங்கென் னெஞ்சிலென் றுகண்ணு
லன்றவனைக்காணவெண்ணி யாண்பெண்ணாய்ப்-பின்னையவன்
றன்னைநினைவிப்பவற்றால் தான்தளர்ந்தமாறனரு
ளுன்னுமவர்க் குள்ளமுருகும். (அடு)

துடங்கி"அண்டத்தமரர்பெருமானடியேனே"என்றும்,"உலகமளந்தவடியானை யடைந்தடியே னுய்ந்தவாறே" என்றும் இவற்றாலே அவற்றை வெளியிட்டாரென்கை. (மாறன் பேரோதவுய்யுமே யின்னுயிர்) இப்படி பகவத்விஷய பக்தியையுடைய வாழ்வார் திருநாமத்தை யநுஸந்திக்கவே யுஜ்ஜீவிக்கும், விலக்ஷணமான வர்த்மவஸ்து. (அச)

பதவுரை.

இன் உயிர் மால் — எனக்கு தா(யா)ரகனான ஸர்வேஶ்வரன்
இங்கு தோற்றினது — இத்தசையில் ப்ரத்யக்ஷமானது
என்நெஞ்சில் என்று — என் மநஸ்ஸிலென்று
அன்று அவனை கண்ணால்காண எண்ணி — அன்று அவனைக்கண்ணால் கண்டநுபவிக்கவிரும்பி
ஆண் பெண் ஆய் — ஆண் தன்மைகுலைந்து பெண் தன்மையை அடைந்து
பின்னை அவன்தன்னை நினைவிப்பவற்றால் — மேலும் அவனை ஸ்மரிப்பிக்கிற மேகஸமூஹம் முதலானவற்றால்
தான்தளர்ந்த — தான் தளர்ச்சியடைந்த
மாறன் அருள் — ஆழ்வாருடைய க்ருபையை
உன்னுமவர்க்கு — அநுஸந்திப்பவர்களுக்கு
உள்ளம் உருகும் — மனமுருகாநிற்கும். (அடு)

அவ.—எண்பத்தைந்தாம்பாட்டு. (இன்னுயிர்மால்) இதில், ஸ்மாரகபதார்த்தங்களாலே நோவுபட்ட ஆழ்வார் பாசுரத்தை அநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ்ப்பிறந்தவநுபவம் மாநஸாநுபவமாகையாலே, அவனை பாஹ்யகரணங்களாலே அநுபவிக்கவேணுமென்றாசைப்பட்டு, அப்போதே அது கிடையாமையாலே ஶிதிலசித்தராய், அவன்குணசேஷ்டிதாதிகளு

க்கு ஸ்மாரகமான லௌகிகபதார்த்தங்களைக்கண்டு, அவ்வழியாலே ஸ்மர்யமாணமான அவன் குணசேஷ்டிதாதிகளை அநுஸந்தித்து, அவனை யதாமநோரதமநுபவிக்கப்பெறாமல், *இப்படி, ஸ்மாரக பதார்த்தத்தாலே தாமீடுபட்டுச்செல்லுகிறபடியை அந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிற * இன்னுயிர்ச்சேவலிலர்த்தத்தை "இன்னுயிர்மால்" இத்யாதியாலே அருளிச்செய்கிறாரென்கை.

வ்யா. — (இன்னுயிர்மால் தோற்றினதிங்கென்னெஞ்சிலென்று) கீழ்த்திருவாய்மொழியிலே, (க) 'நரசிங்கமதாயவுருவே - "உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளத்து" என்றும், (உ) "தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக்கண்டுகொண்டேனே" என்றும், (ங) "கண்டுகொண்டென் கண்ணிணையாரக்களித்து" என்று மருளிச்செய்தவை, மாநஸஸாக்ஷாத்காரமாத்ரமாய் ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரமல்லாமையாலே, இத்தசையிலெனக்கு தா(ர)ரகனான ஸர்வேஶ்வரன் ‡ ஸாக்ஷாத்கரித்தது மாநஸஜ்ஞாந விஷயமென்று. (கண்ணாலன்றவனைக்காண வெண்ணியாண்பெண்ணாய்) சக்ஷுர்விஷயமாக வவனை தர்ஶிக்கவெண்ணி, அதுலபி(த்)யாமையாலே பும்ஸ்த்வம் குலைந்து ஸ்த்ரீத்வாபத்தியைப(ஹ)ஜித்து, பின்னையவன்றன்னை நினைவிப்பவற்றால்) இப்படி ஸ்த்ரீத்வாபத்தியை பஜித்தவநந்தரம், அவனைப்ரணயகத்கத (ஸ்வ) ஸ்வரத்தாலும் ரூபவத்தையாலும் ஸ்மரிப்பிக்குமவற்றாலே. (ச) "விகூஜஜ்ஜீவிஹஜ்ஜமை: - விகூஜத்பிர் விஹங்கமை:" என்னும்படியான பக்ஷிஸமூஹங்களாலும், மேகஸமூஹங்களாலும்;

(தான் தளர்ந்த) (ரு) "தாநேவ வாரணீயாநி - தாந்யேவாரமணீயாநி" என்னும்படி அஸஹ்யமாய், மிகவும்பாரவஶ்யத்தையடைந்த. அதாவது - "இங்கெத்தனை என்னுயிர் நோவமிழற்றேல்மின் குயிற்பேடைகாள்" "இத்தனைவேண்டுவதன்றந்தோ வன்றில்பேடைகாள்" "எவஞ்சொல்லிற்றும் நும்மேங்குகூக்குரல் கேட்டுமே" "மேற்கிளைக்கொள்ளேல்மின் நீநுஞ்சேவலும் கோழிகாள் - ஆக்கையுமாவியுமந்தரநின்றுழலுமே" "அந்தரநின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள் நுந்திறத்தேதுமிடையில்லை குழறேல்மினோ" என்றும், "நன்

‡ ஸாக்ஷாத்கரித்தது - ப்ரத்யக்ஷமாக்கினரூபம்.

(க) தி-வாய்-கூ-ச-எ. (உ) தி-வாய் கூ-ச-அ. (ங) தி-வாய்-கூ-ச கூ.
(ச) ரா-கி-க-கூகூ. (ரு) ரா-கி-க-கூகூ.

மூ.—உருகுமாலென்னெஞ்ச முன்செயல்களெண்ணி
பெருகுமால் வேட்கையெனப்பேசி—மருவுகின்ற
வின்னுப்புடனயன் சீரேய்ந் துரைத்தமாறன்சொல்
லென்னுச்சொல்லாதிருப்பமிதங்கு. (அசு)

---

கெண்ணாநான்வளர்த்த சிறுகிளிப்பைகலே இன்குரல் நீமிழற்றேல்-நின்பசுஞ்சாமநிறத்தனன் கூட்டுண்டுநீங்கினான்" 'கண்ணன் மாயன் போல் கோட்டியவில்லொடுமின்னுமேகக்குழாங்கள்காள் - காட்டேன்மின்னும்முருவென்னுயிர்க்கதாலனே" "குயிற்பைதல்காள் கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்" "பண்புடைவண்டொடு தும்பிகாள் பண்மிழற்றேன்மின், புண்புரைவேல்கொடுகுத்தா லொக்கும் நும்மின்குரல்" "நாரைக்குழாங்கள்காள் பயிலேறெனினி" என்றிப்படி, ரூபதர்சநத்தாலும் நாமஸங்கீர்த்தநத்தாலும் ப்ரணயகூஜிதத்தாலும் மிகவுந்தளர்ந்து ஜீவநாத்ருஷ்டத்திலும் நசையற்றபடியென்கை.

இப்படிமிகவும் பாரவர்யத்தையடைந்த (மாறனருள்) (க) "அருள்கண்டீரிவ்வுலகினில்மிக்கதே" என்னும் படியான ஆழ்வார் க்ருபையை அநுஸந்திக்குமவர்களுக்கு மநஸ்ஸு நீராயுருகும். "இதொருக்ருபாதிக்யமிருந்தபடியே" என்று ஹ்ருதயம் த்ரவீபூதமாம். "மாறனுரையுன்னுமவர்க்கு" என்று பாடமானபோது, ஆழ்வார் திவ்யஸூக்தியை அநுஸந்திக்கப்புக்கால் "இதுவுமொரு ஸ்ரீஸூக்தியே" என்றுமநஸ்ஸு த்ரவீபூதமாம் "இவையொன்பதோடொன்றுக்கும் மூவுலகுமுருகுமே" என்றத்தைப்பின் சென்றபடியென்றுமாம். (அரு)

---

பதவுரை.

| | |
|---|---|
| உன்செயல்கள் எண்ணி | "உன்னுடைய சரித்ரங்களைநினைத்து |
| என்னெஞ்சம் உருகும் | என்மனம் உருகாநின்றது; |
| வேட்கைபெருகும் எனப்பேசி- | அதற்குமேலே ஆசையும் விஞ்சிவாராநின்றது" என்றருளிச்செய்து |

| | |
|---|---|
| மருவுகின்ற இன்னாப்புடன் | (கீழ்ஸ்மாரகபதார்த்தத்தாலே நோவுபட்டு) அநுவ்ருத்தமான அந்த வெறுப்போடே |
| அவன்சீர் ஏய்ந்து உரைத்த | அவனுடைய ப்ரணயித்வகுணத்தைத் திருவுள்ளத்திற்பொருந்த அருளிச்செய்த |
| மாறன்சொல் | ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளை |
| என்நா | என்னுடைய நாக்கு |

சொல்லாது இருப்பது எங்கு அநுஸந்தியாமலிருப்பது எவ்வாறு?

அவ.—எண்பத்தாறும்பாட்டு. (உருகுமாலென்னெஞ்சம்) இதில் ஆழ்வாருடைய அப்ரீதிகர்ப்ப(ஸூ)குணநுஸந்தாநவிந்த (ஸ)ராம் ஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனே யென்னில், ஸ்மாரகபதார்த்தங்களைக்கண்டு நோவுபட்டுச்செல்லா நிற்கச்செய்தே (க) * இருத்தும் வியந்தில் தலைதடுமாறாகக்கலந்த கலவி ஸ்ம்ருதிவிஷயமாய்த(ய)ரிக்க, அத்தாலே பூர்வஸம்ஶ்லேஷ ப்ரகாரத்தை யநுஸந்தித்து ப்ரீதராய்ச்செல்லுகிற * உருகுமால் நெஞ்சத்திலர்த்தத்தை யருளிச்செய்கிறார் "உருகுமாலென்னெஞ்சம்" இத்யாதியாலே யென்கை.

வ்யா.—(உருகுமாலென்னெஞ்சமுன் செயல்களெண்ணி)(உ) 'ஹ்ருதயாந்யாமமந்தேவ ஜநஸ்ய குணவத்தயா - ஹ்ருதயாந்யாமமந்தேவ ஜநஸ்யகுணவத்தயா" என்னும்படி, * உன்னுடையதாழ்ந்த செயல்களையநுஸந்தித்து என்னுடையமநஸ்ஸானது த்ரவத்ரவ்யம் போலே உருகாநின்றது; (பெருகுமால் வேட்கையெனப்பேசி) அதுக்குமேலே அபி(ஸி)நிவேஶமும் மிக்குவாராநின்றதென்றருளிச்செய்து. (மருவுகின்ற வின்னாப்புடன்) கீழ் ஸ்மாரகபதார்த்தத்தாலே நோவுபட்டு அந்த அநுவ்ருத்தமான வெறுப்போடே. (அவன்சீரேய்ந்துரைத்த மாறனசொல்) அவனுடைய (க) *இருத்தும் வியந்தில் (ங) "அறியேன்மற்றருள்" இத்யாதியாலே அருளிச்செய்த ப்ரணயித்வகுணங்களைத்திருவுள்ளத்திலே பொருந்தவருளிச்செய்த.

(க) தி-வாய்-அ-எ- (உ) ரா-அ-உசு-உ. (ங) அ-எ-அ.

மூ — எங்காதலுக்கடிமாலேய்ந்தவடிவழகென்
றங்காதுபற்றுசாவாங்கவன்பா — லெங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப்போகவிடுமாறன்தாள்
உள்ளினர்க்குத் தீங்கையறுக்கும். (அஎ)

அதாவது - * உருகுமால் நெஞ்சமுயிர்ப்பாட்டாய், அத்தைப் பின்சென்று "நினைதொறும்" என்றுதொடங்கி "நினைகிலேன் நானுனக்காட்செய்யும் நீர்மையே," "நீர்மையால் - கார்முகில்வண்ணன்றன் கள்வமறிகிலேன்," "அறிகிலேன் - சிறியவென்னாருயிருண்ட திருவருளே" "திருவருள் செய்பவன்போல - கருவளர் மேனிநங்கண்ணன் கள்வங்களே" "என்கண்ணன் கள்வமெனக்குச் செம்மாய்நிற்கும் - என்கண்ணனென்றவன் காட்கரையேத்துமே," "என்னாருயிர்கோளுண்டே - காட்கரையேத்துமதனுட் கண்ணாவென்னும்," "கோளுண்டானன்றி - ஆளன்றேபட்ட தென்னாருயிர்பட்டதே," "தெய்வவாரிக்கு - இங்கெனதுயிர்பட்டது - அங்காருயிர்பட்டது," "வாரிக்கொண்டு - பருகினான், காரொக்குங் காட்கரை யப்பன்கடியனே," என்றிப்படி, அவன் தாழநின்றுபரிமாறின ஸீலாதிகுணங்களிலே ஸிதிலாந்த:கரணரா யருளிச்செய்த ஸூக்தியைன்கை.

இப்படி ஈடுபாட்டையுடையரா யருளிச்செய்த இச்சொல்லை (என்னாச்சொல்லாதிருப்பதெங்கு) என்னுடையநாவானது எவ்விடத்துச்சொல்லாதிருப்பது?; எல்லாவிடத்திலும், (க) * நாவினால்நவிற்று - குருகூர்நம்பி பாவினின்னிசைபாடித் திரிவனென்னுதல்; அன்றியே "என்னாச்சொல்லாதிருப்பது எங்கு" என்று பாடமாய், இதல்லாஸஜ்ஞனைவென்னாலே சொல்லப்படாதிருப்பதெத் தசையிலேயென்னனே யென்றாகவுமாம்; எல்லாதசையிலு மநுஸந்தியாதிருக்கவொண்ணாதென்றபடி. (அசு)

பதவுரை.

எம் காதலுக்கு அடி — எமது அன்புக்குக்காரணம்
மால் ஏய்ந்த வடிவழகு என்று — ஸர்வேஸ்வரனுடைய ஸ்வரூபாநுபந்தியாய் அநுரூபமான விக்ரஹ ஸௌந்தர்யமென்று

(க) கண்ணி-உ.

| | |
|---|---|
| அங்கு ஆதுபற்றுச ஆ | அத்தசையில் அந்தவிக்ரஹஸௌந்தர்யமே ஆலம்பமாக |
| ஆங்கு அவன்பால் | அவ்விடத்தில் அவன் விஷயமாக |
| எங்கும் உள்ளபுள்இனத்தை | எவ்விடத்திலுமுள்ள பறவைக்கூட்டத்தை |
| தூதாகப் போகவிடும் | தூதாக அனுப்பின |
| மாறன் தாள் | ஆழ்வாருடைய திருவடிகள் |
| உள்ளினர்க்கு | தம்மை அநுஸந்தித்தவர்களுடைய |
| தீங்கை அறுக்கும் | தீங்குகளை ஒழித்திடும். (அஎ) |

அவ.—எண்பத்தேழாம்பாட்டு (எங்காதலுக்கடி) இதில், வடிவழகுபற்றுசாகத் தூதுவிட்டருளின வாழ்வார் திவ்யஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; அப்ரீதிகர்ப்ப(ஸ்)குணநுஸந்தாந மாத்ரமாய்ச்சென்றவிடத்தில்,பா(ஸா)க்யவைகல்யத்தாலே குணநுபவத்தால்வந்த ப்ரீதிகீழ்ப்பட்டு, அப்ரீத்யம்ஸமே தலையெடுத்து அவனுடைய ஸௌந்தர்யத்தாலே அபஹ்ருதசித்தராய், "அவ்வழகைக்கண்ணாலே கண்டநுபவிக்கவேணும்" என்று கண்ணற்கண்டபக்ஷிகளைத் தூதுவிடுகிற * எங்கானவிலர்த்தத்தை யருளிச்செய்கிறார் "எங்காதலுக்கடி" இத்யாதியாலேயென்கை.

வ்யா.-(எங்காதலுக்கடி) என்னுடையப்ரேமத்துக்குஹேது, (மாலேய்ந்தவடிவழகென்று) ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபாநுபந்தி(வாஸி)யா யநுரூபமான விக்ரஹஸௌந்தர்யமென்று. (அங்காதுபற்றுசா ஆங்கவன்பால்) அத்தசையில் அவன் ஸௌந்தர்யமே, பற்றுசாக—ஆலம்பநமாக, அவ்விடத்தில் அவன் விஷயமாக - திருமொழிக்களத்துறையு மவன்விஷயமாக. (எங்குமுள்ள புள்ளினத்தைத் தூதாகப்போகவிடும் மாறன்) (க) "யாംகவீநாംஸஹஸ்ராணி - யாம்கபீநாம்ஸஹஸ்ராணி" என்னும்படி ஸர்வதிக்குக்களிலுமுண்டான பக்ஷிஸமூஹத்தை, தம்முடைய ப்ராணரக்ஷணார்த்தமாக தூதப்ரேஷணம்பண்ணுமாழ்வார்.

அதாவது- "செங்காலமடநாராய்" என்றுதுடங்கி "எங்குடக்கூத்தர்க்கென் தூதாய்" என்றும், "அமர்காதற்குருகினங்காள்"

(க) ரா-ஸு-௩௦-௩.

மூ.— அறக்குமிடரென்றவன்பாலாங்குவிட்டதூதர்
மறிக்துவரப்பற்றுமனத்தா — லறப்பதறி
செய்யதிருநாவாயிற்செல்ல நினைந்தான்மாறன்
மையலினாற் செய்வதறியாமல். (அஅ)

என்று தொடங்கி "தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமேகேளீரே" என்றும், "தக்கிலமேகேளீர்கள்" என்று தொடங்கி "கொக்கினங்காள் குருகினங்காள் - செக்கமலத்தலர்போலும் கண் கை கால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனி யடிகளுக்கு" என்றும், "திருமேனியடிகளுக்கு" என்று தொடங்கி "மாதரைத்தம் மார்பகத்தே வைத்தார்க்கு" என்றும், "திருமூழிக்களத்துறையும் பங்கயக்கட்சுடர் பவளவாயனைக்கண்டு" என்றும், "புனக்கொள் காயாமேனிப் பூந்துழாய் முடியார்க்கு" என்றும், "பூந்துழாய்முடியார்க்கு" என்று தொடங்கி "தாந்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீர்" என்றும், "என்னகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கு" என்றும், இப்படி "பூந்துழாய்முடியார்க்கு" என்னுமளவும்வடிவழகு பற்றாசாகப்பலபக்ஷிகளைத் தூதுவிட்டாரென்கை.

(க) "நம்பிளைபுயுஞ்சிறந்த செல்வமும் படைத்தபரப்பும் தழுரோட்டைவாஸமும் மறப்பித்தக்ஷமா திக்ஷா ஸாரஸ்யஸௌந்தர்யங்களை புணர்த்தும் வ்யூஹவிபவ பரத்வத்வயார்ச்சைகள் தூதுநாலுக்குவிஷயம்" என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலே நாயனாரு மருளிச்செய்தது. (உ) "ஸ்வாராத்யஸஹஸ்வாது விஹாரஸ்ஸஸ்லோ வைஸவாத் । வைகாவஸ்ரூவிஸாதீர்ரத் வடிகாந்யாவதே நிரு: - அபராதஸஹத்வாச்ச விபோஸ்ஸம்பந்தவைபவாத் । ஐசுர்யாச்சஸௌந்தர்யாத் கடாக்ஷாச்சதேமுநி:" என்றிறே வாதிகேஸரி அழகிய மணவாளஜீயரு மருளிச்செய்தது. (மாறன்றூளினர்கருத தீங்கையறுக்கும்) ஆழ்வார்திருவடிகளானது, தன்னை மாஸஸாலே யநுஸந்தித்தவர்களுக்கு ப்ரதிபந்தகங்களைத் தானே சே(வெதி)தித்துப்போகடும்; * துயரறுசுடரடிபோலே. (அஎ)

பதவுரை.

| | |
|---|---|
| இடர் அறுக்கும் என்று | நமது துக்கங்களைப் போக்கியருள்வனென்று |

(க) ஆசார்யஹ்ருதயம், (உ) பன்னீராயிரப்படி.

அவன்பால் ஆங்குவிட்ட தூதர் — அவ்வெம்பெருமானிடத்தில் அனுப்பிய தூதர்
மறித்து வரப்பற்றுமனத்தால் — மீண்டுவருமளவும் ஆலஸ்யத்தைப் பொறுக்கமாட்டாததிருவுள்ளத்தாலே
அறப்பதறி — மிகவும் விரைந்து
மையலினால் — அறிவுகலக்கத்தினால்
‡ செய்வு அறியாமல் — செய்யவேண்டியது இன்னதென்றறியாமல்
மாறன் — ஆழ்வார்
செய்யதிருநாவாயில் — விலக்ஷணமான திருநாவாயிலே
செல்லநினைந்தான் — எழுந்தருள உத்யோகித்தார் (அ)

அவ.—எண்பத்தெட்டாம்பாட்டு. (அறுக்குமிடர்) தூதர் வருமளவும் பற்றாமல் "திருநாவாயிலே போய்ப்புகவேணும்" என்று மநோரதிக்கிற வாழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இப்படிவிட்டதூதர் அத்தலைப்பட்டு அவனுக்கு ஸ்வதசையையறிவித்து மீண்டுவருவதற்குமுன்னே, ப்ராப்யத்வராதிஶயத்தாலே, "அவனெழுந்தருளியிருக்கிற திருநாவாயிலே போய்ப்புக்கு அவ்வோலக்கத்திலே அங்குள்ளவர்களோடே கூட ஸபத்நீகனான அவனைக்கண்டநுபவித்து அடிமைசெய்யப்பெறுவதெப்போதோ?" என்று மநோரதிக்கிற* அறுக்கும் வினையிலர்த்தத்தை "அறுக்குமிடர்" என்று துடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(அறுக்குமிடரென்றவன் பாலாங்குவிட்டதூதர் மறித்து வரப்பற்றுமனத்தாலறப்பதறி) (அறுக்குமிடரென்று) நம்முடைய துக்கத்தைப்போக்கியருளுமென்று. (அவன்பாலாங்குவிட்டதூதர்) திருமூழிக்களத்துறைவார்விஷயமாக அவ்விடத்தலே விட்டதூதர். (மறித்துவரப்பற்றுமனத்தால்) திரும்பி மீண்டு வந்துமறுமாற்றம் சொல்லப்பற்றாத திருவுள்ளத்தாலே. (அறப்பதறி) மிகவும் த்வரித்து; (க) "ஐச்வர்யேண்யாஸுரேநாயம் ம-ஞம

(க) ரா-ஸு-ந-உ-க௯.

(‡ 'செய்வதறியாமல்' என்றபாடம் மோனையின்பத்திற்கு மாறுபாடாம்.)

மூ.—மல்லடிமைசெய்யுநாள் மால்தன்னைக்கேட்கவவன்
சொல்லுமளவும் பற்றாத்தொன்னலத்தால்—செல்கின்ற
வாற்றாமைபேசி யலமர்ந்தமாறனருள்
மாற்றாகப்போகு மென்றன்மால். (அகூ)

---

ஈநௌவ-ந: வ-ந: - இதம்ப்ருயாச்சமேநாதம் ஸுஒரம்ராமம் புந: புந:" என்று, திருவடியைத்தூதுபோகவிட்டவநந்தரம் பிராட்டி பதறினாப்போலே. (செய்யதிருநாவாயிற்செல்ல கினைந் தான்மாறன்) அழகியதிருநாவாயிலேயெழுந்தருளும்படி யெண் ணினாராழ்வார்.

அதாவது-"வெறித்தண்மலர்ச்சோலைகள் சூழ்திருநாவாய் குறுக் கும்வகை யுண்டுகொலோகோடியேற்கே" என்றும், "திருநாவாயடி யேனணுகப்பெறுநாள் யவைகொலோ" என்றும், "திருநாரணன் சேர்திருநாவாயவையுட் புகலாவதோர் நாளறியேனே" என்றும், "திருநாவாய் வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா - நாளேலறி யேன்" என்றும், "விண்ணாளன் விரும்பியுறையும் திருநாவாய்கண் ணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே"என்றும்,"திருநாவாய் கொண்டேயுறைகின்ற வெங்கோவலர்கோவே - கண்டேகளிக்கின்ற திங்கென்றுகொல்கண்கள்" என்றும், "நாவாயுறைகின்றவென் நாரணநம்பீ ஆவாவடியானிவனென்றருளாயே" என்றும், "தென் திருநாவாயென்தேவே - அருளாதொழிவாய்" என்றும், "திருநா வாய் யாவரணுகப்பெறுவாரினியந்தோ" என்றும், "திருநாவாய் வந்தேயுறைகின்றவெம்மாமணிவண்ணா-அந்தோவணுகப்பெறுநாள்" என்றும்,இப்படித்வராதிஶயத்தை ப்ரகாஶிப்பித்தாரென்கை. அது எத்தாலேயென்னில்; (மையலினால் செய்வதறியாமல்) ஸௌந்தர் யத்தாலே அறிவுகலங்கி,அத்தாலேப்ராப்தாப்ராப்தவிவேகமின் றிக்கே, விட்டதூதர் வருவதற்குமுன்னேத்வரித்தார்; இவர் ப்ரேம ஸ்வபாவமிருந்தபடியேயென்றுவித்த(ஐ)ராயருளிச்செய்கிறார். அஅ

---

—பதவுரை.

மல்அடிமைசெய்யும்நாள் — பூர்ணமான கைங்கர்யம் செய்கிற காலம் (எப்போதென்று)

மால் தன்னைக்கேட்க — ஸர்வேஶ்வரனை நோக்கிக்கேட்க,

| | |
|---|---|
| அவன் சொல்லுமளவும்பற்ற | அவன் அறுதியிட்டுச் சொல்லுமளவும் பொறுத்திருக்கமாட்டாத |
| தொல்நலத்தால் | ஸ்வாபாவிகமான பக்தியாலே |
| செல்கின்ற ஆற்றாமைபேசி அலமர்ந்தமாறன் | தமக்கு நிகழ்கின்ற ஆற்றாமையை அருளிச்செய்து அலமாப்பை அடைந்த ஆழ்வாருடைய |
| அருள் | க்ருபையானது |
| மாற்று ஆக | அஜ்ஞாநத்திற்கு எதிர்த்தட்டாக |
| என்றன்மால் போகும் | என்னுடைய அஜ்ஞாநம் நிவர்த்திக்கும். (அகூ) |

அவ.—எண்பத்தொன்பதாம்பாட்டு. (மல்லடிமைசெய்யும் நாள்) இதில், ஒருஸங்க்யையிலுண்டான ஆழ்வாரபி(ஸி)ஸந்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்;(க) * அறுக்கும் வினையில் பெரியத்வரையோடே மநோரதித்தவர், த்வராநுகுணமாக ப்ராப்யபூமியிலேபுக்கு அவனையநுபவிக்கப் பெறுவதற்கு முன்னே தத்ப்ராப்திஸூசகமான வண்டையாளங்களைக்கண்டு நோவுபட்டுச்செல்லுகிறபடியை, பகலெல்லாம் பசுமேய்க்கப்போனக்ருஷ்ணன் மீண்டுவருவதற்குமுன்னே அவன் வரவுக்கடையாளமான மல்லிகைகமழ்தென்றல் முதலானவஸ்துக்களைக்கண்டு திருவாய்ப்பாடியிலிடைப்பெண்கள் அந்த க்ருஷ்ணவிரஹத்தாலே ஸந்த்யாஸமயத்திலே நோவுபட்டுச்செல்லுகிறதுறையேலே வைத்தருளிச்செய்கிற * மல்லிகைகமழ்தென்றலிலர்த்தத்தை "மல்லடிமை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(மல்லடிமைசெய்யும்நாள் மால்தன்னைக்கேட்க) மல்லடிமை- ஸம்ருத்த(ஃ)மானவடிமை; பரிபூர்ணமானகைங்கர்யம்; அது செய்யும் காலமெப்போதென்று ஸர்வேஶ்வரனைக்கேட்க,(உ) "நாளேலறியேனெனக்குள்ளன" என்று கேட்க. (அவன் சொல்லுமளவும் பற்றாத்தொல்னலத்தால்) அவன் (ங) * மாலைநண்ணியிலே (ச) "மரணமானால்" என்று - நாள் அவதி(யி)யிட்டருளிச் செய்யுந்தனையும்பற்றாத ஸ்வாபாவிகமான பக்தியாலே. (செல்கின்ற

(க) தி-வாய் அஅ. (உ) அஅ-ச. (ங) கூo, (ச) நூ-கு.

வாற்றாமை பேசியலமர்ந்தமாறன் ) தமக்குநடந்துசெல்லுகிற (ய) தரியாமையையருளிச்செய்து அலயாப்பையடைந்த ஆழ்வார்.

அதாவது - "மல்லிகைகமழ்தென்றல்" "புலம்புறுமணிதென்றல்" "தாமரைக்கண்ணும் கனிவாயும்" "வாடைதண்வாடை" "ஆபுகுமாலை" "அவனுடையருள் பெறும்போதரிதால்" "ஆருயிரளவன்றிக்கூர்தண்வாடை" "புதுமணமுகந்துகொண்டெறியுமாலோபொங்கிளவாடை" "ஊதுமத்தீங்குழற்கே யுய்யேன்நான்" "மாலையும்வந்தது மாயன்வாரான்" என்று இவையடியாக பாத (வாய)கபதார்த்தங்களாயுள்ள வெல்லாவற்றாலும்நொந்து, பிராட்டி, தஸக்ரீவதர்ஸநாநந்தரம் மாருதிதர்ஸநாத்பூர்வம மத்யேராவணப்ரேரிதரான ராக்ஷஸீவஸமாபந்நையாய் ஜீவிதத்தில நசையற்றாப்போலே, "யாமுடையாருயிர் காக்குமாறென்" என்கிறார்.

அதாவது - "புகலிடமறிகிலம தமியமாலோ" என்றும் "இனியிருந்தென்னுயிர் காக்குமாறென்" என்றும் "பாவியேன்மனத்தே நின்றீருமாலோ" என்றும் "ஆவியின் பரமல்லவகைகளாலோ" என்றும் "யாமுடையாருயிர் காக்குமாறென்" என்றும் "எவமினிப்புகுமிடமெவம் செய்கேனோ" என்றும் "ஆருக்கென் சொல்லுகேனன்னைமீர்கா ளாருயிரளவன்றிக்கூர்தண்வாடை" என்றும் "ஆய்ச்சியர்க்கே யூதுமத்தீங்குழற்கே யுய்யேன்நான்" என்றும் "யாதுமொன்றறிகிலமம்மவம்ம" என்றும் "என்சொல்லியுய்வனிங்கவனைவிட்டே" என்றும், "அவனைவிட்ட கன்றுயிராற்றகில்லா" என்றும், இப்படி ஆற்றாமையையருளிச்செய்து முன்னடிதோற்றாமலலமர்ந்து நிலந்துழாவின வாழ்வாரென்கை.

இப்படி யான (மாறனருள்மாற்றுகப் போகுமென்றன்மால்) அதாவது-"அவனியுண்டுமிழ்ந்தவன் மேலுரைத்த வாயிரத்துள்ளிவை பத்துங்கொண்டு அவனியுள்லற்றி நின்றும்மின்தொண்டீர்" என்று உபக்ரமித்தவாழ்வாரருள் - அஜ்ஞாநத்துக்கு ப்ரதிப(ஹ)ட்டாக, என்னுடைய வஜ்ஞாநம் நிவ்ருத்தமாம். (க) "பண்டைவல்வினை பாற்றியருளினன்" என்னக்கடவதிறே. * ஆபுகுமாலைக்கு அவனுடையருள் பெறும்போதரிதாயிற்று; இங்கு "என்றன்மால் மாறனருள் மாற்றுகப்போகும்" என்று நிஸ்சிதமாயிற்று. (அகூ)

(க) கண்ணி-எ.

மூ.—மாலுமது வாஞ்சைமுற்றும் மன்னுமுடம்பின் முடிவில்
சாலநண்ணிச்செய்வனெனத் தானுகந்து—மேலவனைச்
சீரார்கணபுரத்தே சேருமெனும்சீர்மாறன்
தாராரோ நந்தமக்குத்தாள். (கூ0)

பதவுரை.

| | |
|---|---|
| மால் | ஸர்வேஶ்வரன் |
| உமதுவாஞ்சை முற்றும் | "உம்முடைய அபேக்ஷிதங்களெல்லாவற்றையும் |
| மன்னும் உடம்பின் முடிவில் | ஆத்மாவோடே பொருந்தியிருக்கிற ஶரீரத்தின் முடிவிலே |
| சால நண்ணிச் செய்வன்என | மிகவும் பொருந்தித் தலைக்கட்டித் தருகிறேன்" என்ன; |
| தான் உகந்து | தாம் மனமகிழ்ந்து |
| மேல் அவனை | 'அப்பரமபுருஷனை |
| சீர்ஆர் கணபுரத்தே சேரும் எனும் | திருக்கண்ணபுரத்திற்சென்று ஆஶ்ரயியுங்கள் என்றருளிச்செய்த |
| சீர்மாறன் | ஜ்ஞாநாதிகுணங்களையுடைய ஆழ்வார் |
| நந்தமக்கு | நமக்கு |
| தாள்தாராரோ | தம்திருவடிகளை ப்ரஸாதித்தருளாரோ? (கூ0) |

அவ.—தொண்ணூறாம்பாட்டு.(மாலுமது) இதில், ஆழ்வார்க்கு நாளவதி(யி)பிறக்க, அத்தாலே அவர் பரோபதேஶம் பண்ணின பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார் எங்ஙனே யென்னில்; (க) "நாளேலறியேன்" என்றுகேட்டவர்க்கு, "உம்முடையத்வராநுகுணமாக உம்முடைய ஶரீராவஸாநத்திலே உம்மைப்பரமபதத்திலே கொடுபோயடிமைகொள்ளக்கடவோம்" என்றுநாளிட்டுக் கொடுக்க, அத்தாலே ஹ்ருஷ்டராய், அந்தஹர்ஷப்ரகர்ஷத்தாலே "திருக்கண்ணபுரத்திலே நிற்கிறவன்திருவடிகளிலே புஷ்பாத்யுபகரணங்களைப் பணிமாறிபக்தியைப் பண்ணுங்கோள், அதுக்குமாட்டாதார் ப்ரபத்தியைப் பண்ணுங்கோள், அதுக்குமாட்டாதார்

(க) தி.வாய்-அ அ ச.

இந்தப்பத்துப்பாட்டையும் ப்ரீதிபூர்வகமாகப்பாடி அவன்றிருவடிகளிலே வணங்குங்கோள்'' என்றுஸர்வரையும் தத்ஸமாஸ்ரயணத்திலே நி(யி)காரா நுகுணமூட்டுகிற * மாலேநண்ணியிலர்த்தத்தை ''மாலுமதுவாஞ்சைமுற்றும்'' இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.-(மாலுமதுவாஞ்சை முற்றும் மன்னுமுடம்பின் முடிவில் சாலநண்ணிச்செய்வனென) ஆஸ்ரிதவ்யாமுக்த(ஞு)ன ஸர்வேஸ்வரன், உம்முடைய வபேக்ஷிதங்களெல்லாம் ஆத்மாவோடே பொருந்தியிருக்கிறஸரீரத்தினுடைய வியோகாநந்தரத்திலே திருக்கண்ணபுரத்திலே மிகவும் கிட்டிச்செய்வனென்றென்னுதல்; அன்றிக்கே, உம்மைக்கிட்டி மிகவும் செய்வனென்னுதல்; அங்ஙனுமன்றிக்கே, அந்தக்கார்யத்திலே மிகவுமுற்றென்னுதல்; இப்படிச் செய்வனென்று * கண்ணபுரமொன்றுடையானருளிச்செய்ய (தானுகந்து) அவனைக்கொண்டு நாளவதியிட்டுக்கொண்டதாம் ஹ்ருஷ்டராய்.

(மேலவனைச்சீரார் கணபுரத்தே சேருமெனும் சீர்மாறன்) நாளவதியிட்டுக்கொடுத்ததுக்கு மேலாகத்திருக்கண்ணபுரத்திலே வந்து அத்யாஸந்நனாயிருக்கிறவனை. மேலவனையென்று - மேலானவனையென்றுமாம். பரதாழ்வானுக்கு (க) ''வ-ஹெணெ-வ த-ஷ-மெவ-ஷெ--பூர்ணே சதுர்த்தஸே வர்ஷே'' என்றுநாளவதியிட்டுக்கொடுத்து, அவதி(யி)பார்த்துக்கொண்டு நின்றாப்போலே நின்றபடி.(சீரார்கணபுரத்தேசேருமெனும் சீர்மாறன்)ஐஸ்வர்யாதிகளும் ஸீலாதிகுணங்களும் புறவெள்ள மிடும்படியான திருக்கண்ணபுரத்தில் நிலையிலே, (சேருமெனும் சீர்மாறன்) ஆஸ்ரயியுங்கோளென்று, அனைவரையும் குறித்தருளிச்செய்யும் ஜ்ஞாநப்ரேமாதி குணங்களையுடைய வாழ்வார்.

அதாவது-''திருக்கண்ணபுரத்தாவின்மேலாலமர்ந்தானடியிணைகளை - காலைமாலை கமலமலரிட்டு - மாலேநண்ணித் தொழுதெழுமினோ'' என்றும் ''திருக்கண்ணபுரமுள்ளி - கள்ளவிழும் மலரிட்டு- நாளும்தொழுதெழுமினோதொண்டர்'' என்றும், ''திருக்கண்ணபுரத்தண்டவாணனமரர் பெருமானை - தொண்டர் நுந்தம் துயர்

(க) ரா-யு-கஉஎ-க.

போக - விண்டுவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்'' என்றும், "வானை யுந்துமதிள்சூழ் திருக்கண்ணபுரம் தானயந்தபெருமான் - மடப் பின்னை தன்கேள்வனைத் தேனை வாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்'' என்றும், "திருக்கண்ணபுரத்தரணியாளன் - சரணமாகும் தனதா ளடைந்தார்க்கெல்லாம்'' என்றும், "திருக்கண்ணபுரத்தின்பன் - தனதாளடைந்தார்க்கெல்லாம்-அன்பனாகும்'' என்றும், "செய்யில் வாளையுகளும் திருக்கண்ணபுரத்தையன் ஆகத்தணைப்பார்கட்கணி யனே'' என்றும் "மணிபொன்மேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம் பணிமின்'' என்றும், "வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்தாதி யானை யடைந்தார்க்கல்லலில்லையே'' என்றும், "அல்லிமாதரமரும் திருமார்பினன் — கல்விலேய்ந்தமதிள் சூழ்திருக்கண்ணபுரஞ் சொ ல்ல நாளும் துயர்பாடுசாராவே'' என்றும், "பாடுசாராவினை பற்றறவேண்டுவீர் - இப்பத்தும் பாடியாடிப்பணிமினவன்றாள் களையே'' என்றும் இப்படி ஸர்வர்க்கும் ஸர்வாதிகாரயாம்படி ஸமாஶ்ரயணத்தை யருளிச்செய்தாரென்கை.

(க) "மற்றொன்று'' "கண்ணனல்லால்'' என்கிற * வைகல் வாழ்தலான ஸித்தோபாயம்; அதில் துர்ப்பலபுத்திகளுக்கு, மாலை நண்ணி - காலைமாலை விண்டு தேனைமலரிட்டு * அன்பாம் ஸாங்கபக்தி; அதில்அஶக்தர்க்கு - தாளடையும் ப்ரபத்தி; அதில் அஶக்தர்க்கு-உச்சாரணமாத்ரம்; ஸர்வோபாயஶூந்யர்க்கு, இப் பத்தும் பாடியிடும் தெண்டன்'' என்று கீதாசார்யனைப்போலே அதிகாராநுகுணம் நெறியெல்லாமுரைக்கிறார்'' என்றிறே ஆசார் யஹ்ருதயத்திலே நாயனாருமருளிச்செய்தது;

ஏவம்விதவைபவயுக்தரான, (சீர்மாறன்தாரானே நந்தமக் குத்தாள்) இப்படி உபதேசிக்கைக்குடலான ஜ்ஞாநப்ரேமாதிகளை யுடையவாழ்வார், நம்முடைய ஸ்வரூபாநுகுணமாகத் திருவடிக ளை உபாயோபேயமாக வுபகரித்தருளாரோ? (நந்தமக்கு) தம்மு டைய திருவடிகளிலே பிறந்துமுற்றுண்டுபெற்று (உ) "முயல்கின் றேனுன்றன் மொய்கழற்கன்பையே'' என்றுதரித்துப்போருகிற நமக்கு. ஆகையால் ஆழ்வார் திருவடிகள் நித்யப்ராப்த்ய மென்றபடி. (கூ0)

---

(க) ஆசார்யஹ்ருதயம். (உ) கண்ணி-கூ.

மூ.—தாளடைந்தோர்தங்கட்குத் தானே வழித்துணையாம்
காளமேகத்தைக் கதியாக்கி—மீளுதலா
மேதமிலாவிண்ணுலகிலேக வெண்ணுமாறனெனக்
கேதமுளதெல்லாங்கெடும். (கூக)

பதவுரை.

| | |
|---|---|
| தாள் அடைந்தோர் தங்கட்கு | தன்திருவடிகளை உபாயமாகப் பற்றினவர்களுக்கு |
| தானே வழித் துணையாம் | தானே மார்க்கபந்துவாகிற |
| காளமேகத்தை | நீலமேகம்போன்றஎம்பெருமானை |
| கதி ஆக்கி | வழிக்குரக்ஷகனாகக்கொண்டு |
| மீளுதலாம் ஏதம் இலா | புநராவ்ருத்தி தோஷமற்ற |
| விண்ணுலகில் | பரமபதத்தில் |
| ஏக எண்ணும் | எழுந்தருளவெண்ணின |
| மாறன் என | ஆழ்வாரென்றநுஸந்திக்கவே |
| கேதம் உள்ளதுஎல்லாம்கெடும். | துக்கமென்றுபேர்பெற்றிருப்பவையெல்லாம் ஒழியும். (கூக) |

அவ.—தொண்ணூற்றோராம்பாட்டு. (தாளடைந்தோர் தங்கட்கு) இதில், நாளிடப்பெற்று வழித்துணையோடே போகவொருப்படுகிற வாழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார். எங்ஙனேயென்னில்; "சரீராவஸாநத்திலேபேறு" என்று ஸர்வேஸ்வரன் நாளிட்டுக்கொடுக்கையாலே போக்கிலே யொருப்பட்டு, நெடுங்காலம்முகம பழகினசரீரத்தைவிட்டு, ஹ்ருதயகுஹையில் நின்றும் வழிகண்டு,மூர்த்தந்யநாடியாலே ஸிரஃகபாலத்தை பே(ஹே)தித்துக்கொண்டு, அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்தேறப் போமிடத்தில், கேட்டபோதே துளங்கவேண்டும்படியான யாம்ய மார்க்கத்திலே பட்ட விளைப்பெல்லாமாறும்படி தன்கடாக்ஷாம்ருத வ்ருஷ்டிகளாலே குளிரவழியவார்த்து, யமபடருடைய ஸ்ரவண கடுகமான கடுஞ்சொற்களைக் கேட்டவுள்வெதுப்பாறும்படி, * செவிக்கினிய செஞ்சொற்களாலே செக்தலிப்பித்தும், உக்ரமான யமதர்ஸநத்தால்வந்த வெக்காயமாறும்படி தன்னுடைய ஸௌந்தர்யாம்ருதத்லைதநிரந்தரம் வர்ஷித்துக்கொண்டு, வழியிலுண்டான

விடையூறுகளையும் திவ்யாயுதங்களாலே யிருதுண்டமாகவிட்டு, (க) "நயாமிவாநா ஜுதிடி - நயாமிபரமாங்கதிம்" என்கிறபடியே பெரியதிருவடி திருத்தோளிலே வைத்துக்கொண்டு, ஆதிவாஹிகரைக்காட்டாமல் தானேகொண்டுபோய், திருநாட்டிலே விடுகைக்கு வேடன், வேடுவிச்சி, பக்ஷி, குரங்கு, பிசாசம், சராசரம் முதலானவரை வருத்தமறக்கொண்டுபோய் வைகுந்தத்தேற்றி யருளின காளமேகமான (உ) * அரங்கத் துறையு மின்துணைவனை யொழிய வேறொருவரு மில்லையென்று காளமேகத்தை வழித்துணையாகப் பற்றுகிற * காளதாமரையிலர்த்தத்தை "தாளடைந்தோர் தங்கட்கு" என்றுதொடங்கி யருளிச்செய்கிறரென்கை.

வ்யா—(தாளடைந்தோர் தங்கட்குத்தானே வழித்துணையாம் காளமேகத்தைக்கதியாக்கி) (ங) "சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் மரணமானால் வைகுந்தங்கொடுக்கும் பிரான்" என்று தன்திருவடிகளை யுபாயமாகவடைந்தவர்களுக்குத் தானேமார்க்க பந்துவாம்; ஆதிவாஹிகர்கையிலும் காட்டிக்கொடாதே, (ச) "தன்னுதுழல்கருநிறத்தென் துணையே" என்கிறபடியே 'சுரிகுழற்கமலக்கட்கனிவாய்க் காளமேகத்தையன்றி மற்றொன்றிலம் கதியே" என்றகாளமேகமானதானே * நயாமியிற்படியே நடத்தும். "தாளடைந்தோர்" என்கிறவிதில் தாமுமந்தர்ப்பூ(த-ம்), தரிறே;

(காளமேகத்தைக்கதியாக்கி)ஸாம்ஸாரிகதாபமெல்லாமாறும்படி ஸௌந்தர்யாம்ருதவர்ஷியான காளமேகத்தை வழிக்குரக்ஷகமான கதியாக்கி. அதாவது - "அவனடிநிழற்றடமன்றியாமே" என்றும் "அண்டமூவுலகளந்தவன்" என்றும், 'கூத்தன் கோவலன்-திருமேனி கூராத்தன் தாமரையடியன்றிமற்றிலமரணே" என்றும், "தயாதன் பெற்றமரதகமணித்தடம்" என்றும்; "மணித்தடத்தடிமலர்க்கண்கள் பவளச்செவ்வாயணிக்கொள் நாற்றடங்கோள்தெய்வமசுரரையென்றும் துணிக்கும்வல்லரட்டன்" என்றும், 'காமரூபங்கொண்டெழுந்தளிப்பான்" என்றும், இப்படிவழிக்குவேண்டும் நிழல்தடங்கள் முதலானவையெல்லாம் தானேயானவனென்கை.

---

(க) வராஹசரமம் (உ) தி-மொ-உள-சு, (ங) கo-டு. (ச) திருநெ-கக-

மூ.—கெடுமிடர்வைகுந்தத்தைக் கிட்டினற்போலே
தடமுடையனந்தபுரந் தன்னில்—படவரவில்
கண்டுயில்மாற்காட்செய்யக் காதலித்தான்மாறனுயர்
விண்டனிலுள்ளோர் வியப்பவே. (௯௨)

(க) "அக்ரதஃ ப்ரயயௌ ராமஃ" என்று, அவர்முன்னேபோக (௨) * மன்னனிராமன்பின் வைதேவியென்றுரைக்குமன்னநடையவணங்கு - அவர்தோள்நிழலையண்டை கொண்டு நடந்தாப்போலே நடக்கப்பாரிக்கிறாரிறே.

(மீளுதலாமேதமிலாவிண்ணுலகிலேக வெண்ணும்மாறன்) (௩) "குடி மன்னுமின் சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள்" என்னும்படி மீளுதலாகிற தோஷமின்றிக்கே, (௪) "ந ச புநராவர்த்ததே - ந ச புநராவர்த்ததே" என்றும் (௫) "புணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே" என்றும் (௬) "மீளாப்பொருவரியவிண்ணாடு" என்றும் (௭) "மீட்சியில்லாநாடு" என்றும் சொல்லப்படுகிற பரமவ்யோமஶப்தவாச்யமான பரமபதத்திலே, (௮) "மாகவைகுந்தம் காண்பதற்கென் மனமேகமெண்ணும்" என்று எழுந்தருளமநநம் பண்ணுகிற மோக்ஷலக்ஷ்மியையுடைய மாறனென - ஆழ்வாரென்றநுஸந்திக்க. (கேதமுள்ளதெல்லாம்கெடும்) (௯) "மனக்கேதஞ்சாரா" என்கிறபடியே துஃக்கமென்றுபேர்பெற்றவையெல்லாம் நசிக்கும். ப்ராப்யாலாபதுஃக்கமெல்லாம் நிவ்ருத்தமாம். (௯௧)

பதவுரை.

| | |
|---|---|
| மாறன் | ஆழ்வார் |
| உயர் விண்தனில் உள்ளோர் வியப்ப | உயர்ந்த பரமபதத்திலுள்ள நித்யஸூரிகள் ஆஶ்சர்யப்படும்படி |
| கெடும் இடர் வைகுந்தத்தை | துஃக்கரஹிதமான ஸ்ரீவைகுண்டத்தை |
| கிட்டினற்போல | அடைந்து அடிமைசெய்யப்பெற்றாற்போலே |
| தடம் உடை அனந்தபுரம் தன்னில் | விஸ்தீர்ணமான திருவநந்தபுரத்திலே |

(க) ரா-ஆ-௧௧-௧௦. (௨) பெரியதிரும-டு௯. (௩) தி-வாய்-௩-௧-௯.
(௪) சாந்தோ-அ-௧௫. (௫) பெரி-தி-௩-௫-௨. (௬) ஜ்ஞாநஸாரம்.
(௭) ப்ரமேயஸாரம் (௮) அ௩-௭. (௯) ச-திரு-௮௯.

| | |
|---|---|
| படவரவில் | படத்தையுடையசேஷசய்யதில் |
| கண்துயில் மாற்கு | திருக்கண்வளர்ந்தருளுகிற எம்பெமானுக்கு |
| ஆள்செய்ய | அடிமைசெய்ய |
| காதலித்தான் | விரும்பினார். (கூஉ) |

அவ. — தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. (கெடுமிடர்வைகுந்தத்தை) இதில், பரமபதத்தில் செய்யுமடிமையைத் திருவனந்தபுரத்திலே செய்யப்பாரிக்கிற வாழ்வார் ஸ்ரீஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; குறைவறப்பரமபதத்திலேபோனால் * வானிளவரசான வைகுந்தக்குட்டனுக்குச் செய்யக்கடவ * வழுவிலாவடிமைகளை, நித்யஸூரிகளில்தலைவரான ஸ்ரீ ஸேனாபதியாழ்வானெடுத்துக் கைநீட்டும்படி நிரதிசயபோக்யமான திருவனந்தபுரத்திலே திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டருளுகிற பரமப்ராப்யபூதரான ஸ்ரீபத்மநாபப்பெருமாள் திருவடிகளிலே அநுகூலஜநங்களும் தாமுமாய்ப்போயடிமைசெய்யவேணுமென்று மநோரதிக்கிற * கெடுமிடரிலர்த்தத்தை "கெடுமிடர்வைகுந்தத்தை" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—( கெடுமிடர் வைகுந்தத்தை ) கைங்கர்யஸித்தியாலே நிவ்ருத்த து:க்கராம்படி பண்ணவற்றான ஸ்ரீவைகுண்டத்தை அன்றிக்கே, து:க்கரஹிதமான ஸ்ரீவைகுண்டத்தையென்னுதல், (கிட்டினாற்போல் ) அத்தைப்ராபித்து அடிமை செய்யப்பெற்றாப்போலே. ( தடமுடையனந்தபுரந்தன்னில் படவரவிற்கண்டுயில் மாற்காட்செய்யக் காதலித்தான்) (க) 'ஸஹி ஷூவ ஸ்வ லே வ: - ஏபிஸ்சஸசிவை:' இத்யாதியால் பரதாழ்வான் பாரித்தாப்போலே, * தடமுடையநந்தபுரநகர்தன்னில் * படமுடையரவில் பள்ளிபயின்ற ஸர்வேஸ்வரனுக் கடிமைசெய்ய வபேக்ஷித்தார்.

அதாவது - "பூசனைசெய்கின்றார்கள் புண்ணியம் செய்தவாறே" என்றும், "சாந்தொடுவிளக்கம்தூபம் தாமரைமலர்கள்நல்ல ஆய்ந்துகொண்டேத்த வல்லாரந்தமில் புகழினாரே" என்றும், "அமரராய்த்திரிகின்றார்கட்கு" என்றுதுடங்கி ". நாமும்போய் நணுகவேண்டும்" என்றும் ..படமுடையரவில் பள்ளிபயின்றவன்

(க) ரா-அ-சுo௪ கஉ.

மூ.—வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்ற தேசத்தை
தான்மருவாத்தன்மையினாற்றன்னை—இன்னம் பூமியிலே
வைக்குமெனச்சங்கித்து மால் தெளிவிக்கத்தெளிந்த
தக்கபுகழ்மாறனெங்கள் சார்வு. (கூக)

பாதங்காண நடந்தினை நயர்களுள்ளீர்" என்றும், தாமும் தம்திருவுள்ளத்தோடொத்த ஸ்ரீவைஷ்ணவர்களுங்கூட அடிமைசெய்ய மநோரதித்த படியாகை.

(படவரவிற்கண்டுயில் மாற்காள்செய்யக் காதலித்தான் மாறனுயர் விண்டனிலுள்ளோர் வியப்பவே) ஸர்வோத்தரமான பரமாகாசத்திலுள்ளாராய் * கோயில்கொள் தெய்வங்களான திருவடி திருவனந்தாழ்வான் ஸ்ரீஸேநாபதியாழ்வான் துடக்கமானவர்கள், "நாம் * தெளிவிசும்பு திருநாட்டிலேயிருந்து செய்யுமடிமையை - இவர், * இருள்தருமாஞாலத்திலே யிருந்துபாரிப்பதே!" என்று விஸ்மயப்படும்படி, சேஷஸாயியாய் ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனுக்கு ஸர்வவிதகைங்கர்யங்களையும் செய்யவாதரித்தாராழ்வார். "இவருமொருவரே!" என்று இவர்க்கீடுபாடாயிருக்கிறது. (கூஉ)

பதவுரை.

| | |
|---|---|
| வேய்மருதோள் | மூங்கில்போன்ற திண்ணியதோள்களையுடைய |
| இந்திரைகோன் | ஸ்ரிய:பதியானவன் |
| மேவுகின்றதேசத்தை | எழுந்தருளி யிருக்குமிடத்தை |
| தான் மருவாத்தன்மையினால் | தான்புகப்பெறுமையால் |
| தன்னை இன்னம் பூமியிலே வைக்குமெனச்சங்கித்து | தம்மை இன்னமும் இந்தஸம்ஸாரத்திலேயே இட்டுவைக்குமோவென்று அதிஶங்கித்து |
| மால் தெளிவிக்கத் தெளிந்த | எம்பெருமான்தேற்றத் தேறின |
| தக்கபுகழ்மாறன் | தகுதியான கீர்த்தியையுடைய ஆழ்வார் |
| எங்கள்சார்வு | எமக்குப்புகல். (கூக) |

அவ:—தொண்ணூற்று மூன்றும்பாட்டு. (வேய்மருதோளிந் திரைகோன்) இதில், யதாமநோரதம் பெறுமல் ஸம்ஸாரத்திலே ஸர்வேஶ்வரன் வைக்கவெண்ணினுகைஶங்கிக்க, அவனதெளிவித்த படியை யருளிச்செய்கிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; தம்மநோரதாநுகுணமாக அப்போதே ஆத்தேசத்திலே போயடிமைசெய்யப் பெறுமையாலே கலங்கி, "பழைய படியே நமக்கு ஸம்ஸாரத்திலிருப்பே ஶேஷித்துவிடுகிறதே!?" என்று, ப்ரக்ருதி ஸம்பந்தத்தின் கொடுமை, ஈஶ்வரஸ்வாதந்த்ர்யம் முதலான ஹேதுக்களாலே தமக்குப்பிறந்த வதிஶங்கையை, ஒரு படுக்கையிலே கூடவிருக்கச்செய்தே பண்டுபசுமேய்க்கப்போகிற ப்ரபா(ஸா)தகாலம்வந்து அக்காலத்துக்கடைத்த குயில்மயில் முதலான வற்றினுடைய பாடலாடல் முதலானவடையாளங்களையும் காண்கையாலே, அவற்றையேகொண்டு "க்ருஷ்ணன் பசுமேய்க்கப் போனுன்" என்றதிஶங்கைபண்ணி நோவுபடுகிற விடைப்பெண்கள் பேச்சாலே யருளிச்செய்கிற * வேய்மருதோளிணையிலர்த்தத்தை "வேய்மருதோளிந்திரைகோன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

வ்யா.- (வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை) (௧) "வேய்போலுமெழில் தோளி" என்னும்படி அணைக்கைக்குப் பணைபோலே யிருக்கிற தோளையுடைய பெரியபிராட்டியார்க்குவல்லபனனவன், (௨) "படமுடையரவிற்பள்ளி பயின்றவன்" என்று அநந்தஶாயியாய் (௩) "திருமாற்கரவு" என்று இருவருமாய்ச்சேர்த்தியாயிருக்கிற தேசத்தை; (௪) "மாதவாவென்ன" என்றுரிறே. (தான் மருவாத்தன்மையினுல்)(௫) "நாமும போய்நணுகவேண்டும்" என்னுமபி(பி)நிவேஶத்தையுடைய தாம் போய்ப்புகப்பெறுதபடியாலே. (தன்னையின்னம் பூமியிலே வைக்குமெனச்சங்கித்து) (௬) "நன்றுபஞ்சுவன் நரகம் நானடைதல்" என்றதம்மை இன்னம் ஸ்வாதந்த்ர்யாதிகளாலே ஸம்ஸாரத்திலே யிட்டுவைக்குமோவென்று ஶங்கித்துப்போர.

அதாவது - இவர் ரக்ஷணசிந்தை பண்ணிக்கொண்டு ஸௌஹார்த்தயுக்தனனவனும் "என்னைகழியேல்". என்னும்படி

(௧) பெரு-தி-௯-௪. (௨) தி-வாய்-௯௨-அ. (௩) ௧-திருவ-௫௩.
(௪) ௯௨-௪0. (௫) ௯௩-௬ (௬) ௭௧-௬.

பொருந்தி ப்ரத்யக்ஷமானகாரம்போலே யிவர் கையிலேயிருக்க, ஆத்தசையிலே ஸ்வரக்ஷணத்தில் ‡கைவாங்கியிருக்குமவர்கள் விஷயத்தில்ரக்ஷணத்திலே அவன் மண்டி, அங்கே விஸ்லேஷிக்கும் காலத்தையும், அவன்கைகழிந்தால் ஸப்தாதிகள் பாத(ஸாய)கமாகிறபடியையும், காலதைர்க்க்யா(தெய்வா)ஸஹதையையும், ஆஸ்ரித ரக்ஷணத்தில் அந்யபரதையாலே அந்தராயங்கள் புகும்படியையும், அவனுக்கறிவிக்கிற ப்ரகாரத்தை;

"வேய்மருதோளிணை" என்று தொடங்கி "ஆமருவினநிரை மேய்க்கநீபோக்கொரு பகலாயிர மூழியாலோ" என்றும் "தகவிலை தகவிலை - இனியுன்னைநீ பிரிவையாமால் வீவநின் பசுநிரைமேய்க்கப் போக்கு" என்றும் "வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கு - சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப் பிறந்தவித் தொழுத்தையோந்தனிமைதானே" என்றும், "நின்தொழுத்தனிஸ் பசுக்களையே விரும்பித்துறந்தெம்மையிட்டவை மேய்க்கப்போதி" என்றும் "பிணியவிழ்மல்லிகை வாடைதூவப் பெருமதமாலையும் வந்தின்றாலோ" என்றும், "வெடிப்புநின் பசுநிரைமேய்க்கப்போக்கு" என்றும், "ஆமகிழ்ந்துகந்தவைமேய்க் கின்றுன்னோடசுரர்கள் தலைப்பெய்யில் யவங்கோலாங்கே" என்றும், "அசுரர்கள் தலைப் பெய்யில் யவங்கொலாங்கென்றாழு மென்னாருயிரான் பின்போகேல்-நீயுகக்கு நல்லவரொடு முழிதராயே" என்றும், "உகக்குநல்லவரொடும்" என்று தொடங்கி "அவத்தங்கள் விளையுமென் சொற்கொள்" என்றும் "அவத்தங்கள் விளையுமென் சொற்கொள் - இவந்தி அம் பசுநிரைமேய்ப்புவத்தி" என்றும். இப்படி பஹுமுகமாக ஸங்கிக்க,

(மால்தெளிவிக்கத்தெளிந்த) அதாவது * (க) அணியாய்ச்சியர் சிந்தையுட்குழகனானவனும், (உ) ஹயாஹீநா - ஓஹ்நேத்ரவிஜீவாவ:-த்வயாஹீநா - முஹூர்த்தமபிஜீவாவ:" என்னும்படி (௩) * அவனைவிட்டகன்றுயிராற்றகில்லாதே * அவனொடும் பிரிவதற்கிரங்கும்படியான விவர்கள் ப்ரேமஸ்வபாவத்தைக் கண்டு, "செங்கனிவாயெங்களாயர்தேவு" என்னும்படி (ச) * ஸவி

(க) ௧௦-தி-௧௦. (உ) ரா-அ-௫௩-௩௧, (௩) ௯௯-௯௯.
(ச) வி பு-ரு-௯௯-௩- † அஜ்ஞராயிருக்கிறவர்.

மூ.—சார்வாகவேயடியில்தா னுரைத்தபத்திதான்
சீரார்பலத்துடனே சேர்ந்ததனைச்—சோராமல்
கண்டுரைத்தமாறன் கழலிணையேநாடோறும்
கண்டுகக்குமென் னுடையகண். (௯௪)

---

லாஸஸ்யந்தம்பண்ணி, * அணிமிகுதாமரைக்கையாலே (க) "அஞ்சேல்" என்றாஸ்வஸிப்பித்து "உம்முடைய வபேக்ஷிதத்தின்படியே செய்கிறோம்" என்றதிஸங்கையைத்தீர்த்தானாயிற்று. அதாவது - பசுநிரைமேய்ப்பொழிகை; அத்தைப்பற்ற "தாமோதரன்" என்றார். (மால்தெளிவிக்கத்தெளிந்த) க்ருஷ்ணன்தெளிவிக்கத் தெளிந்த. கலங்கினவனைத் தேற்றுமவனிறே. (தக்கபுகழ்மாறனெங்கள் சார்வு) ஸங்காஹேதுவின்றிக்கே கூடவிருக்கச்செய்தே ஸங்கிக்க, ஸர்வஜ்ஞனை ஸர்வேஸ்வரன் ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராய், அத்தாலே தமக்கு ஸத்ருஸமான யஸஸ்ஸையுடையவாழ்வார். அநந்யகதிகளான வெங்களுக்கு அபாஸ்ரயம். (௯௩)

---

பதவுரை.

| | |
|---|---|
| அடியில் | கீழ் * வீடுமின்முற்றத்திலே |
| சார்வுஆகவே | எல்லார்க்கும் உபாதேயமாகவே |
| தான் உரைத்தபத்திதான் | தம்மாலருளிச்செய்யப்பட்ட பக்தியானது |
| சீர் ஆர்பலத்துடனே | ப்ரபத்தியாகிற சிறந்தபலத்துடனே |
| சேர்ந்ததனை | சேர்ந்தபடியை |
| கண்டு | அறிந்து |
| சோராமல் உரைத்த | ஒன்றுங்குறையாமல் அருளிச்செய்த |
| மாறன் | ஆழ்வாருடைய |
| கழல் இணையே | திருவடியிணைகளையே |
| நாள்தோறும் | தினந்தோறும் |
| என்னுடையகண் | என்கண்கள் |
| கண்டு உகக்கும் | கண்டுகளிக்கும். (௯௪) |

அவ.—தொண்ணூற்றுநாலாம்பாட்டு. (சார்வாகவேயடியில்) இதில், அடியிலுபதேஸித்த பக்தி-ஸ்வஸாத்யமான பலத்தோடே

---

(க) இ-மொ-௯௩-௫.

தலைக்கட்டினபடியை யருளிச்செய்த திவ்யஸூக்தியை அநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ் காளமேகத்தை வழித்துணையாக (௧) * தாளதாமரையிலேபற்றிப் போக்கிலேயொருப்பட்டவராகையாலே * உயர்வறவுயர்நலத்தில் * அயர்வறுமமரர்களதிபதியாக உறுதியிட்ட பரத்வமே பரமப்ராப்யமாகையாலே, அந்தப்ராப்யவேஷத்தையும் ப்ராப்யபலமான கைங்கர்யத்தையும் (௨) * செடுமிடரிலே யநுஸந்தித்து, அந்தப்ராப்யவேஷத்தைப் பெறுகைக்குபாயமாக (௩) * வீடுமின்முற்றத்திலும் (௪) * பத்துடையடியவரிலும் தொடங்கின பக்தியானது ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச்சொல்லி, தமக்கு உபாயமாக முதற்றிருவாய்மொழியிலே சொன்ன ப்ரபத்தியையும் சொல்லித்தலைக்கட்டுகிற * சார்வேதவநெறியிலர்த்தத்தை, "சார்வாகவேயடியில்" இத்யாதியாலே யருளிச்செய்கிறரென்கை.

வ்யா.—(சார்வாகவேயடியில் தானுரைத்தபத்திதான்) (௩) * வீடுமின்முற்றத்திலும் (௪) * பத்துடையடியவரிலும் பரோபதேசரூபேண எல்லார்க்கு மபாஸ்ரயமாகவருளிச்செய்த ப்ரபத்தியோடு விகல்பிக்கலாம்படியான பக்தியானது தான். (௫) "ஶரண்ய:-ஶரண்ய:" என்றத்தை, (௬) "ஸர்வலோகஶரண்யாய - ஸர்வலோகஶரண்யாய" என்றும், (௭) "வாஸஂயோஶ்ரணௌ தேவீநிவபாத - பாதயோஶ் ஶரணம்வேஷீநிபாத" என்றும் ஸாக்ஷாத்பலத்தோடே தலைக்கட்டினப்போலே.

இவரும், (௮) "உம்முயிர் வீடுடையானிடைவீடுசெய்மினே" என்றும், (௯) "எல்லையிலந்நலம்புல்கு பற்றற்றே" என்றும், (௧0) "உள்ள முறை செய லுள்ள விம்மூன்றையு முள்ளிக்கெடுத்திறையுள்ளிலொடுங்கே" என்றும், (௧௧) "பத்துடையடியவர்க் கெளியவன்" என்றும், (௧௨) "அம்பதவன் வணக்குடைத்தவநெறிவழிநின்று" என்றும் (௧௩) "நன்றெனநலம்செய்வது" என்றும் இப்படி யருளிச்செய்த ப(க்)திமார்க்கமானது ஸாத்யமானபலத்

(௧) தி-வாய்-௧௧. (௨) ௧0. (௩) ௨. (௪) ௩. (௫) ரா-ஸு-. (௬) ரா-யு-௧௨-௧௫. (௭) ரா-யு-௧௭. (௮) தி-வாய்-௨-௧. (௯) ௨-௪. (௧0) ௨-௮. (௧௧) ௩-௧. (௧௨) ௩-௫. (௧௩) ௩-௭.

மூ.—கண்ணனடியிணையிற் காதலுறுவார்செயலை
இன்னமுறவேசுருங்கச்செப்பியே—மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கை தலைக்கட்டினான்மாறன்
ஆனபுகழ்சேர் தன்னருள். (கூ௫)

தோடே பொருந்தினபடியை, "சார்வேதவநெறிக்குத்தாமோதரன்றாள்கள்" என்றும், "அருளினன் துயரறு சுடரடி தொழுதெழு" (க) "வண்புகழ்நாரணன் திணகழல்சேர்" (உ) "நாளும் நம்திருவுடையடிகள்தம் நலங்கழல்வணங்கி" என்றும் அடியே தொடங்கியருளிச்செய்துபோருகிறப்ரபத்தி ஸ்வஸாத்ய(யூ)த்தோடேபொருந்தினபடியை.

"பண்டேபரமன் பணித்தபணிவகையே - கண்டேன் கமலமலர்ப்பாதம் காண்டலுமே விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்" என்றுமருளிச்செய்து, மற்றும் பக்திப்ரபத்திக்குபயுக்தமானவற்றையும் "கார்மேகவண்ணன் கவலநயனத்தன்" என்றும் "திருமெய்யுறைகின்ற செங்கண்மால்" என்றும் "மடப்பின்னைதன்கேள்வன்றாள்கண்டுகொண்டு" என்றும் "தலைமேல்புனைந்தேன்" என்றும் "நச்சப்படும்நமக்கு" என்றும் "வரையெடுத்தான்பாதங்கள் வாழியென்னெஞ்சேமறவாது வாழ்கண்டாய்" என்றுமருளிச்செய்தாரிறே.

ஏவம்விதமானவர்த்த(ம்)ங்களை. (சோராமல் கண்டுரைத்த மாறன்) இவ்வர்த்தமானது வ்யர்த்தமேநழுவிப்போகாமே இஸ்ஸூக்ஷ்மார்த்தத்தை தர்ஸித்தருளிச்செய்தவாழ்வார். (கழலிணையேநாடோறும் கண்டுகக்குமென்னுடையகண்) இப்படி ஸூக்ஷ்மார்த்ததர்ஸியானவாழ்வார் சேர்த்தியழகையுடைய திருவடிகளையே, கண்டுகக்கும் - ஸேவித்துஹ்ருஷ்டமாம்; (ங) "ஜேது ஷ்டி: - மே-த்ருஷ்டி:" என்னும்படியானவென்கண்கள். * தாமோதரன் தாளினுடைய ஸ்தாநத்திலே இவர்க்கு *மாறன்தாளாயிற்று. (கூச)

பதவுரை.

| | |
|---|---|
| கண்ணன் அடியிணையில் | எம்பெருமான் திருவடிகளில் |
| காதலுறுவார் செயலை | பக்தியுடையவர்களின்க்ருத்யத்தை |

(க) தி-வாய்-க-உ-க௦ (உ) தி-வாய்-க-ங-அ- (ங) ரா-அ-சஉ-கூ௦-

| | |
|---|---|
| திண்ணம்உற | த்ருடமாக அதிலே ஊன்றும்படி |
| மாறன் | ஆழ்வார் |
| § ஆனபுகழ்சேர் தன் அருள் | சிறந்த கீர்த்தியோடேசேர்ந்த தம தக்ருபையினாலே; |
| சுருங்கச்செப்பி | சுருக்கமாக அருளிச்செய்து |
| மண்ணவர்க்கு | பூமியிலுள்ள ஸர்வாத்மாக்களுக்கும் |
| தான் உபதேசிக்கை தலைக் கட்டினான் | தாம் உபதேஶிக்குந் தொழிலைப் பூர்த்திசெய்தருளினார். (௯௫) |

அவ.—தொண்ணூற்றைந்தாம்பாட்டு. (கண்ணனடியிணையில்) இதில், பக்திமான்கள் பரிமாற்றத்தைச்சுருங்க வருளிச்செய்தபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; ஈஶ்வரன் தம்மைப் பரமபதத்திலே கொண்டுபோகையிலே த்வரிக்கிறபடியைக் கண்டு, "இவர்களுக்கினியொன்று குறைப்பட்டுக்கிடக்கவொண்ணாது" என்றுபார்த்து, தம்முடையபரமக்ருபையாலே, ஸர்வேஶ்வரனைப் பற்றுகையாலும், இவர்களுக்கு ஸங்க்ரஹமாகவேணுமென்று பாசுரப்பரப்பறச் சுருக்கத்திலே பக்திமான்கள் பரிமாற்றமிருக்கும்படியை ஸம்ஸாரிகளுக்குபதேசித்து, பரோபதேசத்தை நிகமிக்கிற * கண்ணன் கழலிணையிலர்த்தத்தை * கண்ணனடியிணையாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(கண்ணனடியிணையில்) க்ருஷ்ணன் திருவடிகளில். (காதலுறுவார்செயலை) பக்தியுக்தராயிருப்பார் க்ருத்யத்தை. (திண்ணமுறவே) த்ருடமாகவதிலேயூன்றும்படி. (சுருங்கச்செப்பியே) ஸங்க்ரஹமாகவருளிச்செய்து. (ஏ) ஈற்றசை. (மண்ணவர்க்கு) பூமியிலுண்டான ஸர்வாத்மாக்களுக்கும். (தானுபதேசிக்கை தலைக்கட்டினான் மாறன்) பிராட்டி (க) "விதித:-விதித:" இத்யாதியாலேபரோபதேசத்தை முடித்தாப்போலே, கீழுபதேசித்துக் கொடுபோந்த பரோபதேஶத்தைப் பரிஸமாப்திபண்ணி யருளினார் பெருமதிப்பரானவாழ்வார். (ஆனபுகழ்சேர் தன்னருள்) ஶ்லாக்யமான யஶஸ்ஸோடே கூடினதம்முடைய பரமக்ருபையாலே -

(க) ரா-ஸு ௨௧-௨௫-

§ 'ஆனபுகழ்சேர்தனருளால்' என்றும் பாடம்.

மூ — அருளாலடியிலெடுத்தமாலன்பா
லிருளார்ந்த தம்முடம்பையிச்சித்து—இருவிசும்பி
லித்துடன்கொண்டேக விவரிசைவுபார்த்தேயிருந்த
சுத்திசொல்லுமாறன் செஞ்சொல். (௯௬)

பரோபதேசத்தைத் தலைக் கட்டியருளினார். (ஆனபுகழ்) *உலகத்தார் புகழும்புகழ். (தன்னருள்) * அருள் கொண்டாடும்படியானவருள்.

கண்ணனடியிணையில் காதலுறுவார் செயலைச் சுருங்கச் செப்புகையாவது - "கண்ணன்கழலிணைநண்ணும் மனமுடையீர் எண்ணுந்திருநாமம் திண்ணம்நாரணமே" என்றும், "நாரணனெம்மான்" என்றும், "கோள்வாயரவணையான்றுள்வாய் மலரிட்டுநாள் வாய்நாடீரே" என்றும், "நாடீர்நாடோறும் வாடாமலர்கொண்டு பாடீரவன்நாமம்" என்றும், "மேயான்வேங்கடம் காயாமலர்வண்ணன் பேயார்முலையுண்டவாயான் மாதவனே" "மாதவனென்றென்றோதவல்லீரேல்" என்றும், "பேராரோதுவாரரராரமரரே" என்றும், "சூனைநன்மலரிட்டு நினையின்நெடியானே" என்றும், இப்படி (௧) * எண்பெருக்கில் எண்ணுந்திருநாமத்தின் ஸப்தார்த்தங்களைச் சுருக்கி "மாதவன்" என்றுத்வயமாக்கி கரணத்ரய ப்ரயோஜந வ்ருத்தி ஸம்ஸாரிகளுக்குக் கையோலைசெய்து கொடுத்தபடி யென்கை. (௯௫)

பதவுரை.

| | |
|---|---|
| அருளால் | நிர்ஹேதுகக்ருபையாலே |
| அடியில்எடுத்த | (அஜ்ஞாநவர்த்தகமான ஸம்ஸாரத்தினின்றும்) அடியிலே எடுத்தருளின |
| மால் | ஸர்வேஶ்வரன் |
| அன்பால் | பரமப்ரீதியாலே |
| இருள்ஆர்ந்ததம் உடம்பைஇச்சித்து | அஜ்ஞாநப்ரசுரமான தம்முடைய தேஹத்தை அபேக்ஷித்து |
| இருவிசும்பில் | பரமபதத்தில் |

(௧) ஆசார்யஹ்ரு-௯-

இத்துடன்கொண்டு ஏக — (ஆழ்வாரை) இந்த ஶரீரத்தோடே கொண்டுபோக

இவர் இசைவுபார்த்து இருந்த—இவ்வாழ்வாருடைய அநுமதியை எதிர்பார்த்திருந்த

சுத்தி — அவனுடைய ஶக்தியை

மாறன் செம்சொல் — ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியானது

சொல்லும் — தெரிவிக்கும். (கூகூ)

அவ.—தொண்ணூற்றொரும்பாட்டு. (அருளால்) இதில், பரமபதத்தில் கொடுபோகையிலே த்வரிக்குமிடத்திலும் விதேயபாரதந்த்ரனாய்ச் செய்கிறபடியைப் பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச் செய்கிறார்;- எங்ஙனேயென்னில்; இப்படிப்பரோபதேசம் தலைக்கட்டினபின்பு தம்மை அவன் திருநாட்டிலே கொடுபோகத்வரிக்கிறபடியையும், கொடுபோமிடத்தில் தாம்விரும்பியபடி கொடுபோகவேணுமென்று தமக்கவன் பாதந்த்ரனாய் நிற்கிறபடியையும், தாம்பெற்ற பேற்றின் கனத்தையும், தம்முடைய திருவுள்ளத்துக்குச்சொல்லி யினியராய்ப்பேசுகிற * அருள்பெறுவாரிலர்த்தத்தை அநுவதித்தருளிச்செய்கிறார் "அருளாலடியில்" என்று துடங்கியென்கை.

வ்யா.—(அருளாலடியிலெடுத்தமால்) (க)"காரணகுணைவஸ்வ வசிஷ்டாயிதம் * யத்ராநந்தா: - கரணகளேபரைர்க்கடயிதும் தயமானமனா:" என்றும் "அந்நாள்நீதந்தவாக்கை" என்றும் அடியிலேயெடுத்தபடியாதல். அன்றிக்கே, "மயர்வறமதிநலமருளினன்" என்று கேவலநிர்ஹேதுக க்ருபையாலே அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்தில் நின்றும் அடியிலேயெடுத்த ஸர்வேஶ்வரனென்றுதல்; அன்றிக்கே,"மாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன்" என்னும்படி அயோக்யநாநுஸந்தாநத்தாலே யகன்றுமுடியாதபடி யெடுத்தவென்றாகவுமாம், (அன்பாலிருளார்ந்ததம்முடம்பையிச்சித்து) * அந்தாமத்தன்பு செய்யுமன்பாலே, * இருள்தருமாஞாலத்தில் ஆசையாகையாலே, இருளார்ந்த தம்முடம்பையிச்சித்து - அஜ்ஞாநப்ரசுரமானதம் தேஹத்தைவாஞ்சித்து; அன்றிக்கே,(இருளார்ந்த தம்முடம்பையிச்சித்து) ராகாந்தனாய், "நெய்யூண்மருந்தோ மாயோனே" என்று இவன் திருவாய்ப்பாடியில் வெண்ணெ

(க) ர-ஸ்த

மூ.—செஞ்சொற்பரன்றனது சீராருமேனிதனில்
வஞ்சித்துச்செய்கின்றவாஞ்சைதனின்—விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக் கைவிடுவித்துக்கொண்ட
திண்டிறல்மாறன்நந்திரு. (கஎ)

---

யையாதரித்தாப்போல் ஜ்ஞாநபரிமளம் விஞ்சின, சரமஶரீரமாகை யாலே இவர்திருமேனியை அவனாதரிக்கப்புக்கான் னென்றுமாகவு மாம் (இருவிசும்பில்) பெரியவானிறே.

(இத்துடன்கொண்டேக)இவர்''அஜ்ஞாநாவஹம்''என்றநாதரிக்கிற விஶ்ஶரீரத்துடனேகொடுபோக. (இவரிசைவுபார்த்தேயிருந்த சுத்திசொல்லும்மாறன் செஞ்சொல்) விதி(யி)பாரதந்த்ரனாய், (க) "ஸ்வேநைவ ஸ்ஸஹஸாஸ்ரா - ஸமாஸ்ருஸக்குலாம்க்ருத்வா'' இத்யாதிப்படியே பிராட்டி திருவுள்ளக்கருத்தைப்பின்செஞ்சு செய்தாப்போலே, இவரநுமதிபார்த்தே யிருந்தவவனுடையஸத்திதியைச் சொல்லுமாழ்வாருடைய ஶ்ராவ்யமான ஶப்தங்கள்.

அதாவது - "என்னெஞ்சத்துளளிருந்து'' என்றும் "நீபோகாவென்னெஞ்சத்தெப்பொழுதும்'' என்றும், "எங்ஙன்றி செய்தேனாவென்னெஞ்சில் திகழ்வதுவே'' என்றும், "இகழ்வின்றி யென்னெஞ்சத் தெப்பொழுதும்பிரியானே'' என்றும், இப்படி இவர்திருவுள்ளத்தைவிரும்பி, "அருள்பெறுவாரடியார் தம்மடியனேற்காழியானருள் தருவானமைகின்றனது நமதுவிதிவகையே'' என்றும், "இன்று விண்ணுலகம்தருவானாய் விரைகின்றான் விதிவகையே'' என்றும், இவர் தம் தேஹத்தையொழியக்கொடுபோக வேணுமென்றபடியே பாரதந்த்ரனாய் நின்றகுணஸத்தியைப் பேசினபடியென்கை. * விதிவகையேநடத்துமவனே உபதேஶஸ்பாத்ரமென்றபாத்ரஸத்தியிறே. இசைவுபார்த்தேயிருந்தசுத்தியென்று - அவ்வர்த்தாந்தத்தைப் பேசினபடியென்றுமாம். (கசு)

---

பதவுரை.

| | |
|---|---|
| செஞ்சொல்பரன் | செஞ்சொல்மறைப்பொருளாகி நின்ற பரமபுருஷன், |
| தனது | தம்முடைய |

---

(க) ரா-ஸு-கக-கo-

| | |
|---|---|
| சீர் ஆரும்மேனிதனில் | ஜ்ஞாநாதிகுண பரிபூர்ணமான திருமேனியிலே |
| வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின் விஞ்சுதலைக்கண்டு | வஞ்சனையாகச் செய்கிற விருப்பத்தின் மிடுதியைக்கண்டு |
| அவனைக்கால்கட்டி | அவன் திருவடிகளைக் கட்டிக்கொண்டு |
| கைவிடுவித்துக்கொண்ட | (அவன்மாயவலையினுள் தாம்அகப்படாதபடி) தம்மைவிடுவித்துக்கொண்ட |
| திண்திறல்மாறன் | த்ருடமான ஶக்தியையுடைய ஆழ்வார் |
| நம்திரு | நம்முடைய ஸம்பத்தாயிராநின்றார். |

அவ.-தொண்ணூற்றேழாம்பாட்டு. (செஞ்சொல்பரன்) இதில், அவன், தேஹசபலனாய் ஆதரிக்க, இவர் "விரோதியான ஶரீரத்தை விடுவி" என்று விடுவித்துக்கொண்டமை பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார் எங்ஙனேயென்னில்; தம்மோடேவந்துகலந்து தமக்குப்பரதந்த்ரனாய்த் தம்திருமேனியிலே அத்யபி(ஹி)நிவிஷ்டனாய்த்திருமேனியோடே தம்மைத்திருநாட்டிலே கொடுபோகவேணுமென்று அவன் தம்திருமேனியிலே மிகவும் பண்ணுகிற சாபலத்தைக்கண்டு, "நம்பக்கலாதராதிஶயத்தாலேயன்றோ இவன் நம்முடம்பையாதரிக்கிறது" என்றுபார்த்து, "இதில் தோஷமறியாமல் ஸாகாங்க்ஷ(மாஸ)னாயிருக்கிற விவனுக்கு இதின்தோஷத்தையுணர்த்தவே இத்தைத்தவிரும்" என்று நினைத்து, இதின் தோஷங்களை அவனுக்கறிவிக்க, அபிமதவிஷயத்தி லழுக்கு உகப்பாரைப்போலே அதுதானே அவனுக்குமேல்விழுகைக்குடலாக, "எனக்கிது மிகவுமபிமதமாயிருக்கும், ஆனபின்பு இத்தைக்கழிக்கவேணும்" என்று இவர் அவன்திருவடிகளிலே தலையைமடுத்துச் சரணம்புக, இவர்நிர்ப்பந்தத்தைப் பார்க்குமவனாகையாலே "இவர்க்கபிமதமாகில் வருந்தியும்இத்தைக்கழித்துக்கொடுக்கக்கடவோம்" என்றுதலைதுளுக்க, "தம்சொலவைப் பரிபாலிப்பதே! இதொருஶீலமிருந்தபடியே!" என்று தலைதுலுக்குகிற * செஞ்சொற்கவியி

லர்த்தத்தை "செஞ்சொல்பரன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறரென்கை.

வ்யா.---(செஞ்சொல்பரன்) (க) "செஞ்சொற்கவிகாள் பொருளாகின்ற தேவர்கள்நாயகன்" என்கிறபடியே - செவ்வியசொல்லானவித்திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கப்படுகிற ஸர்வஸ்மாத்பரனை ஸர்வேஸ்வரன். இதுதான் * செவிக்கினிய செஞ்சொல்லிறே. (சீராரும்மேனிதனில்) (உ) * தனிச்சிறையில் விளப்புற்ற அஸ்நாதையாயிருந்த பிராட்டிவடிவைக்காணவாசைப்பட்டாப்போலே, * பிறவியஞ்சிறையிலே ஜ்ஞாநபக்த்யாதிகள் விஞ்சியிருக்கிற விக்ரஹத்திலே.

(வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின் விஞ்சுதலைக்கண்டு) அதாவது - "வஞ்சக்கள்வனகையாலே -நெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகிநிறைந்தான்" என்றும், "என்னை முற்றுமுயிருண்டே" என்றும், "என்னைமுற்றுமுயிருண்டெண் மாயவாக்கையிதனுட்புக்கு" என்றும், "என்கொலம்மான்றிருவருள்கள் - நன்கெண்ணுடலம்கைவிடான்" என்றும், "திருமாலிருஞ்சோலைமலையே" என்று துடங்கி "ஒருமாநொடியும் பிரியான்" என்றும், இப்படி இவர்திருமேனியை மேல்விழுந்து அத்யாதரம் பண்ணுகிறபடியைக்கண்டு; "உடனுமுயிரும் மங்கவொட்டு" என்றும், "பொங்கைம்புலனும்" என்றுதுடங்கி "மானாங்காரமனங்கள் - மங்கவொட்டு" என்றும், இதின் தோஷதர்ஶநபூர்வகமாக அவனைக்காற்கட்டித்தம்காற்கட்டைவிடுத்துக்கொண்டபடியென்கை.

† (கைவிடுவித்துக்கொள்ளுகையாவது - அவன் காலைக்கட்டிக்கை விடுவித்துக்கொண்டாரென்றபடி.) (கைவிடுவித்துக்கொண்டதிண்டிறல்மாறன்) ஸர்வஶக்தி, "ஶரீரத்தோடேகொடுபோகவேணும்" என்று கரக்ரஹணம்பண்ண, இவர், (ஃ) சரணக்ரஹணம்பண்ணி விடுவித்துக்கொண்ட த்ருடமான ஶக்தியையுடைய ஆழ்வார், (நந்திரு) (க) "ஸ ஹி ஸ்ரீமாந் ஸஜ்ஜநஸ்ய - ஸம்பச்சலாத்விகஜநஸ்ய" என்னும்படி ஆழ்வாரானமாறன் நம்முடையஸம்பத்து. (கஎ)

(க) பெரி-தி-சச-எ (உ) தி-வாய்-ந அ-ல (ஃ)- ஶடகோபாஷ்டகம்.
† குண்டலிதம் அதிகம்

மூ. — திருமால் தம்பால் விருப்பஞ்செய்கின்றநேர் கண்டு
அருமாயத் தன்றகல்விப்பானென் — பெருமால்நீ
இன்றென்பாற்செய்வானென்னென்ன விடருற்றுநின்றான்
துன்னுபுகழ்மாறனைத்தான் சூழ்ந்து. (௯௮)

பதவுரை.

| | |
|---|---|
| திருமால் | ஸ்ரீய:பதியானவன் |
| தம்பால் | தம்விஷயத்தில் |
| விருப்பஞ்செய்கின்றநேர் கண்டு | — அத்யாதரஞ் செய்யும்படியைக் கண்டு |
| அன்று அருமாயத்து அகல் விப்பானென் | "எம்பெருமானே! அன்று அநாதி காலம் ப்ரக்ருதியிலே இட்டு வைத்து அகற்றிவிடுவானென்? |
| இன்று | இப்பொழுது |
| என்பால் | என்னிடத்தில் |
| நீ பெருமால் செய்வான் என் | மிக்க வ்யாமோஹத்தைச்செய்வானென்?" |
| என்ன | என்றுகேட்க, |
| துன்னுபுகழ் | மிக்கபுகழையுடைய |
| மாறன் | ஆழ்வாரை |
| தான் சூழ்ந்து | தான் வளைந்து |
| இடருற்றுநின்றான் | (அவர் கேட்டகேள்விக்கு விடை சொல்லமாட்டாமல்) விம்மல் தும்மலாய்நின்றான். (௯௮) |

அவ. — தொண்ணூற்றெட்டாம்பாட்டு. (திருமால்தன்பால் விருப்பம்) இதில், இப்போதாதரிக்கிறதேவர் அநாத்யநாதரஹேது சொல்லுமென்று மடிபிடித்துக்கேட்க; அவன் அதுக்கொன்றும் சொல்லாமல் நிருத்தரானபடியை யருளிச்செய்கிறவாழ்வார் ஸ்ரீஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார்; எங்ஙனேயென்னில்; முதலிலே அத்வேஷத்தைப்பிறப்பித்து, ஆபி(ஸி)முக்யத்தையுண்டாக்கி ஆஸ்ரயணருசியைவிளைத்து, தானே யுபாயமாய், தன் திருவடிகளில் ப்ரேமத்தையும் பரமபக்திபர்யந்தமாக முற்றுவித்து, தன்னையல்லது செல்லாதபடிபண்ணி, நாம்சொன்னபடியே செய்வானுக்கு

சமைந்து நம்மை இவனிப்படித்தலையாலே சுமவாநின்றதுக்கடயே தென்று அவனைக்கேட்க; அவன் நிருத்தரனாய்க்கவிழ்ந்தலையிட்டு நிற்க; "நிர்ஹேதுகம; காதே!" என்று ப்ரீதராய், தம்மையங்கீகரித்தபடியையும், அங்கீகாரஹேதுவானவவன்க்ருபாதிகுணங்களையநுஸந்தித்து, "இதொருநிர்ஹேதுகவிஷயீகாரமிருந்தபடியே!" என்று வித்த(ஸ)ராகிற * திருமாலிருஞ்சோலைமலையிலர்த்தத்தை "திருமால்தம்பால" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா.—(திருமால்தம்பால் விருப்பம்செய்கின்ற நேர்கண்டு) (க) "ஜயிகம்வ ... - அதிகம் புரவாஸாச்சமங்யேதவசதர்ஶநாத்" என்னும்படி ஶ்ரியஃபதியானவவன் தம்முடையவிஷயத்திலே அத்யாதரம்பண்ணுகிறபடியைக் கண்டு; அதாவது - "திருமால்வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்" என்றும், "இன்று வந்துபேரனென்றென்னெஞ்சு நிறையப்புகுந்தான்" என்றும், "திருப்பேரானடிச்சேர்வதெனக்கெளிதாயினவாறே" என்றும், "தெளிதாகியசேண்விசும்பு தருவானே" என்றும், "வானே தருவானென்னக்காயென்னொடொட்டியூனேய்குரம்பையிதனுள்புகுந்து இன்றுதானே தடுமாற்றவினைகள் தவிர்த்தான்" என்றும், "இன்றுவந்திருப்பேனென்றென்னெஞ்சு நிறையப்புகுந்தான்" என்றும், "உண்டுகளித்தேற்கு" என்று தொடங்கி "கண்டுகளிப்பக்கண்ணுள் நின்றகலான்" என்றும் "கருத்தின்கட்பெரியன்" என்றும், "திண்ணமென் மனத்துப்புகுந்தான் செறிந்தின்றே" என்றும், இப்படிமேன்மேலனவத்யாதரத்தைப் பண்ணினபடியென்கை. ஏவம்விதநிர்ஹேதுக வ்யாமோஹத்தைதர்ஶித்து, (அருமாயத்தன்றகல்விப்பானென் பெருமால்நீயின்றென்பால் செய்வானென்னென்ன) அன்றநாதிகாலம் துரத்யயமான ப்ரக்ருதியிலேயிட்டுவைத்து அகற்றிவிடுவானென்? இன்று நிர்ஹேதுகமாகநிரவதிகவ்யாமோஹத்தை, ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாய் நிரஸ்தஸமஸ்த ஹேயனான நீ, அஜ்ஞனாய் அஶக்தனாய் ஹேயஸம்ஸர்க்கார்ஹனாயிருக்கிறவென்விஷயத்திலிப்படிச் செய்வானென்னென்றுகேட்க. "இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான்! அன்றென்னைப்புறம் போகப்புணர்த்ததென் செய்வான்! குன்றென்னத்திகழ் மாடங்கள்சூழ்திருப்பேரா! னென்றெனக்கருள்செய்ய வுணர்த்தலூற்றேன்" என்றதனைக்கடாக்ஷித்தருளிச்செய்தபடி.

---

(க) ரா-அயோ-கஙு.

மூ.—சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லைவழிகாட்ட
ஆழ்ந்தகனைமுற்றமநுபவித்து—வாழ்ந்தங்
கடியருடனே யிருந்தவாற்றை யுரைசெய்தான்
முடிமகிழ்சேர்ஞானமுனி. (௯௯)

---

இப்படி ஆசார்யர் நிர்ஹேதுகசொல்லென்று மடியைப்பிடித்துக்கேட்க, அவனும் சிலஹேதுபரம்பரைகளை இவருத்தரத்துக்கு ப்ரத்யுத்தரமாகச் சொல்லிக்கொடுபோர, இவர் தம்நாவீறுடைமையாலே அவனைநிருத்தரனாம்படிபண்ண (என்னவிடநற்றுநின்றான்) இப்படி இவரருளிச்செய்ய, மேல்போக்கடிகாணாமல் தரையைக்கீறிக்கவிழ்தலையிட்டு ஸ்தப்தனாய் நின்றான். அடாவது- அதி(யி)கோந்திசொல்லமாட்டாத வாகுலம். (அன்னுபுகழ்மாறனைத்தாஞ்சூழ்ந்து) "இது நிர்ஹேதுகமாகாதே!" என்று அவன் விஷயீகாரத்திலே நிர்ப்பந்தராய் அத்தாலே வந்தஸம்ப்ருத்த (ஐ) மானபலஸ்ஸையுடைய வாழ்வாரை, அந்தபலஸ்ஸோபாதியாகத் தானும்சூழ்ந்து - இருநற்றுநின்றான்!. ஸர்வஜ்ஞனும் நிருத்தரனாயிற்பதே!" என்று இவர்க்கீடுபாடாயிருக்கிறது. (௯௮)

---

பதவுரை.

| | |
|---|---|
| முடிமகிழ்சேர்ஞானமுனி | தம்திருமுடியிலே வகுளமாலை சேர்ந்தஞானமுனிவராகிய ஆழ்வார் |
| சூழ்ந்துநின்றமால் | தம்மைச் சூழ்ந்துநின்ற எம்பெருமான் |
| விசும்பில் | பரமபதத்தில் |
| தொல்லை வழிகாட்ட | பூர்வமார்க்கமான அர்ச்சிராதிமார்க்கத்தைக்காட்ட |
| ஆழ்ந்து அகனைமுற்றும் அநுபவித்து | அங்குள்ள இன்பக்கடலில் அழுந்தி அதனைமுழுதுமநுபவித்து |
| அங்கு வாழ்ந்து | அவ்விடத்தே வாஸம்பண்ணி |
| அடியருடனே இருந்தஆற்றை | அநந்த கருடவிஷ்வக்ஸேநாதிகளான அடியாருடன் ஆநந்த நிர்ப்பரராயிருந்தபடியை |
| உரைசெய்தான் | அருளிச்செய்தார். (௯௯) |

அவ—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு. (சூழ்ந்துநின்ற) இதில் அர்ச்சிராதிமார்க்கஸத்காரத்தை யடையக்காட்ட வநுபவித்தருளிச்செய்த ப்ரகாரத்தையநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனே யென்னில்; இவரை அமர்த்தநிலமான பரமபதத்திலே கொடு

போய்வைத்து, இவரும் தானுமாக வநுபவிப்பதாக ஸர்வேஶ்வரன் விசாரித்து, இவர்க்கர்ச்சிராதிமார்க்கத்தையும், அங்குள்ளார் பண்ணும் ஸத்காரவிஶேஷங்களையும், பரமபதப்ராப்தியையும், அங்குள்ளார் வந்தெதிர்கொண்டு ரக்ஷிக்கும் கட்டளைகளையும், தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளையும், இவர்க்குக்கண்டநுபவிக்கலாம்படி பரஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக்காட்டிக்கொடுக்க, இவரும், கட்டடங்கவற்றைக்கண்டநுபவித்து ஸாம்யபத்தேற்ற பேற்றை அநுபவமேகமாத்தாலே யருளிச்செய்கிற *சூழ்விசும்பணிமுகிலினர்த்தத்தை "சூழ்ந்துநின்றமால்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

வ்யா:—(சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லைவழிகாட்ட) கீழ் இவரைச்சூழ்ந்துகொண்டு நிருத்தராய்நின்ற ஸர்வேஶ்வரன், (க) 'ஸஷ ஸாக்ஷாத்ருதே - ஏஷ ஸாத்ருஶ்யதே' இத்யாதிப்படியே பரமாகாஶத்தில் (உ) "ஜமதக்ஸ்ராஸ்வதே-ஜகரம்ஸாய்ரதே மதே" என்று பூர்வமார்க்கமான அர்ச்சிராதிமார்க்கத்தைக் காட்ட, அமந்த்ரஜ்ஞாத்ஸவகோஷம்போலே எழும்பெறுகிற வெழுச்சியைஸூசிப்பிக்கிறமேகஸமுத்ரபே(ஹ)ரீகீதகாஹளஶங்க(ஜா)ஸீஸ்துதிகோலாஹலம் செவிப்படும்படியையும், (௩) "ஸமஜ்ஞாரவியிம்கூஸ்ரம காரயாஸேஸம்வேஸ்நு - அலங்காரவிதிம்க்ருத்ஸ்நாம் காரயாமாஸவேஶ்மந:" என்கிறபடியே அங்குள்ள ஆதிவாஹிகஸத்காரக்ரமத்தையும், மேல்நித்யஸூரிகள் ப்ரத்யுத்(கம)நராய்ஸத்கரிக்கும்க்ரமத்தையும்த்வாரத்ய(ய)க்ஷ ரக்ஷிக்கும்க்ரமத்தையும், திவ்யாப்ஸரஸ்ஸத்கார க்ரமத்தையும், ஸர்வேஶ்வரனும் பெரியபிராட்டியாரு மாதரிக்கும்படியையும், இவ்வைஸூரிபரிஷத்திலேயிருந்து ஆநந்தநிர்ப்பரராய் யநுபவிக்கும்படியையும், "தொல்லை வழிகாட்ட" என்றதிலேயிவ்வளவு மநுஸந்தித்தபடி.

(ஆழ்ந்ததனைமுற்று மநுபவித்து) அதிலேயாழங்காற்பட்டு, அவன் காட்டினவெல்லாவற்றையும் கட்டடங்கவநுபவித்து. அதாவது - "சூழ்விசும்பணிமுகில் தூரியமுழக்கின ஆழ்கடலலை திரைகையெடுத்தாடின" என்றும், "நாரணனமரைக்கண்டு கந்து நன்னீர்முகில்! பூரணபொற்குடம் பூரித்தது உயர்விண்ணில்" என்றும், "தொழுதனருலகர்கள்" என்று தொடங்கி "வழியிது வைகுந்தர்க்கென்று வந்தெதிரே" என்றும், "எதிரெதிரிமையவர்" என்று தொடங்கி "மதுவிரி துழாய்முடி மாதவன் தமர்க்கே" என்றும்

(க) ரா-யு. (உ) ச-அ-௩௩. (௩) ரா-யு-

மூ, — முனிமாறன் முன்புரைசெய் முற்றின்பம் நீங்கித்
தனியாகிநின்று தளர்ந்து — நனியாம்
பரமபத்தியால்நைந்து பங்கயத்தாள்கோனை
யொருமையுற்றுச் சேர்ந்தானுயர்ந்து. (க00)

திருவாய்மொழி நூற்றந்தாதி முற்றிற்று.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

"மாதவன்றமரென்றுவாசலில் வானவர்" என்று தொடங்கி "வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே" என்றும், "வேள்வியுள்மடுத்தலும்" என்று தொடங்கி "வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே" என்றும், "மடந்தையர்வாழ்த்தலும்" என்று தொடங்கி "குடந்தையன் கோவலன் குடியடியார்க்கே" என்றும், "குடியடியார்" என்றுதொடங்கி "வடிவுடைமாதவன் வைகுந்தம் புகவே" என்றும், "வைகுந்தம்புகுதலும்" என்றுதொடங்கி "வைகுந்தம் புகுவதுமண்ணவர்விதியே!" என்றும், "விதிவகை" என்று தொடங்கி "மதிமுகமடந்தையரேந்தினர்வந்தே" என்றும், "வந்தவரெதிர்கொள்ள மாமணிமட்டபத்தந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும், இப்படி முழுதுமநுபவித்தபடியென்கை.

(அநுபவித்து வாழ்ந்து) இவ்வநுபவத்தையடைவே யநுபவித்து க்ருதார்த்தராய். (அங்கடியருடனே யிருந்தவாற்றை யுரைசெய்தான்) பரமபதத்திலே ஆநந்தமயமான திருமாமணிமண்டபத்திலே அநந்தகருடவிஷ்வக்ஸேந ப்ரமுகராயுள்ளவடியாரோடே ஆநந்திநிர்ப்பரராயிருந்த ப்ரகாரத்தை யருளிச்செய்தார். (முடிமகிழ்சேர்ஞானமுனி) * முடியுடைவானவரோடே கூடுகையாலே முடியையுடையராய் ப்ரபந்தம்தலைக்கட்டுகையாலே ஆழ்வாரும் அளகபந்தத்திலே வகுளபந்தத்தையுடையராய்த் தலைக்கட்டினபடியை யருளிச்செய்கிறார். அவன் * மதுவிரிதுழாய் முடிமாதவன், இவர் - முடிமகிழ்சேர்ஞானமுனி; பரஜ்ஞாநத்தையுடைய பராங்குசமுனியானவர். (அடியருடனேயிருந்த வாற்றையுரைசெய்தான்) * சூழ்விசும்பணிமுகில்தொடங்கி "அடியரோடிருந்தமை" என்னுமளவுமருளிச்செய்தார், எல்லாரும் விஸ்வஸித்து உஜ்ஜீவிக்கைக்காக. (கக)

---

பதவுரை.

முனி — மநநசீலரான
மாறன் — ஆழ்வார்

| | |
|---|---|
| முன்பு உரைசெய் | முன்புதாம் பேறுபெற்றதாக அருளிச்செய்த |
| முற்றின்பம் நீங்கி | இன்பம் முழுதும் நீங்கி |
| தனி ஆகிநின்று தளர்ந்து | தனிமையாய் நின்றுவருந்தி |
| கனிஆம் பரமபத்தியால் நைந்து | அதிசமாகவிளைந்தபரமபக்தியினால் பரிபக்வராய் |
| பங்கயத்தாள்கோனை | ஸ்ரியஃபதியை |
| ஒருமையுற்று உயர்ந்து சேர்ந்தான் | திருவுள்ளத்தாலே ஒருமைப்பட்டு அத்தாலே நித்யஸூரிகளுடைய உயர்வையுடையராய் ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரமாம்படி கிட்டி இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்யப்பெற்றார். (க௦௦) |

அவ.—நூறும்பாட்டு. (முனிமாறன்) இதில், பரமபக்தியாலே பரப்ராப்தியானபடியைப் பேசின பாசுரத்தை அநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ் * சூழ்விசும்பணிமுகிலிலே - பரமபதத்திலே புக்கு நிரதிஶயாநந்த யுக்தராய் நித்யஸூரிகள் திரளிலே யிருக்கிறாராகத் தம்மையநுஸந்தித்தவிது ஜ்ஞாநாநுஸந்தாநமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷயோக்யமல்லாமையாலே, மேருஶிகரத்திலே ஸாகோத்தரமாக விருந்தவன் பேராழமான பாதாளத்திலே தலைகீழாகத் † தள்ளுண்டு விழுந்துநோவுபடுமாபோலே, * அநந்தக்லேஶ பா (ஹா) ஜநமானஸம்ஸாரத்திலேதாமிருக்கிறபடியைக்கண்டு, ஈஶ்வரனுக்குப்பண்டுபோலே பொருகுணாவிஷ்காராதிகளால் பரிஹரிக்க வொண்ணாதபடி ஆற்றாமை தலையெடுத்து, ஒருதூத ப்ரேஷணாதிகளாலே யிட்டு நீட்டுகையுமின்றிக்கே, தாமே அவன்முகத்தைப்பார்த்து, தம்மாலிதுபரிஹரித்துக்கொள்ளப்போகா திருக்கிறபடியையும், ஸாதநாநதரங்களையநுஷ்டித்தாலும் அவன்கைபார்த்திருக்க வேண்டுகிறபடியையும் சொல்லிக்கொண்டு, பெரியபிராட்டியாரானைபிட்டுத்தடுத்தும் வளைத்தும்அவனைப்பெறவேண்டும்படி பரமபக்திதலையெடுத்துகிர்க்(வ...)ருணருடைய ஹ்ருதயங்களுங்கூட விரங்கும்படியாகவும், அவனுக்

---

† தள்ளுண்டு.

கும்தங்காரியம் செய்தல்லது திருநாட்டில் குடியிருப்பரிதாம்படியாகவும் பெருமிடறு செய்துகூப்பிட்டுப் பெரியவார்த்தியோடே திருவடிகளிலே ஶரணம்புக;பெரியதிருவடி திருத்தோளிலே பெரியபிராட்டியாரோடேகூட விவரபேக்ஷித்தபடியே ஸர்வேஸ்வரன் வந்துதோற்றி, காற்கட்டான ப்ரக்ருதி ஸம்பந்தத்தையு மறுத்து: பரமபதத்திலேகொடுபோய், நித்யஸூரிகளோடே யொருகோவையாக்கி, நித்யகைங்கர்யம் கொண்டருள; அத்தாலே தாம்நிரஸ்தப்ரதிபந்த(ஸ-)ராய்ப்ராப்தஸமஸ்தமநோரதரானபடியைச்சொல்லித்தலைக்கட்டுகிற * முனியேநான்முகனிலர்த்தத்தை "முனிமாறன்"இத்யாதியாலே யருளிச்செய்து தலைக்கட்டுகிறாரென்கை.

வ்யா.—(முனிமாறன்) ஸர்வேஶ்வரன், "முனியே" என்னும்படி ஸ(ஹ)தவஸ்தமான ஸம்ஹ்ருதிஸமயத்தில்ஸர்வசேதநரக்ஷணத்திலே *த்யாநாந்தஸ்த(ஹ)னாயிருக்குமாபோலே, இவரும்,நித்யஸம்ஸாரிகளாய்ஸம்ஸரித்துஅசித்ப்ராயரான ஆத்மாக்கள்விஷயத்திலும் ரக்ஷணசிந்தை பண்ணிப்போருகையாலே - முனியென்கிறது; அன்றிக்கே, பகவத்விஷயத்திலே * என்னாதனகளெண்ணும் நன்முனிவரென்னுதல்; அன்றிக்கே, ப்ராக்ருதத்துக்குச்சேர ஸர்வேஶ்வரன் விஷயத்திலே பரமபக்தி பர்யந்தமாக நிரந்தர சிந்தாயுக்தராயிருக்கு மவரென்னுதல்; இப்படிமநநஶீலராயிருக்கிறவாழ்வார்.

(முன்புரைசெய்முற்றின்பம் நீங்கி) அதாவது- "களிதாகிய சிந்தையனாய்க்களிக்கின்றேன்" என்றும், "விருப்பேபெற்றமுதமுண்டுகளித்தேனே" என்றும், "உண்டுகளித்தேற்கும்பரென்குறைமேலைத்தொண்டு களித்தந்தி தொழுஞ்சொல்லுப்பெற்றேன்" என்றும், {உ "கண்ணுள் நின்றகலான்" என்றும், "உற்றேனுகந்து பணிசெய்துனபாதம் பெற்றேன்" என்றும், "வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத் தந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும், இப்படி முன்புபேற்றைப்பெற்றதாக வருளிச்செய்த ஸமஸ்தாநந்தமும் நிரஸ்தமாய்ப்போய், அதெல்லாம் மாநஸாநுபவ மாத்ரமாய், ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரத்திலே அபேக்ஷையுடையராய், அத்தை அப்போதே பெறுமல் மீளவுமஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்திலே யிருக்கக்கண்டு, பூர்வத்திலாநந்தமும் பூர்வமாம்படி கழிந்ததென்கை.

(தனியாகி நின்றுதளர்ந்து) * அந்தமில் பேரின்பத்தடியரான ஸூரிஸங்கங்களுடனேயிருந்த தம்ஸ்வப்நகல்பமாய், பலாயனம்ஸாரத்தில் தனிமையே சேஷித்து, பிராட்டி, திருவயோக்யையிலே ராக ஞக்கரான பெருமானை, (௧) "பரதனும் தம்பி சத்ருக்கனனும் இலக்குமனோடு மைதிலியும்" என்னும்படி சேர்த்தியாயிருக்கநுபவித்து, பின்புபிரிந்து, (௨) "காநநாரே விஜநே விஸ்ருஷ்டா பாலேவகந்யா விலலாப ஸீதா - காந்தாரமத்யே விஜநே விஸ்ருஷ்டா பாலேவகந்யா விலலாபஸீதா" என்னும்படி தனியே நின்றுகூப்பிட்டாப்போலே, "தனியேனாருயிரே" என்று தனியாகிநின்று தளர்ந்து - மிகவுமவஸாத(*)த்தையுடையராய்த்தரைப்பட்டு.

அதாவது-'கலிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமே-மாயஞ்செய்யேலென்னை" என்றும், "மாயஞ்செய்யேல்" என்று தொடங்கி "திருவாணை நின்னாணை கண்டாய்-கூவிக்கொள்ளாய் வந்தந்தோ" என்றும், "ஆவிக்கோர் பற்றுக்கொம்புநின்னலாலறிகின்றிலேன் நான்" என்றும், "உம்பர்தண்பாழேயோ -என்னைப்போரவிட்டிட்டாயே" என்றும், "எனக்காராவமுதானாயே" என்றும், "எனக்காராவமுதாயெனதாவியை யின்னுயிரை மனக்காராமை மன்னியுண்டிட்டாயினியுண்டொழியாய்" என்றும், "கோலமலர்ப்பாவைக்கன்பாகியவென்னன்பேயோ-உன்னைப்பெற்றினிப்போக்குவனோ" என்றும், பெற்றினிப்போக்குவனோவுன்னை" என்றும், "முதற்றனியுன்னையுன்னையெனைநாள்வந்துகூடுவனநான்" என்றும், இப்படி ஆற்றாமையாலே அவஸந்நராய்க்கூப்பிட்டென்கை. (தனியாம் பரமபக்தியால் நைந்து) "அதனிற்பெரிய" என்னும்படி த்ரயங்களிலும் பெரிதாய், * முடிந்த அவாவான பரமபக்தியாலே பரிபக்வராய். தனி - பெருமை. அன்றிக்கே, "பரமபத்தியாலைந்து" என்றுபாடமாய், முடிந்த அவாவாகிறவமுதவெள்ளமான ஆநந்தஸாகரத்திலே மக்நராயலைந்தென்றுமாம். (பங்கயத்தாள்கோனை) அந்தப் பரமபக்திக்கு விஷயமான ஸ்ரிய:பதியை. 'கோலமலர்ப்பாவைக் கன்பாகியவென்னன்பேயோ- †(உன்னைப்பெற்றினிப்போக்குவனோ" என்றருளிச்செய்தவனை. உத்தரவாக்யத்தில் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியான ஸ்ரிய:பதியை) (ஒருமையுற்று) (௩) "வீடுதிருத்தி" (௪) "விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்" என்றும் (௫) "வானேதருவானெனக்காயென்னோடொட்டி" என்றும் த்வரிக்கிற ஸர்வேஶ்வரன்றிருவுள்ளத்தோடே சேரும்படி இவர் திருவுள்ளமும் த்வரித்து ஒருதலைத்தென்னுதல்; அன்றிக்கே, பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி யுக்

† குண்டலிதம் க்வாசித்கம். (௧) தி-மொ-உ-கூ-எ. (௨) ரா-ஸு உஅ-உ. (௩) க-இ-௧௦, (௪) கூகூ-ரு.

நராய்ப்பேற்றுக்குத்வரித்து அவாவாலேகூப்பிட்டுப்போந்தவிவர் திருவுள்ளமும். (க) "ஜாதஃவபரிஷ்வங்கஜ-முதிதஃபரிஷஸ்வஜே" என்னும்படி "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்று இவர் ப்ரீதிவேகம் தோன்றஸம்ஸ்லேஷிக்கையாலே அவாவற்றுவீடுபெற்ற ப்ரகாரத்தையருளும். (பங்கயத்தாள் கோனையொருமையுற்று-உயர்ந்து-சேர்ந்தான்) அதாவது - (உ) "கோலத்திருமாமகளோடுன்னைக்கூடாதே சாலப்பலநாளடியேனின்னம் தளர்வேனோ" என்கிறவிழவுதீர, ஸ்ரீயஃபதியான ஸர்வேஶ்வரனை ஒருதலைத்தபரமபக்தியுக்தராய், அத்தால் நித்யஸூரிகளுச்ரா(ஆரா)பத்தை இங்கேயுடையராய்ப்ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரமாம்படி கிட்டி, இருவருமானசேர்த்தியிலே, (கஉ) "அடிமைசெய்வார் திருமாலுக்கே" என்னும்படி அடிமைசெய்யப்பெற்றார்; அவனும், (க) "ஸுஜ்ஞஹாதஜோ ஜாதவ்யோ ஜாதஃவபரிஷ்வங்கஜ-அங்கேபாதமாரோப்யமுதிதஃபரிஷஸ்வஜே" என்று இவரைப்பெற்று ஹ்ருஷ்டனாக; இவரும், அத்தலையில் முகோல்லாஸத்தைப் பெற்றநுபவித்து ஹ்ருஷ்டரானார்; அத்தையாயிற்று "ஒருமையுற்றுயர்ந்தான்" என்கிறது. இத்தால்–'அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்" என்றத்தை நினைக்கிறது.

"ஸாக்ஷாத்கரித்த பரமப்ராப்திக்குத் தலைமிசையாய் வந்து தாள்களைப்பூண்டுபோகாமைதடுத்துத்திருவாணையிட்டுக்கூசம்செய்யாதுசெய்தபிழையற்றுக் கொம்பற்றகதிகேடுபோரவிட்ட பெரும் பழிப்புறப்புபோனால் வருமிழவு உண்டிட்ட முற்றீம்பு அன்புவளர்க்க அப்புரம் உயிருறவுமுதலளவுதுறக்கைகளாலே பெறுவானை யல்லவாக்கினபேரவாகுளப்படியாம்படி கடல்போன்ற வாதரத்தோடேசூழ்ந்த தாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார்" என்கிற ஆசார்யஹ்ருதயத்திலே நாயனாருமருளிச்செய்தது. "கண்டுகளிப்பவளவும்-பரஜ்ஞாந(ஸஹ)கர்ப்பபரபக்தி, இருந்தமையென்றது பூர்ணபரஜ்ஞாநம், முடிந்தஅவாவென்றது-பரமபக்தி. இவை ஜ்ஞாநதர்ஶந ப்ராப்த்யவஸ்தைகள்" என்றும் இந்தப்பரபக்த்யாதி பேதத்தையுமருளிச்செய்தார். "ஏவம் விதமான பரமபக்தியாலே பரிபக்வராய் ப்ரலத்தோடே சேர்ந்தார்" என்கிற திருவாய்மொழியினர்த்தத்தை இப்ரபந்தத்திலிப்பாட்டாலே ஸங்கரித்தருளினாராயிற்று. (கOO)

பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த திருவாய்மொழி
நூற்றந்தாதி வ்யாக்யாநம், முற்றிற்று.

---

(க) ரயு-கஙக, (உ) ௬க-ங (ங) ௫௦-கக.